# முருகன் பாடல்
# எட்டாம் பகுதி



தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை

யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

**ஆறு பகுதிகள் கொண்ட ஒரு தொகுதியின் விலை.**

இலங்கையில் : ரூபா 2700/-
இந்தியாவில் : ரூபா 1200/-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60/-

**பாட்டு முதற் குறிப்பு அகராதி**
**பாட்டுடைக் கோவில் அகராதி**
**பாட்டுத் தலைப்பு அகராதி**
**ஆசிரியர் அகராதி**
**என்பன**
**பன்னிரண்டாம் பகுதியில்**
**இறுதிப் பக்கங்களாக உள.**
**தொகுப்பின் பொருளடக்கம்**
**முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்**
**முன் பக்கங்களில் உள.**

**ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:**
*காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை, சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.*

# பொருளடக்கம்

## ஒன்பதாம் பகுதி

## பத்தாம்பகுதி

## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

உ

# திருமுருகாற்றுப்படை

(விருத்தப் பாக்களில்)

## பா. வேலன்

### பாயிரம்

(முருகன் அருள் வெண்பா)

திருமுரு காற்றுப் படைநூல் செலச்சொல்
அருளுடையார்க் கொண்டொடியே! ஐயன்-முருகனே,
துன்பந் துடைத்துத் தொழில்ஞானம் வீறுபுகழ்
இன்பந் தருவான் இசைந்து!

நூல் நெறி வெண்பா

மக்கட் கொடையாளர் மாட்டு புலவோர்க்குத்
தக்கவழி ஆற்றுப் படுத்தலென்ப! - மற்றுகேள்!
ஏற்ற அருட்கொடை ஈகும் முருகன்பால்
ஆற்றுப் படுத்துமிந் நூல்!

### நூல்

### 1. திருப்பரங்குன்றம்

உலகுவப்ப முருகன் அழகு

ஆழிமிசை ஆழியுடை ஆதவனங் - காலை
சூழுமிருள் போக்கிஒளி தோன்றுதயம் - போலே,
மாழைமணி செவ்வொளியின் வண்ணமிளிர் - கோலா!
வாழி! கடல் நீலநிற மஞ்ஞையமர் — வேலா! 1

முருகன்தகை

அற்புடையார் அறியாமை அகற்றுமுரத் தாளன்,
அவுணரைமுற் றழித்தஇடி என்றடர்பேர்க் கையன்,
கற்புடையாள் தெய்வானை தழுவுகின்ற கேள்வன்,
கடல்நீரை முகந்தகரு மேகங்கள் கூடி,
மற்றுடைவாள் வீச்சன்ன மின்னிடித்துப் பெய்ய,
வளர்குளிர்ச்சிக் கானில்விரிந் திருள்செய்க டம்பின்
பொற்புடைமால் வட்டமலர் கொண்டிணைந்த மாலை
புரள்கின்ற வனப்போங்கி ஒளிவீசும் மார்பன்! 2

அணிபணிகள் பூண்ட மகளிர்

நிவந்தவேய் நிறைந்த வெற்பில் நிரல்மணி சதங்கை பூண்ட,
சிவந்தசீ றடிகள் கொண்ட, திரண்டமென் கால்அ மைந்த,
கவர்ந்தகோ டிடையும், மூங்கிற் கணுபருத் தன்ன தோளும்,
அவிர்ந்தசீர் சாயந் தோய்ந்த ஆடைகள் அணிந்த வாறும், 3

விறன்மணி வடங்கள் கோத்த மேகலை அரையில் மின்ன,
திறன்மணிக் கரங்கொண் டாற்றாத் தென்னுறு நாவ
லம்பொன்
நிறைவயங் கிழைய ணிந்த நீள்ஒளி பாய்மெய் யார்தம்
அறல்மய ஈரக் கூந்தல் அவிழ்த்துறச் சகிமார் கோதி. 4

மகளிர்க்குத் தோழிமார் அழகு செய்தல்

செங்காம்பின் வெட்சிமலர் சீரிதழ்கள் சேர்த்தணைத்தும்
பைங்காம்பின் குவளைமலர் பட்டிதழ்கள் கிள்ளிவைத்தும்
தங்கநகை திருவுத்தி வலம்புரியும் தலைச்சுட்டி
பொங்குசுறா மீன்வாய்ப்பூண் பொட்டுநுதல் மிசைபடிய, 5

முடித்தபெருங் கொண்டையினில்
முகிழ்த்தசண் பகஞ்சொருகிப்
பிடித்தமலர் மருதிணரால்
பேரழகாய்ப் புனைந்தட்டி
எடுத்தசெய அரும்பிணைந்த
எழில்பிணையல் வளைத்தார்த்தும்
வடிப்பமவிர் பிண்டிதளிர்
மணிச்செவிநின் றுரத்தசைய, 6

வேறு

தாங்கிய வைரம் பாய்ந்த சந்தனக் கட்டை தேய்த்தத்
தேங்கமழ் கலவை கொண்டு தெய்வத மகளிர் தம்மின்
கோங்கின தரும்பை யொக்கும் குவிந்திள முலைமீ திட்டு
வேங்கைமென் மலர்நுண் தாது மேலப்பி அழகு செய்தார். 7

மகளிர் விளையாட்டு

பயந்தரு அணங்கு மாதர் விளாத்தளிர் பறித்தோச் சாடிச்
செயந்தரு வீரக் கோழி திகழ்கொடி நீடு வாழ்க!
நயந்தென வாழ்த்தொ லிக்கும் நாதங்கள் மலைக ளெல்லாம்
உயர்ந்தெதி ரொலிக்கக் கூத்து உளங்கிளர்ந் தாடும் சோலை! 8

நெடுவேலன் செயல்

மந்தி ஏற ஒண்ணாத
உயர்ந்த மரங்கள் மலைகளிலே,
மந்தி மொய்க்காத் தீவண்ண
மலர்செங் காந்தள் தலைமாலை,
சிந்தை மகிழ அணிந்தவனாய்,
திண்மைப் பாறைப் பனிக்கடலுள்,
சிந்தை அஞ்சப் புக்கசூரன்
சிதையத் தடிந்த நெடுவேலன்! 9

பேயாட்டம்

வறண்டு காய்ந்த தலைமயிரும்
வரிசைக் கடங்காக் கொடும்பல்லும்,
திறந்த, நாறும் பேழ்வாயும்,
செழுமைப் பசுங்கண், சுழல்விழியும்,
செறிந்த அச்சம் தருநோக்கும்,
செவிதூங் கரவம், கூகைஅலை
விறைந்த, பெரிய கொங்கைகளும்
விரிந்த வயிறுங் கொள்பேயாள்! 10

வெருவத் தக்க நடைபயின்று
விரலின் கூர்மை நகத்தால்,கண்

திருகித் தோண்டித் தின்றதினால்,
தீரா நாற்றக் கருந்தலையை,
மெருகு வளையல் அணிகையால்
மேலே ஏந்தி, நிணம்தின்வாய்,
செருவைப் பாடித் தோளாட்டித்
திண்கை முடக்கி அடித்தாடும்! 11

அவுணனை அழித்த சேயோன்

இருவகை உருவில் தோன்றும் ஒருபெரும் யாக்கை சூரன்
வெருவிட நெருங்கிச் சென்று விறலினை அழியச் செய்வான்
மருமலர் இணர்கீழ் நோக்கும் மாமரத் தவுணன் தன்னைப்
பெரும்புகழ் சேரக் கொய்த பிறங்கிய ஒளிவேல் சேயோன்! 12

வேண்டுதல் நிறைவேறும்

செவ்விய தாள்வ ணங்கும் திறந்த அன் பெழுச்சி கொண்டும்,
ஒவ்விய அறப்பண் போடும் உவந்துறை இடங்கள் தோறும்,
திவ்விய மாய்ப்போய் வேண்டின் திண்ணம்நின் விருப்பம் கூடும்!
எவ்வமின் றின்னே துய்ப்பாய் இனியநல் வினைஇன் பெல்லாம்! 13

திருப்பரங்குன்றின் அழகிடம்!

செறுநரை அழைக்கும் செருக்கொடி பறக்கும்
பந்தொடு பாவையும் தொங்கும்!
தறுகண்மை அற்ற செருநர்பொ ராத
தகைமையின் காண்தரும் வாயில்!
நிறைதிரு மங்கை நிலையுற வைக,
நேர்மையின் வாணிபத் தெருக்கள்,
குறைவற நெடிய மாடங்கள் நிறைந்த
குளிர்பொழில் மதுரையின் மேற்கே! 14

பொதும்பரின் பழனச் சேற்றிடை முளைத்துப்
பூத்ததண் டாமரை தோன்ற,
விதும்பிய அரிகள் மொய்த்துற இராக்கண்
டம்புசம் குவிந்திடத், தூங்கி,

மிதம்விடி காலைப் பரிதிதொட் டவிழ்ப்ப,
விழித்தெழல் எனஅவை பறந்து,
ததும்பிய நெய்தல் மலர்மிசை ஆர்க்கும்
தனிப்பரங் குன்றமர் முருகோன்! 15

## 2. திருச்சீரலைவாய்

(திருச்செந்தூர்)

கூரிய தோட்டி அழுந்திய தழும்பு
கூடிய புள்ளிகொள் நுதல்மேல்
சீரிய வாடாத் தெரியலும் அசைய,
சிலம்பிட இருபுற மணிகள்,
வீரிய நடைகொள் கூற்றுவன் நிகர்த்த
விலக்குதற் கரியவெல் விறலாய்,
சூரியிற் காற்று மூண்டெழல் அனைய
போக்குடை வேழமூர் முருகன்! 16

கிம்புரி, பதுமம், கேடகம், மகுடம்,
தாமமென் றைவகைத் திறனால்,
அம்பிறங் கினிது முற்றிய மின்னென்
றவிர்பல மணிமுடி விஞ்சச்
செம்பொலங் கொண்டு செய்செவி குழைகள்
திங்கள்சூழ் மீனெனத் திகழ,
வம்பறு கொள்கைப் புங்கவர் மனத்தில்
வந்தெழுந் தொளிர்அறு முகனே! 17

### ஆறுமுகங்களின் அருஞ் செயல்கள்

ஒருமுகம திருளொழிய கதிர்தருவ - தியலே
ஒருமுகம தடியர்உய வரமருள்வ - தியலே
ஒருமுகமொண் மகம்புரிஅந் தணர்க்கருள்வ - தியலே
ஒருமுகமெய்ப் பொருள்களுரை விளக்குநில - வியலே
ஒருமுகம்வன் பகையழியச் செருச்சினம - தியலே
ஒருமுகமென் கொடியிடைவள் ளியொடுமகி - ழியலே
ஒருமுகமாய் உளமுருகி அழுவர்தமக் - கியலாய்
ஒருமுகமாய் இரங்கிஅக மகிழவரு - முருகா! 18

### பன்னிரு கரங்களின் திருச்செயல்கள்

விசும்பேகும் முனிவோர்தம் அரணோம்பும் - ஒருகை,
விறல்கொண்ட இடைவைத்த திணையான - ஒருகை,
இசைவாகச் செயஆடைத் துடைமேல - தொருகை,
இபம்போக்கங் குசங்கொண்ட இணையான - ஒருகை,
திசையாவும் சுழன்றாடும் அயில்கொண்ட - தொருகை,
தெறுவாள்வேல் தடுத்தாள்கே டயங்கொண்ட - தொருகை,
பசைஞான ஒளியாம்முத் திரைகாட்டும் - ஒருகை
பரப்பாகம் புரள்தாமம் பிடித்துள்ள - தொருகை! 19

இகல்வீழ்கங் கணங்கொண்டு சுழல்கின்ற - தொருகை
எடுநாத மணியோசை ஒலிப்பிப்ப - தொருகை,
அகல்வான மழைமல்லல் பெயவைப்ப - தொருகை,
அரமாதர்க் கலர்மாலை அணிவிப்ப - தொருகை,
திகழ்கின்ற முகமாறின் செயற்கேற்ப - இயலாய்
திருத்தோள்கள் பனிரண்டும் தொழிலாற்றும் -
இயலோய்!
மகிழ்கின்ற முகந்தோன்ற திருச்செந்தில் - இருந்தே
வரையற்ற அருள்செய்யும் நிலைபெற்ற - முருகா! 20

### திருச்செந்தூர் அமர்ந்த செவ்வேள்

உம்பர்பல் லியம்மு ழங்க ஊதுகொம் புகளி சைப்ப,
இம்பர்வெண் சங்கொ லிக்க, இடியென முரசி யம்ப,
அம்பொறி மஞ்ஞை வெற்றிக் கொடிமிசை அகவ, விண்வாய்
செம்புவி பராவச் சென்று திருச்செந்தில் அமர்ந்த செவ்வேள்! 21

## 3. திருவாவினன்குடி

## ( பழனி )

### முருக னன்பர் நிலை

மரவுரி தைத்த உடுக்கையர், சீர்த்த
வலம்புரி சங்கென வெள்ளை
நரைமயிர் கொண்ட முடியினர், மாசில்
நல்வடி வுருவினர், மான்தோல்

உரிவையைப் போர்த்த என்புடை கூட்டின்
உடலினர், பல்பகல் உண்ணா
விரதங்கள் நோற்போர் முரணுடை காமம்,
வெகுளியும் நீக்கிய மனத்தர்! 22

கற்றவர்க் கறியா அறிவினர், கற்றோர்
தமக்கொரு தலைமையர், அவாவும்
முற்றிய சினமும், முற்றிலும் அவித்த
முத்தர்கள், பருவரல் அறியா
நற்றவத் தாய இயல்பினர், வெறுப்பும்,
நயத்தலும் நீக்கிய முனிவர்,
உற்றஉள் அன்பில் உவப்பொடு நாடி
உடன்தொழ முன்னுறச் செல்வார்! 23

கந்தருவர் யாழ்மீட்டல்

புகைமுகந் தன்ன அழுக்கறு தூய
பூந்துகில் ஆடையும் தரித்தும்
முகைமுகிழ் பூவால் முடிந்தகொங் கலங்கல்
மோகன மார்பினில் தவழ,
தகையுறு செவியால் சுரஇசை அளந்து,
தக்கவார்க் கட்டிய யாழில்,
வகையுறப் பயின்ற நயனுடை மனத்தின்,
மென்மொழி இயல்பினர் மீட்ட. 24

கந்தருவ மகளிரொடு ஆடல்பாடல்

நோய்நொடி எதிர்க்கும் ஆற்றல்கொள் உடலர்,
நுண்மையின் மாந்தளிர் நிறத்தார்,
ஆய்தொறும் பொன்னின் அவிர்ஒளி யன்ன
அமைந்திடு தேமலின் அழகர்,
ஏயிழை யாம்மின் மேகலை அணிந்து
இவர்ந்திழிந் தசைவுறு அல்குல்,
ஆயமென் மேனி மகளிரொ டிணையாய்
ஆடியும் பாடியும் பொலிவார்! 25

திருமால்

நஞ்சும், துளையும் கொண்டவெண்பல்,
நடுங்கச் சீறும் அனல்மூச்சு,
விஞ்சு படங்கொள் நாகத்தை
வீயப் புடைக்கும் வரிவளைந்த
மிஞ்சு திறலின் சிறகுடைய
கருடன் விளங்கும் நீள்கொடிகொள்
கஞ்ச மலரின் செங்கணுடை,
காக்கும் தொழிலோன் திருமாலும்! 26

முக்கண்ணன்

வெள்ளை மாட்டை வெல்களத்தில்
உயர்த்திப் பிடித்த விறல்தோளும்,
கள்ளின் மலர்சூ டுமையவள்தான்
கருதிக் கொண்ட இடப்பாலும்
ஒள்ளும் இமையா முக்கண்ணும்,
உடையோன் வல்ல ஒன்னலர்தம்
வள்ள மூன்று மதில்களையும்
அழித்த வலிகொள் அரனாரும்! 27

தேவேந்திரன்

பத்து நூறு கண்ணுடையான்,
பலநல் வேள்வி முடித்ததினால்,
மெத்த வீறும் விறலுடையான்!
விளங்கு நான்கு கொம்புடைய
மத்த கமசை நடையோடு
மாக்கை தாழ ஆடிவரும்
அத்திப் பிடரில் அமர்ந்தவனாய்
அழகோ டுலாவு புரந்தரனும். 28

நான்முகனைத் தவிர்த்தல்

நான்முகன், திருமால், உருத்திரன், போகி,
நாற்பெரு தெய்வங்கள் தம்மின்

வான்முகம் நிவர்ந்த நகரங்கள் நிலைப்ப,
வையகம் காத்திடும் கொள்கை
தான்மிகக் கொண்டு, நான்முகன் தவிர்த்து
மூவரும் தலைவராய் உகந்து,
மேன்மைய துலகில் மேவினர், படைக்கும்
வினைத்தொழில் அவன்வயம் விட்டே! 29

முருகனிடம் குறைஇரக்கப் போதல்

வடுவிலா அறிவு மலர்ந்தமுப் பத்து
மூவரும் பதினெண்மர் தாமும்,
உடுவெனத் தோற்றம் உடையவ ராயும்
உவரிநின் றெழுந்தகாற் றென்னக்
கடுவிரை வாகச் செல்பவ ராயும்
காற்றொடு தீயெழுந் தன்ன
அடலின ராயும் அழல்உற இடித்த
இடியெனும் குரலின ராயும். 30

மிகையவை பொறுக்க, குறையவை இரக்க,
வேண்டிவந் தடியிணை தொழவே,
வகையொடு சூழ்ந்து வான்வழி போந்து
விரைவொடு காணுதற் பொருட்டே,
நகைமுகத் தெய்வக் கற்பினள், தேவ
நாரிய ளோடணைந் துள்ளம்
மகிழ்வுறத் திருவா வினன்குடி சின்னாள்
வந்துறை நிறைதரு முருகோன்! 31

## 4. திருவேரகம்

(சபரிமலை, குருமலை)

அந்தணர்க்கருளும் முருகன்

அறுவகைக் கடன்வ ழாத ஆதிநற் குடிப்பி றந்தும்
பெறுஉறை நாற்பத் தெட்டும் பெருநெறி ஒழுகிப் போக்கி,
அறன்நவில் நூல்கள் ஆற்றில் அக்கினி மகம்மூன் றோம்பும்
இறைதொழும் பொழுத றிந்த இருபிறப் பாளர் என்போர். 32

நன்மடி யொடுநீ ராடி, நயந்தரைக் கசைத்து மார்பில்
ஒன்பதாய் இழைகள் சேர்முன் றொண்புரி நூல்த ரித்துத்
தம்கரம் தலைமேல் கூப்பிச் 'சரவண பவ'என் றோதி,
இன்மலர் தூவிப் போற்ற ஏரகம் அமர்ந்த செவ்வேள்! 33

## 5. குன்றுதோறாடல்

### வேல்பிடித்தவன் வெறியாட்டம்

இளங்கொடியால் சாதிக்காய் இடைஇடையே தொடுத்திட்டு,
விளங்கியதக் கோலக்காய் விரவிஅமைத் தியைந்திணைத்தே
உளங்கவரும் வனமல்லி, வெண்டாளி உடன்பிணைத்த
துளங்கியகை வேல்பிடித்த கண்ணிமிளிர் தோற்றத்தான்! 34

வாசநறுஞ் சந்தனந்தோய் வண்ணநிற மார்பினராய்
நாசசரம் விற்றொழிலின் நாயகராம் வேடரொடும்,
நேசமுறும் குன்றம்வாழ் கிளைஞரொடும் நிறைதேறல்,
ஆசையொடுண் டுவந்துபறை அறையக்கூத் தாடலுற்றான். 35

### வண்ண மகளிர்

விரல்படவே மலர்ந்த,சுனை விரிந்தமலர்க் கண்ணியொடு
நிரல்படவே புனைந்ததொடை, நெரிந்தகுழல் சடைமுடித்து,
வரம்பிடையே இடைவைத்து மருகடம்ப மலர்க்கொத்தைத்
தரம்படவே முடித்தகுல்லைப் புல்லினொடு சார்ந்திணைந்தே!
36

வண்டிமிர்ந்து வந்துண்ணும் வகையினிலே தொடுத்தபெரும்
தண்தளிர்த்தார் கைத்திறனால் சமைத்தவடம் ஆர்த்த அரைக்
கண்,திகழ விசித்தசைய கண்ணொளிரக் களித்தணிந்த
ஒண்திருநீல் மஞ்ஞைநடை ஒக்குமக ளிரொடாடும். 37

### மகளிரொடு ஆடும் முருகன்

செயக்காழகன் செயமேனியன்
 செயலைப்பனித் — தளிர்பூண்
வயக்காதினன் கழல்காலினன்
 வனைகச்சினன் — முடிமேல்

நயக்கண்ணியன் குழல், கொம்புகள்
நயந்தூதுவன் — இனிதாய்,
வியக்கத்தகு குறும்பல்லியம்
இசைக்குந்திற — விறலோன்! 38

தகர்வாகனன் மயில்வாகனன்
தனித்தோன்றுயர் — நெடியோன்,
புகர்நீங்குநன் மணிச்சேவலம்
புனிதக்கொடி — உடையோன்
அகல்தோளினில் தொடிகங்கணம்
அணிந்தேவரும் — அழகோன்!
புகழ்யாழிசை எனஇன்மொழி
புகல்நங்கையர் — நடுவில். 39

பொலிகச்சைகொள் நறுந்தென்இடை
நிலந்தோய்துகில் — புனைந்தோன்
வலிகச்சைகொள் முழவின்தடக்
கரந்தாங்கிய — வணமாய்,
மெலிதோளுடை பிணைமாதரை
விருப்பாய்அணைந் — திருத்தி,
மலைதோறுநின் றினிதாடிடு
மயமானவன் — முருகோன்! 40

## 6. பழமுதிர்சோலை

பலியிட்டுப் பூசைபோட்டு விழாக்கொண்டாடுதல்

தினையோடு பூக்கள் கலந்தாட்டுக் குட்டி
செகுத்தேப டைத்து — வெறியாய்த்,
தனியான கோழிக் கொடிபக்கம் வைத்துத்
தவழ்ந்தாடக் கட்டி — நிறுத்திப்
புனைதோர ணங்கள் பொலிபண்டி கையைப்
புரிஊர்கள் தோறும் — வருவான்,
நனிஆர்வ லர்தம் புகழ்,வாழ்த்து கேட்டு
நயந்தோடி வந்தங் — கருள்வான்! 41

வேற்கொண்டு சுற்றி மறங்கொண்டு சீறி
வெறிகொண்டு துள்ளும் — களத்தும்,

மேற்கொண்டு காட்டில், பொழில்,ஆற்று மேட்டில்,
விரிஆற்றின் நாப்பண் — குளத்தும்,
நாற்சந்தி எங்கும் முச்சந்தி அங்கும்,
கடம்பின் தண்நீழல் — நயந்தே,
ஏற்புள்ள மன்றில் ஆர்அம்ப லத்தும்
எழுநட்டக் கண்ணும் — எழுவான்! 42

தலையாகி நின்ற பெருங்கோழி வண்ணக்
கொடியோட மைந்த — தகையாய்,
கலையான நெற்றி அதன்மேலும் நெய்,வெண்,
கடுகப்ப வைத்துக் — கதியாய்,
நலமாய்வெவ் வேறு நிறஆடை பூண்டு
நறுங்கையில் செந்நூல் — விசித்தே,
மலர்தூவி தூய மறைஓதி, ஓதி
வழிபாடு செய்து — தொழுவார். 43

ஆட்டுக்க டாவின் துவர்வண்ணச் சோரி
அதனோடு வெள்ளை — அரிசி
போட்டுக் கலந்து பலியாய்ப்ப டைத்துப்
பொரியைச் சொரிந்து — பரிவாய்,
நாட்டங்க லந்து பசும்மஞ்ச ளோடு
நறுஞ்சந்த னத்தைத் — தெளித்தே,
மூட்டக்க ளித்து கணவீர மாலை
முறைதொங்க விட்டு — முடிப்பார்! 44



செறிந்தோங்கும் ஓங்கல் இடைவாழும் ஊர்கள்,
'பசி' வாட்டம், தெவ்வும் — பிணியும்
உறல்நீங்கிக் காரின் வளமோங்க வாழ்க
உயர்ந்தென்று வாழ்த்து — வழுத்தி,
நறுந்தூபம் காட்டி மணப்பூக்கள் தூவி
நலிவேகப் பூசை — நடத்திக்
குறிஞ்சிப்பண் பாடி இயங்கள்மு ழங்க,
குரவைக்கூத் தாடி — மகிழ்வார்! 45

**வேறு**

அருவியின் ஒலிதன் னோடும் அரியஇன் னியங்கள் ஆர்ப்ப,
வெருவற ஆட்டுச் சோரி விரவிய தினைப ரப்ப,

மருமலர் தூவத், தெய்வம் மறுப்புநர் அஞ்ச, வேடர்
குறமகள் பறையைக் கொட்டக் குமரனை வரவந் தித்தார்! 46

ஆடுவார் கொம்பை ஊதி அருமணி ஒலிக்கச் செய்வார்
பீடுமா புறங்காட் டாத 'பிணிமுகம்' வாழ்த்து ஆர்ப்பார்,
நாடுவார் வேண்டி யாங்கு நண்ணுவார்க் காண்டாண் டெங்கும்
கூடுமா றருள்வான் வைகும் குமரன்யான் அறிந்த வாறே! 47

### நக்கீரப் புலவர் வேண்டுகோள்

யானவில் இடங்க ளேனும் எந்தமற் றிடங்க ளேனும்
தானெதிர் கண்முன் காணின் தன்முக னமர்ந்து நோக்கி,
மானசம், வாயால் ஏத்தி வாழ்த்துவை! தொழுது கூப்பித்
தேனயத் தாளைச், சென்னி செறிவுற வணங்கு வாயே! 48

### முருகன் தோற்றம்

நீள்பெரும் இமயக் கோட்டில் நீலப்பைஞ் சுனையில் அங்கு,
சூழுமைம் பூத்த தொன்றாம் சுடுநெருப் பேந்தி உய்ப்ப,
வாள்அருட் கண்ணார் ஆறு வனிதையர் பெற்ற ஆறு
கேழரு முகங்கள் கொண்ட கேள்வனாய்த் தோன்றும்
செல்வா! 49

### முருகன் பெருமை

ஆலமர் அரன்பு தல்வா! அந்தணர் மறைமு தல்வா!
மால்வரை இமவான் பெற்ற மலைமகள் உமையாள் மைந்தா!
நூல்களுட் பொருள்கு ணாளா! நுண்ணிதின் அறிந்தோர்
போற்றும்
வேல்உறு தடக்கை சீலா! வெற்றிசேர் துர்க்கை பாலா! 50

கடம்பஒண் மாலை மார்பா! காளிதன் சீர்க்கு ழந்தாய்!
அடும்பகை கூற்றே! வானோர் அடிதொழும் விற்போர் வீரா!
கொடுஞ்சமர்த் தொழிலின் ஒப்பில் கொற்றவா! வெற்றி மள்ளா
மடப்பிடி, வள்ளி, மார்தம் மனக்கினி தன்பின் கேள்வா! 51

ஆண்மையின் சிங்கம் போன்றோய்! அரக்கனாம் கிரௌஞ்சம்
கீழ்த்தத்
தோண்மையின் குன்றா வண்மை சூழ்மலைக் குறிஞ்சிக்
கோவே!

கேண்மையின் பல்லோர் போற்றும் கீர்த்திநன் மொழியின்
ஐயே!
ஏண்மைதொன் மரபில் வந்த இனியபேர் 'முருகா!'
என்கோ? 52

விழைவர்க்கு விழைந்த வாறு வேண்டருள் தரும்பே ராளா!
குழைவர்க்குக் குழைந்தவாறு கொடுத்தருள் பொற்பூண் சேயே
மழவர்தம் போர்க்க டந்த மார்பணைத் தளிக்கும் வள்ளால்!
விழுமியர் பல்லோர் ஏத்தும் விழுப்பெயர் 'வேலா'
என்கோ! 53

"சூரபன் மன்தன் சார்ந்த தொல்குலம் அறத்த டிந்த
வீரவன் மொய்ம்பின் மல்ல! வீறுபோர்த் தொழிலில் வல்ல!
தீரவிண் தலைவா! என்கோ!" எனத்திறம் செப்ப ஒல்லேன்,
சீரளந் துரைக்க, மற்றும் செகத்துமன் னுயிர்கட் கொல்லா!
54

நன்னய விழாக்க ளத்தில் கூளியர் நலமாய்த் தோன்றி,
"நின்னொடு நிகர்த்தார் இல்லா நிறைபுல வோய்!என்
றோதி,
இன்னவன் இரங்கத் தக்க இரவலன் நயந்து வந்தோர்க்
கின்னருள் நல்காய் வேல!" என்றருள் வேண்டிக் கொள்வார்!
55

வேறு

இவ்வளவில் நல்லனவும் இனியனவும்
மீக்கூறி ஏத்து ரைப்ப,
அவ்வளவில் தெய்வச்சீர் அமைந்துநெடு
துயர்ந்தவான் அளாவி நின்ற
திவ்வியவல் வடிவத்தால் தியங்கச்சம்
உறாவண்ணம் தெய்வத் தோற்றச்
செவ்வியபேர் ஒளியடக்கிச் சீரிளமை
நலங்காட்டித் திகழா நின்றே! 56

"அஞ்சற்க! அளிப்பேற்க! அருள்வேண்டி
இங்கணைந்த உன்றன் அன்பு
நெஞ்சத்தை அறிவேன்!" என் றுனக்குவந்து
நேர்ந்துரைப்பான், நீல்நீர் சூழும்

எஞ்சியமண் உலகத்தில் ஏற்றஒரு
வனாய்மிளிர, எய்தற் கொண்ணா
விஞ்சியஒண் பரிசிலிடும் விழுமியோன்
யாவனெனின் விளம்பக் கேண்மின்! 57

பழமுதிர் சோலையில் பாயும் அருவி

நீரின்மேல் கொடிகள் என்ன நிமிர்ந்தபல் பொருள்கொண்
டேகும்,
ஆரம்வேர் பெயர்ந்து ருட்டி, அகில்பல சுமந்து, சாய்ந்த
வேரல்பூங் கிளைநொ றுங்க, வெறிஇறால் சிதைய, வாழைத்
தாரொடு சாயத், தென்னைத் தலைகுலை உதிரப் பாயும்!
58

ஆசினிச் சுளைக லக்க, ஆர்மிள கலர்கொத் துக்க,
மூசுவண் டொடுபூ நீந்த, மோட்டுக்கல் புரளப் பேர்த்து,
மாசிலம் புன்னை வாச மலரெலாம் சிதறத், தந்தம்
தேசுடை மணி,பொன் தூசி செறிந்துகங் கொதுக்கிப்
பாயும்! 59

ஊகமொ டாண்கு ரங்கும் அணைக்கமெய் உதற வாடும்,
தோகையொ டுரஞ்சேர் பெட்டை, கோழிகள் துளங்கி ஓட,
மேகமைக் கரடி, பன்றி மிரண்டிவை குகையொ டுங்க,
நாகமும், பிடியும் வாடைக் காற்றினால் நடுங்கப் பாயும்! 60

செழுமிய கருங்கொம் புள்ள திறல்பசு, காளை கத்த,
கெழுமிய மலையி னூற்றில் கிளம்புநீ ரோடை பாய்ந்து,
விழுமிய அருவி யாகி, விரிந்தநீர் வீழ்ச்சி யாக,
இழுமென இழிந்து பாயும் எழில்பழ முதிர்தண் சோலை!
61

**வேறு**

இப்பரி சாய்ஒளிர் இன்னறுஞ் சோலைக்
கப்பரி சாற்றுப் படுத்தஅ றைந்தேன்!
செப்பரி தாகிய செல்வக்கு மாரன்
ஒப்பரி யோனம் மலைகிழ வோனே! 62

## 7. முருகப்பெருமானுக்கு

## நூலாபிஷேகம்

### அருள் முருகன்

கார்மலிந்துயர் தேன்பொருள்தினை
கனிவளந்தரு — குறிஞ்சிவாழ்,
ஏர்மலிந்தலர் தாதவிழ்தொடை
ஏந்துரத்திலங் — கிறைவனே!
கூர்வலப்படை ஆணவத்தலை
கொய்துதாங்கெறும் — குமரனே!
ஆர்வலர்தொழு தர்ச்சனைசெய
அன்பினால்அருள் — முருகனே! 1

பெம்மான்சிவன் புதல்வன்பிறங் கதிகன்குகப் - பெருமான்,
அம்மான்எழில் அரிநாரணன் அவனின்திற - மருமான்
செம்மான்அருங் கொடிவள்ளிகண் செறிந்தோன் அருள் நிறைந்தோன்
அம்மா!இவன் அருளென்பதை அடையார்உயல் - அடையார்! 2

### ஞானவேல்

முருகன்திரு கரவேற்கிரு முதன்மைத்தொழில் - உளவாம்!
ஒருவன்தனக் குறுமும்மலம் ஒறுக்கும் அருட்-செயலாம்,
பெருமம்மரை அறுத்தேபெரு ஞானந்தரும் - செயலாம்!
அருமைத்தனிச் சுடர்வேலதன் அறனோச்சிடும் - அரசாம்! 3

### மறவேல்! திறவேல்! கரவேல்! அறவேல்!

'மறவேல்'என உரைக்கும்மறம் மடிக்கும்வய - மறவேல்!
'திறவேல்பழி சொலும்வாய்'எனத் திருத்தும்நயத் - திறவேல்!
'கரவேல்'எனக் கயமைக்குணம் கடிந்தேதெறும் - கரவேல்!
'அறவேல்'என அனைவர்க்கடி அபயந்தரும் - அறவேல்! 4

### வேலாயுதா!

நாலாயிரம் பேர்ஏத்துவர் நாளாலயம் - முன்னால்,
சீலா! உத வாய்நூயுரத் தாளாம்புசச் - சேயா!
பாலா! இதம் ஆற்றாய்நிறை பாலாபிசெ - கா! வா!
வேலாயுத! கோலாகல வேளாசலத் - தேவா! 5

### தனிவேல்!

சிலைநோக்கினில் உனைநோக்கிடும் சிறுநோக்குநர் - எனினும்
கலைநோக்கினில் திறனோக்கியும் கருத்தோருநர் - எனினும்
பலநோக்கொடு விழிநோக்கிடப் புலனாற்றுநர் - எனினும்
நலநோக்கிவந் தடிதண்டனிட் டவர்க்கேற்றருள் - தனிவேல்! 6

### இரும்புவேல்! வெள்ளி வேல்! தங்கவேல்! வஜ்ஜிரவேல்!

சூழ்ந்துநிற்கும் துன்பம், தெவ்வர் தூள்செய் கூரி-ரும்புவேல்!
வீழ்த்தநிற்கும் அச்சம்நோய்கள் வேரறுக்கும் - வெள்ளிவேல்!
தாழ்த்தவைக்கும் காமம்கோபம் சாய்த்துயர்த்தும் - தங்கவேல்!
வாழ்த்தவைக்கும் பக்திஅன்பு மல்லல்சேர்க்கும் - வஜ்ரவேல்! 7

### தண்டபாணி

தண்டங்கொண்டு சூரன்கீழ்த்தத் தாங்கிக்கொண்ட -
தண்மையால்,
தண்டமாக மஞ்ஞை ஊர்தி, சேவற்கொடியும் - தாங்கினாய்!
தண்டமூன்றிக் கிழவ னாகத் தையல் வேட்ட - சாகசா!
தண்டபாணி தெய்வ மெங்கள் சாதுசெட்டி - ஆண்டியே! 8

### வேலையா!

வேலைமிசை காலைக்கதிர் அன்ன குகன் - காணாய்!
வேலையென வேள்புகழின் வேறெதுகொல்? - ஓதாய்!
வேலையனின் தாளிணைவி ழைந்துகைவ - ணங்காய்!
வேலைபொழு தென்பதெது வாழ்விலுய - வேண்டாய்! 9

கதிர்வேல்

மூதண்டப் புவனங்கள் முழுதாளும் - முதல்வா!
பேர்தண்டம் கரத்தீந்த பெருமாட்டி - புதல்வா!
சாதண்டக் கதிபோதும் தகைவாழ்வு - தருவேல்!
வேதண்ட மெனுமுள்ள மிசையாடும் - கதிர்வேல்! 10

ஞானவேல்

விரைவாக எம்முன்னர் விரும்போடி - வருக
நிரைவாக நும்முன்னர் நின்றேங்கி - உருக
திருஞான வேல்ஓச்சி சிறுநெஞ்சம் - தெறுக!
கரைஏற வைத்தெம்மைக் காத்தோம்பு - முருகா! 11

வஜ்ஜிரவேல்!

ஆதிசுயம் பானபடை - வஜ்ரவேல்!
ஆற்றலொடு ஆக்கமுடை - வஜ்ரவேல்
சோதிமய மானஅயில் - வஜ்ரவேல்
சுந்தரசிங் காரஒயில் - வஜ்ரவேல்
நீதிவடி வானகலம் - வஜ்ரவேல்
நேர்மைவழி காட்டுநலம் - வஜ்ரவேல்
நாதன்திருக் கையில்திகழ் - வஜ்ரவேல்
நாடிநமைக் காக்கவரும் - வஜ்ரவேல்! 12

வந்தனைகள் செய்பவரை - வாழ்த்துவேல்
மந்திரங்கள் ஓதவருள் - வஜ்ரவேல்!
நிந்தனைகள் ஏசுவரை - வீழ்த்துவேல்
நீசகுண நாசம்புரி - வஜ்ரவேல்
சிந்தனையர் ஞானக்கடல் - ஆழ்த்துவேல்
சீர்த்தசெயல் நேர்த்திதரு - வஜ்ரவேல்
கந்தனிடம் தண்டனிடக் - காக்குவேல்
காசினியில் வாழ்வுதரு - வஜ்ரவேல்! 13

தேவர்வசு ஏத்தவருள் - உம்பர்வேல்
தெவ்வரவர் கொட்டமத - டக்கும்வேல்
மேவிஇந்தி ராதிசுரர் - மீட்டவேல்
வெய்யஅசு ராதிகணம் - வீட்டவேல்

மூவர்தொழு மூர்த்திகுகன் - மூலவேல்!
மொய்ம்மையருட் கீர்த்திபுகல் - வஜ்ரவேல்!
காவலிருந் தோம்புதனிக் - காவல்வேல்!
கைதொழுது போற்றிடுவர் - கோவைவேல்! 14

இசையோன்!

அரவணி பவனவன் திருமகன்
அறுமுகன் - ஒளியோனே!
வரமணிப் படையினன் வரமருட்
கொடை யினன் - உடையோனே!
சிரம்வணங் கடிதொழச் செழுமைகள்
அளிப்பவன் - இறையோனே!
சரவண பவனிவன் சரிகம
பதநிச - இசையோனே! 15

முருகா! அருள்வாய்!

தொன்றுதொட்டு மாற்றமின்றித் தோன்றுகின்ற -
இளைஞனாய்!
நன்றியற்கை குன்றலின்றி நாறுகின்ற - மனத்தனாய்!
என்றுமுள்ள பொன்றலின்றி ஈருகின்ற - அழகனாய்!
நின்றியங்கும் தெய்வத்தன்மை, நீழல்செய்யும் - முருகையா! 16

சீர்த்திரயும் உம்பர்வல்லி தெய்வயானை - நேயனே!
கீர்த்திமேவும் இம்பர்வள்ளி கேண்மைகொள்காங் - கேயனே!
மூர்த்தியாக வந்துகாக்கும் முத்தன்சக்தி - சேயனே!
கார்த்திகேய பாலதண்ட பாணிகதிரின் - தேயனே! 17

மருளுகின்ற உள்ளங்கொண்டு மாளுகின்ற - பொய்யனேன்!
இருளுகின்ற உள்ளஞ்சொல்லும் ஈனச்செய்கை - கையனேன்!
அருளுகின்ற உள்ளங்கொண்டு ஆதரிக்க - வருகையா!
தெருளுகின்ற உள்ளம்அருளித் தெய்வக்காட்சி - தருகையா! 18

வேறு

முந்திவலம் வந்திடவும் முன்னவன்கண் - முன்னோன்,
தந்தபழம் கண்டுசினம் கொண்டுதனி - சென்றோர்,

சொந்ததலம் நின்றுகொடு தோல்விகெட - வென்றோய்!
மந்தமதி கல்லிகதி வந்தருளும் - கந்தா! 19

ஆறுபடை வீடுதொறும் ஆடிவரும் - பாலா!
வீறுமதி ஔவை, யயன், வெண்மையழி - சீலா!
மாறுமனம் வேறுசெயல் வல்லவுணர் - காலா!
ஊறுதரு ஆணவமொ ழித்திடுவி - சாகா! 20

அப்புதலை அப்பனிடம் அப்பொருளின் - உண்மை,
செப்புதலை மேற்கொடு,மை தீர்த்தகுரு - வையா!
இப்புவியும் அப்புவியும் எப்புவியும் - வாழ்த்த
அற்புதனல் பொற்புடைய அரிவைமண - வாளா! 21

வீரமருள் விள்ளுமுரு காற்றுப்படை - சொன்னோன்
கீரன்பிணி கேட்டிடரை நீக்கியருள் - தந்தாய்!
சூரன்உடல் கீழ்த்திமயில், சேவற்கொடி - கொண்டோய்!
ஈரமதை ஏழைமிசை ஈந்தருளும் - குமரா! 22

காதலுனை மேவஅடு காமமறு - வித்து,
மேதகுநின் நற்கருணை மேன்மைதிறம் - பாடி,
ஓதுமறை வேதமதை ஓதருண - கிரியை
தீதகலும் பொன்னடிகள் சேர்த்தபெரு - மாளே! 23

கந்தமுடை காமர்மலர் சாத்திமகிழ் - வோர்க்கும்,
பந்தமிக உண்ணெகிழப் பாதம்பணி - வோர்க்கும்,
பைந்தமிழின் பாமலரைச் சாற்றிமகிழ் - வோர்க்கும்
சிந்தைஉவந் துன்றனருட் சித்திதர - வருவாய்! 24

செவ்வேளும் செந்தமிழும்

செந்தமிழ் போன்றவன் செவ்வேள் - தொல்
தீந்தமிழ் நவ்விய கன்னித்த மிழ்வேள்!
பைந்தமிழ் ஆன்றவன் எல்லே - பக்தர்
பண்ணிய நூல்கள வன்தந்த சொல்லே! (செ)

பத்தொடி ரண்டுகை ஒப்பே - தமிழ்
பனிரெண்டெ ழுத்துயிர் உள்ளகு றிப்பே!
பத்திரு நான்குமெய் யெழுத்தும் - முருகன்
பன்னிரண் டட்சி,நு தல்விழி நிகர்த்தும் - (செ)

புள்ளிஎன் றாயுதம் ஒன்றே - வேலன்
போர்க்கென ஏந்திய ஆயுத மன்றோ?
மெய்யுயிர் எழுத்துகள் ஈடாய் - கந்தன்
மேவிய வள்ளிதெய் வானைச மேதா! - (செ)

மெல்லினம் இடையும்வல் லினமு - நேர்
'ம'கரமும் 'ர'கரமும் 'க'கரமும் முருகு!
மெல்,இடை என்றுயிர்க் கருளல் - ஆம்
'வல்லினம்' வன்மையைச் சாய்த்துயிர்த் தெறுதல். (செ)

ஆறுமு கங்களின் பண்பாய் - தமிழ்
ஆறுசீர் கொண்டவி ருத்தங்கள் ஒண்பா -(செ) 25

கந்தர் அலங்காரம் கந்தர் அனுபூதி நூல்கள் - அவை
சிந்தை தெருளூட்டி மந்தமருள் வீட்டும் வேல்கள்!
கந்தர் கலிவெண்பா கந்தர் திருப்பாடல் நூல்கள் - அவை
உந்தும் நாத்திக நிந்தை தனைவீட்டும் வேல்கள்!
கந்தர் மேல்வகுப்பு கந்தர் அருட்காதை நூல்கள் - அவை
இந்தப் புவிவாழ்வ கந்தை தனைவீட்டும் வேல்கள்!
கந்தர் சரணப்பத் தென்னும் துதிபாடல் நூல்கள் - அவை
பந்த பாசங்கள் முந்தை வினைவீட்டும் வேல்கள்! 26

பெரும்புலவன் நக்கீரன் பிழைக்காக - ஏத்த,
பரவுதிரு முருகாற்றுப் படைநூலும் - வேள்சொல்!
அருணகிரி தேன்குழைத்து அள்ளூறிப் - போற்ற
தெருளளிக்கும் திருப்புகழும், அருட்பாவும் - வேள்சொல்! 27

செந்தமிழின் சீர்மைஎனச் செவ்விசெறி - வுள்ளோன்
பைந்தமிழின் பான்மையெனப் பாலன்குழை - வுள்ளோன்
தண்டமிழின் நீர்மையெனத் தண்ணருளுக் கன்னோன்
தொன்மைத்தமிழ்த் தன்மையெனத் தோற்றநிலை -
முன்னோன். 28

தமிழாலே வைதாலும் தாங்கிக்கொள் - இறையோய்!
அமுதான தமிழன்ன அழியாத - அழகோய்!
குமரேசன் தமிழ்போலக் குன்றாத - இளையோய்!
தமிழ்ப்பண்பு மணம்வீசும் தமிழ்த் தெய்வம் - முருகா! 29

## மருதமலை முருகன் குறம்

### மருதமலை முருகனின் ஆறுமுகங்கள் செய்யும் நலங்கள்!

வாண்முகத்தாள் தெய்வானை மணங்கொண்ட - தோர்முகம்!
வானோர்க்குத் துயர்தீர்த்து வாழ்வளித்த - தோர்முகம்!
நாண்முகத்தாள் குறவள்ளி நயந்தணைந்த - தோர்முகம்!
நானிலத்தோர் தலைவணங்க நலமளிக்கு - மோர்முகம்,
மாண்மகத்த எளிவந்த மனங்காட்டு - மோர்முகம்!
மயல்,கோபம், அகம்பாவம் மாய்த்தருளு - மோர்முகம்,
பூண்மணித்தென் முடிமிளிரும் பூந்தாம - மார்பனே,
போற்றிதிருப் பேர்மருத மலையமர்ந்த - வேலவா! 30

### மருதமலை முருகனின் பன்னிரு கைகள் காட்டும் தொழில்கள்

அருளன்பின் உபகாரக் கொடைகாட்டும் - ஓர்கரம்!
அகந்தூய்மை மொழிவாய்மை நடைகாட்டு - மோர்கரம்
பொருட்செல்வம் நலம்,வாழ்வு பெறக்காட்டு - மோர்கரம்,
புகல்,நன்றி, விசுவாசம் உணர்வூட்டு - மோர்கரம்
தெருள்எய்தி இறைஞானத் திறங்காட்டு - மோர்கரம்!
செறிவேற்றம் தருங்கல்வி ஒளிகாட்டு - மோர்கரம்,
மருள்நெஞ்சம் உழலாமல் தடுத்தாளும் - ஓர்கரம்
மறத்திற்கும் அறத்திற்கும் முறைகூறும் - ஓர்கரம்! 31

நகையன்பு மனையின்ப மயம்நல்கும் - ஓர்கரம்
நலங்காக்கும் புதல்வர்கள் குலங்காக்கும் - ஓர்கரம்

பகைநின்று நமைக்காக்கக் கைகொடுக்கும் -
ஓர்கரம்
பலவாறு சிறப்பாகத் தொழில்கூட்டு -
மோர்கரம்
திகழ்கின்ற முகமாறின் தொழிற்கேற்ப -
இசைவாய்
திருத்தோள்கள் பனிரண்டும் திகழ்வண்ண -
இயலோய்!
மகிழ்கின்ற முகந்தோன்ற மருதமலை -
இருந்தே
வரையற்ற அருள்பெய்யும் நிலைபெற்ற -
முருகா! 32

### தகப்பன் சாமி!

வேல்களி லேஅவன் ஞானவேல்!
நூல்களி லேஅவன் காந்தநூல்!
மால்களி லேஅவன் பழனிமால்!
நாள்களி லேஅவன் விசாகநாள்!

மாதத்தி லேஅவன் கார்த்திகை!
வேதத்தி லேஅவன் சாமமறை!
பண்களி லேஅவன் மோகனம்!
விண்மீனி லேஅவன் கிருத்திகை!

பத்தரி லேஅவன் அருணகிரி!
புலவரி லேஅவன் நக்கீரன்
சாயலி லேஅவன் பவளமே!
சாமிக ளில்தகப் பன்சாமி! 33

### வாழ்த்து!

திங்கள் போல்முகம், கொண்டல் போல்முடி!
மின்னல் போலிடை! - விண்மகள்!
தங்கம் போலுடல், அன்னம் போல்நடை!
கன்னல் போல்மொழி - மண்மகள்!
பங்க யம்முகம், திண்ணி யம்புயம்,
பைந்த மிழ்ப்பதி - கந்தனே!

பொங்கு மங்களம் எங்குந் தங்கிடப்
போற்று வாம்சுபம் - வாழ்த்துவாம்! 34

### அபிசேகங்களும் அவற்றின் பலன்களும்

கொள்ளைபாலபி சேகப்பூசனை
ஆட்டலால்உறை - கூட்டலாம்!
தெள்ளுதேனபி சேகப்பூசனை
சிந்தலால்நலம் - நந்தலாம்!
நள்ளுநெய்யபி சேகப்பூசனை
பண்ணலால்பரம் - நண்ணலாம்!
வெள்ளைநீற்றபி சேகப்பூசன்னை
தீட்டலால்ஒளி - காட்டலாம்! 1

சந்தனத்தபி சேகப்பூசனை
அப்பலால்தனம் - உப்பலாம்!
மஞ்சளாலபி சேகப்பூசனை
பூசலால்கெடும் - மாசெலாம்!
குங்குமத்தபி சேகப்பூசனை
மங்கைமார்குலம் - பொங்கலாம்!
செங்கனித்தொகை சாற்றின்பூசனை
நல்கலால் செல்வம் - பல்கலாம்! 2

வண்ணத்தீந்தயிர் வார்த்துப்பூசனை
செய்தலால்மக - வெய்தலாம்!
வெண்மைமாப்பொடி தூவிப்பூசனை
வேட்டலால்கடன் - தீர்த்தலாம்!
கன்னல்சாற்றபி சேகப்பூசனை
விடுதலால்பிணி - கடிதலாம்!
துங்கத்தைலங்கொண் டாட்டிப்பூசனை
ஆற்றலால்சுகம் - போற்றலாம்! 3

நன்னறும்பஞ்சா மிர்தப்பூசனை
நடத்தலால்வெற்றி - கிடைத்தலாம்!
பன்னீராலபி சேகப்பூசனை
பொழிதலால்அடி - தொழுதலாம்!
தண்மைசேர்எலி மிச்சைப்பூசனை
பிழிதலால்தகிப் - பொழிதலாம்!

தெங்குநீரபி சேகப்பூசனை
ஊற்றலால் இன்பம் - சேர்த்தலாம்! 4

பனிமலர்அபி சேகப்பூசனை
படுதலால்பவம் - அடுதலாம்!
கனிகளாலபி சேகப்பூசனை
சொரிதலால்கனி - வுறுதலாம்!
கனகத்தாலபி சேகப்பூசனை
தூற்றலால்கனம் - ஏற்றமாம்!
மணிகளாலபி சேகப்பூசனை
வார்த்தலால்குடி - சீர்த்தலாம்! 5

தமிழ்மொழித் தெய்வம்வாழ்க!

குமர! நின் முருகு வாழ்க!
குன்றுதோ றாடல் வாழ்க!
இமையவர் வல்லி வாழ்க!
எயினர்தம் வள்ளி வாழ்க!
அமருமென் மயிலே வாழ்க!
அஞ்சேவற் கொடியே வாழ்க!
தமிழ்மொழித் தெய்வம் வாழ்க!
தாரணி தோள்தாள் வாழ்க! 6

திருமுருகாற்றுப்படை முற்றிற்று.

உ

# திருவேல் திருஉலா

## பேகன்

### காப்பு

திருமிகு முருகா நின்றன்
திருக்கரத் திருக்கும் வேலின்
திருஉலாத் தமிழிற் செப்ப
தெளிந்தநன் மதியை நல்கும்
அருள்வடி வாகும் ஐயன்
ஐங்கரன் மலர்த்தாள் போற்றி!
குருவென உடனி ருந்தே
குறைவின்றி உதவி செய்வான்! 1

### தேவர்கள் திருவேலை வாழ்த்தி வணங்குதல்

பூவுலகில் அடியார்க்குப்
போந்திட்ட குறைகளையும்
புனிதமிகும் திருவேல் போற்றி!
தேவர்தம் துயர்தீர்த்துச்
செகமெல்லாம் அருள்நாட்டும்
செவ்வேட்கை நெடுவேல் போற்றி! 2

உலகெல்லாம் படைத்தளித்
துயிரெல்லாம் புரந்தருளும்
உமையம்மை பெற்ற செல்வன்
கலையெல்லாம் ஓருருவாய்
உருவெடுத்த கந்தவேளின்
கையிருக்கும் நெடுவேல் வாழி! 3

மாறுபடு சூரனுடல்
கூறுசெய்தே ஈராக்கி
மயிலாக்கி கோழி யாக்கி,
நூறுகோடி அசுரசேனை
நூறிவாகை கொண்டவேல்
நுனிசிறந்து நீடு வாழி! 4

தஞ்சமெனத் தன்னுதவி
கெஞ்சிவரும் அடியார்கள்
அஞ்சிவரும் பகைகள் ஆங்கே
பஞ்சுபடத் தூள்படுத்தி
மிஞ்சுசுகம் பக்தருக்கீ
மேன்மைமிகும் திருவேல் போற்றி! 5

செல்வமெலாம் தந்தருளிப்
பல்வளங்கள் பலசுரக்க,
திருஅடியார்க் கருளிச் செய்து
வல்வினையை வேரறுத்து
நல்லறத்தை நிலைநாட்டும்
வாகைமிகு திருவேல் வாழி! 6

தாயெனவே அன்புசெய்து
சேய்எனையே காக்கும்நல்வேல்
செகந்தன்னில் துணையா கும்வேல்!
மாயனாரின் மருகனாரின்
மணிக்கரத் திருக்கும்வேல்
வாழ்கநீ டூழி வாழி! 7

வைரத்தை உருக்கியே
வார்த்தெடுத் திட்டவேல்
வாகையே ஈயும் நல்வேல்
தைரியம் எமக்களித்துத்
தருமநெறி கடைப்பிடிக்க
சக்திதரும் திருவேல் வாழி! 8

வஞ்சகத்தார் அடியார்க்குப்
பகையாக வரும்போது
வதைத்துப்பகை நூறும் நல்வேல்
கொஞ்சுதமிழ்ப் பாமாலை
வேட்கையுறும் குமரேசன்
கையகத்துக் கூர்வேல் வாழி! 9

எவ்வரம் வேண்டினும்
அவ்வரம் எமக்கருளும்
ஈடற்ற காம தேனா
இவ்வுலகில் செல்வமெலாம்
செவ்வையுற ஈந்தருளும்
இணையற்ற நல்வேல் வாழி! 10

சூலக்கர சுந்தரியின்
பாலன்தே வர்பகைக்குக்
காலனென வந்து தித்த
சீலன்,திரு முருகன்றன்
கோலமிகு திருக்கரத்தின்
வேலதுகாண் வாழி! வாழி! 11

பதைபதை பதையெனப்
பதைத்தடி யார்வரின்
பகைத்தவனுக் கஞ்சி நொந்து
குதிகுதி குதியெனக்
குதித்துவந் தப்பகை
மிதித்திடு திருவேல் வாழி! 12

அச்சத்தைத் தவிர்ந்திந்த
அவனிதனில் அடியார்க்கே
அன்புசெயும் நல்வேல் வாழி!
இச்சைக்கு கந்தவரம்
எல்லாமே எமக்கருளும்
எனதையன் நல்வேல் வாழி! 13

மயில்வா கனத்தரசன்
மணிக்கரத் திருக்கும்வேல்
மரகத மணிவேல் வாழி!
குயில்மொழி யாளந்தக்
குறத்தியம்மை தனைநெஞ்சிற்
கொண்டவன் கைவேல் வாழி! 14

ஆறுபடை வீடுடைய
ஐயன்கை அழகுவேல்
அறிவுவடி வான நல்வேல்
வேறுபல அடியவர்க்
கருளும்வேல் பீடுபெற்றுப்
பிறங்குகின்ற திருவேல் வாழி! 15

உலகத்துச் சக்தியெலாம்
ஒருருவாய் உருவெடுத்தே
உயர்ந்தோன்கை யமர்ந்த நல்வேல்
நிலையுலகில் அறம்நாட்டி
கலைவளரச் செய்கின்ற
நிமலன்கை நெடுவேல் வாழி! 16

ஞானமே உருவெடுத்த
நல்வேல்இன் நானிலத்து
நான்மறையோர் துதிக்கும் ஓர்வேல்
வானதே வர்குறைகள்
வற்றச் செய்திட்டவேல்
வாழியே முருகன் கைவேல்! 17

வேதத்தின் முதலாக
விளங்குகின்ற நாயகியே
வேலாக வந்தா எம்மா!
ஆதியந்தம் இல்லாத
அந்தணன்தன் தேவியவள்
அறிவான அருள்வேல் வாழி! 18

எந்தஇடம் நினைத்தாலும்
அந்தஇடம் வந்தருளும்
கந்தன்கைத் திருவேல் வாழி!
நொந்திருக்கும் அடியவர்தம்
சிந்தையது மகிழுமாறு
செந்தேன்பெய் திருவேல் வாழி! 19

நினைக்கும் அடியவர்
மனத்தில் அருள்தனைக்
கணத்தில் அருளும் கந்தன்
கனக மணிநிகர்
கரத்தி லிருந்திடும்
கவினார் கதிர்வேல் வாழி! 20

நெஞ்சம் நினைக்கவும்
அஞ்சேல் எனஉவந்து
அடியவர் துன்பம் நீக்கும்
மிஞ்சும் ஒளிமிகு
கந்தன் கரத்தமர்
மிடுக்குடை நெடுவேல் வாழி! 21

கலியுகத்தில் அறம்நாட்டி
கருணைவழி முறைசெய்து
காக்கவந்த நெடுவேல் வாழி!
வலிமைதனை அறத்தார்க்கு
வழங்கியருள் வடிவேலன்
வண்கையின் திருவேல் வாழி! 22

பொங்கிஎழும் கடல்தன்னைப்
பூரித்தே ஆர்த்தெழுந்து
புறந்தன்னில் ஓட்டிவிட்டே

இங்குலகில் அமைதிதனை
எமக்கருள் எம்இறைவன்
இருங்கையார் எழில்வேல் வாழி! 23

அருளொழுகும் ஈராறாம்
அழகுமிகும் நயனங்கள்
அறுமுகன் அங்கை நிற்கும்
கருணைமிகு கதிர்வேல்தம்
அடியவர் துயர்களெல்லாம்
கணத்தினில் நீக்கும் நல்வேல்! 24

மங்காத ஒளிசேரும்
மாத்தமிழுக் கருள்கூறும்
மாணிக்கத் திருவேல் போற்றி!
இங்குலகில் அடியவர்தம்
இன்னலெலாம் தீர்த்தருளும்
இலைநெடுவேல் போற்றி போற்றி! 25

அம்மைதிரு பராசக்தி
அருள்வடி வானமேல்
அறம்பிழைத்தோர் தம்மை மாய்த்துச்
செம்மைதனை வையத்தில்
சேர்ப்பிக்கும் திருமிகுவேல்
சிறந்தெங்கும் நீடு வாழி! 26

வாகையே தருகின்ற
வண்ணமிகு திருவேலை
வணங்கியே வாழு கின்றேன்
தோகைமேல் உலவுகின்ற
சுந்தரனே எம்தலைவன்
சுடர்வேல்நின் நாமம் போற்றி! 27

கலியுகம் தன்னிலறம்
காத்திட வந்திட்ட
கற்பகவேல் போற்றி போற்றி
வலியோ ரிடமிருந்தே
எளியோரைக் காப்பாற்ற
வந்தருள்செய் திருவேல் போற்றி! 28

எந்தநிலை வந்தாலும்
ஈடில்லா அறநெறியை
இம்மியும் பிறழா மற்கா
கந்தன்கை திருநல்வேல்
கனகமணி எழில்நெடுவேல்
காலமெலாம் வாழி வாழி! 29

கடமைசெயும் அடியாரைக்
காத்தருளும் கதிர்நெடுவேல்
கருணைசேர் கந்தன் கைமேல்
தடம்புவியில் அடியவரைத்
தருணத்தில் காக்கும்வேல்
தமிழ்போன்று நீடு வாழி! 30

தமிழ்பாடடி யாருள்ளம்
தடுமாறும் தருணத்தில்
தடுத்தாட்கொள் சக்தி வேலே!
கமழ்மணஞ்சேர் அறம்வளர்த்து
மறம்மாய்த்துக் காத்தருளும்
கந்தன்கை கருணை வேலே! 31

வையத்தில் சைவநெறி
வளரத்துணை செய்யும்வேல்
வாகையே ஈயும் நல்வேல்
ஐயமிலா மல்உதவி
அடியவர்க்கே அருளும்வேல்
அணிநெடுவேல் போற்றி போற்றி! 32

ஞானமெனும் விண்பறந்து
நற்சோதி தனைக்காண
நன்கெனக் குதவும் நல்வேல்
கானமிகும் தமிழ்பாடற்கு
அருள்செய்து எனைக்காக்கும்
கந்தன்கை திருவேல் வாழி! 33

## திருவேல் எழுந்தருளல்

### வேறு

கடலின் முழக்கென்ன
அடலாண்மை செய்தங்கே
கந்தன்வேல் வருகுதையா-என்
சொந்தன்வேல் வருகுதையா!
தடம்புவி யிற்பகை
தடுமாறி நிலைகெட்டுத்
தட்டென விழுந்ததையா-தன்
கட்டுடன் மாய்ந்ததையா! 34

### வேறு

வெற்றிவெற்றி வெற்றிவெற்றி
வெற்றிவெற்றி வெற்றியே!
வெற்றிவெற்றி வெற்றியே
வேலனுக்கு வெற்றியே;
வெற்றிவெற்றி வெற்றிவெற்றி
வெற்றிவேற்கு வெற்றியே
வெற்றிவெற்றி வெற்றியே
வீரவேற்கு வெற்றியே. 35

சுற்றிநின்ற பகையைமாய்த்த
சூரவேற்கு வெற்றியே
துணிந்துமுனே பாய்ந்துசென்ற
சுடர்வேலுக்கு வெற்றியே;
சூரர்சேனை மாய்த்துவந்த
தூயவேற்கு வெற்றியே
துணையடியார் காமம்மாய்த்த
துணிந்தவேற்கு வெற்றியே. 36

சற்றும்முற்றும் தாழ்ந்திடாமல்
தருணமதில் பாய்ந்ததே
தருமநெறிகள் பிழைத்தவரைச்
சடுதியிலே மாய்த்ததே;

சங்கரனின் செல்வனுக்குத்
தரணியெல்லாம் வெற்றியே
தாள்பணிந்தார் யாவருக்கும்
தருவதென்றும் வெற்றியே. 37

பற்றுவைத்துப் பண்டிதனின்
பதமலரைப் பணிந்தனன்
பாண்டியனின் பாடலுக்கும்
பைந்தமிழ்க்கும் வெற்றியே;
பற்றுபற்று பற்றுபற்று
பண்டிதன்றாள் பற்றுவாய்
பற்றுவைப்பாய் என்மனமே
பைந்தமிழ்தேர் முருகன்மேல்! 38

வேறு

வாழிவாழி வாழிவாழி வாழிவாழி வாழியே!
வானைசூடி வந்தவேலும் வாழிவாழி வாழியே!
ஆழிசூழும் வையமீதில் அறமார்க்கத்தின் பகைதனை
அறுத்துவேரை அன்புகாத்த அழகுவேலும்
வாழியே!

வாழிவாழி வாழிவாழி வாழிவாழி வாழியே!
வண்ணத்தோகை மீதிலேறும் வள்ளல்வேலர்
வாழியே
ஏழிசைகாள் சேர்ந்துபாடி என்னையனை வாழ்த்துவீர்
இனியுலகில் அச்சமில்லை என்னையன்றாள்
வாழியே! 39

பசு, பத்தினிப் பெண்டிர் ஒதுங்குக

முதியரோடு பாலர்யாரும்
மூப்புநோய்கள் கொண்டவர்
முன்னிலாது வணங்கிஏத்தி
மூலைமூலை ஒதுங்குக!
பதியைப்போற்றும் மாதரோடு
பாரம்சூலு கொண்டவர்
பண்டிதன்றாள் வணங்கிநின்று
பக்கத்திலே செல்லுக

மதிவளர்க்கும் ஆசானோடு
மறம்கடிந்து வாழ்ந்தவர்
மணிஐயன்றாள் தொழுதுபாடி
மறைவிடத்திற் கேகுக
குதிகுதித்து நெருப்பைக்கக்கி
குமரன்கைவேல் வருகுதே
குவலயத்தில் மறத்தை மாய்த்தே
அறம்அதனை வளர்க்கவே! 40

### போர்

பாயும்வேலின் செய்திகேட்டுப்
பாவியான சூரனின்
படைகள்யாவும் பதைபதைத்துப்
பயத்தினாலே மாய்ந்தவே
ஓயுங்காலப் பாவத்திற்கே
ஓடியிங்கே வந்ததாய்
உவகையோடே அமரர்யாரும்
உளக்கிளர்ச்சி கொண்டனர்!
நாயும்பேயும் புலாலைநாடி
நடக்கக்கழுகும் பறந்ததே
நான்மறையோன் துதிக்கும்ஐயன்
நனிவிருந்தே ஈவதாய்!
ஆயதமிழ் வாணர்பல்லோர்
அழகுவேலைத் துதித்தனர்
அவனியாவும் காணுகவே
ஐயனாடும் அமரையே! 41

### தேவாசுரப் போர்

கறுமையோடு கடுமையாக
ககனமோடு பூமியை
கவ்விவாட்டும் இருளதாகக்
கள்ளன்சூரன் வந்தனன்
அறுமுகத்தோன் நெடியவேலும்
அடலாண்மைகள் செய்தங்கே
ஆறுகோடி ஆதவன்போல்
அள்ளிஒளியை வீசவே!

இருந்தவாறு தெரிந்திடாமல்
இருளும்ஓடி மறைந்ததே
எனதையனும் இளநகைசெய்
தினிதியாங்கு நின்றனன்
முறுக்கிவந்து முரணிநின்று
மூண்டசூரர் வந்தனர்
முருகர்சேனை பகையைஆங்கே
மூறிவாகை கொண்டதே! 42

மண்ணிறோன்றி விண்ணைமுட்ட
வளர்ந்துசூரன் நின்றனன்
வாளும்கோலும் வில்லோடம்பும்
வரிசையாகக் கைகொடே

அண்ணல்வேலர் குழந்தையாக
அமுதுமாறாப் பிள்ளைபோல்
அழகுவேலைக் கையிலேந்தி
அழகுதோய நின்றனர்

எண்ணினானே சிறுவனென்றே
ஈசன்போற்றும் முதியனை!
எள்ளினானே ஞானமேரின்
முன்னெள்ளினைப் போன்றவன்!

வண்ணமோடு விண்ணிற்பாய்ந்து
வளர்ந்துவேலும் பாயுமோ
என்மனதில் வளருமச்சம்
மறைத்துச் சிரித்தான்சூரனே! 43

வேறு

அழுக்குரு வான
அசுரனின் வேந்தன்
அறத்தினை மாய்க்க
அணியுடன் நின்றான்
எழுந்தது நல்வேல்
எரிதணல் கக்கி
இரைந்தது வானில்
இரும்புவி யாட

உழுதது சூரன்
உரமிகு மார்பை
உடனிரு கூறாய்
உடலினைச் செய்ய
தொழுதனன் பாவி
துளிர்த்திடும் அறிவால்
சுடர்மணி வேலர்
துணைசெய்க என்றே! 44

**சூரன் தன் தவற்றை உணர்தல்**

**வேறு**

என்பிழை பொறுப்பாய் ஈசன்
இளையகு மாரா; மேலாம்
உன்வலி அறிந்தி டாமல்
உதாசீனம் செய்தேன்; ஐயோ
மும்மலம் என்றன் கண்ணை
மூடியே மறைத்தது! என்று
முன்றொழு துரைத்தான் சூரன்
முருகரும் முறுவல் பூத்தார். 45

**சூரன் முத்தி பெறுதல்**

ஐயனின் அருளினாலே
அழகுவேல் சூரன் றன்னின்
மெய்யினை இருகூ றாக்க
மேலவர் இவ்வி ரண்டைச்
செய்தனர் மயிலும் சேவல்
திருவுருக் கொள்ளு மாறு
மயிலின்மேல் ஐயன் ஏற
மற்றதைக் கொடியாய்க் கொண்டார்! 46

**கவிச்சொல்**

பாவமே புரிந்திட் டோரும்
பழுதிலா ஞானம் வந்தால்
பாவத்தைக் கடிந்தொ துக்கி
பண்டிதன் பொற்றாள் ஏத்த

தேவர்தம் தலைவர் வேலர்
திருவுளம் மகிழ்ந்து பின்னே
பாவியர் ஈடே றத்தான்
பண்ணுவார் உலகீர் காண்பீர். 47

வேலது வெறியால் நோக்க
வெங்களம் தனிலே மீத்த
கோலமில் அசுரர் சேனை
கூட்டுடன் ஒழிந்த தையா!
பாலது வாயில் ஊறும்
பண்டிதன் செய்த போரை
ஞாலத்தில் எவர்செய் வாரே?
நான்மறை முதலோன் போற்றி! 48



### வேல் உலாக் கொள்ளல்

#### வேறு

வாகைதனைச் சூடிக் கொண்டே
ஐயன்றனை வலமாய் வந்து
தோகையின்மேல் ஏறிக் கொண்டு
அடியார்கள் துயர்கள் நீங்க
ஏகிற்றே திருஉலாவே
எம்முளம் மகிழு மாறே
ஆகஇவ் அவனி தன்னில்
அறமதே செழித்த தம்மா! 49

தேவர்கள் தொழுதே ஏத்த
திருமறை கீதம் பாட
தேவர்கோன் இந்தி ரன்வந்
திருந்தங்கு முருகன் தன்நல்
பூவினும் மென்ம லர்த்தாள்
போற்றிகள் செய்துநிற்க
பாவங்கள் போக்க வந்த
பண்டிதன் உலாக்கொண் டாரே! 50

வேலின்ஓர் பிழம்பி னின்று
 வெளிப்படும் சிறுகற் றைப்போல்
கோலமாய்க் கதிரோன் வந்தான்
 குணத்திசை தனிலே ''மேலாய்
சீலமார் புதுயு கத்தை
 செகந்தனில் அருளி னாரே
வேலவர்'' என்றே நன்கு
 விளம்பரம் செய்வ தேபோல்! 51

வேண்டாத குப்பை மக்கி
 வேண்டுர மாவ தேபோல்
வேண்டாத செயல்பு ரிந்து
 வெம்மையே விளைத்த சூரன்
மாண்டிட மணிற்பு தைந்து
 மானுடம் செழித்த தம்மா
பாண்டியன் பாட லுக்குப்
 பாரெல்லாம் வெற்றி யம்மா! 52

### பூத்தது புதுயுகம்

பூத்தது புதுயு கந்தான்
 பூமியில் என்று வானோர்
தோத்திரம் செய்தார் மேலாய்
 சுடரிடும் வேலை ஆங்கே
நீத்தனர் மாயப் போர்வை
 நிலத்தினில் வாழும் மாந்தர்!
யாத்தனர் புலவர் பாக்கள்
 அறுமுகன் வாழ்க வென்றே! 53

### வையம் மகிழ்ந்தது

உற்றவன் மறத்தை மாய்த்தே
 உயரறம் வளர்த்தான் என்று
பெற்றவன் மகிழ்ந்தான்! சூலம்
 பெற்றவள் மகிழ்ந்தாள்! உண்மை
கற்றவர் மகிழ்ந்தார்! தேவ
 கணங்களும் மகிழ்ந்தார்! தங்கள்
நற்றவம் பலித்த தென்றே!
 நான்முகன் அகம கிழ்ந்தான்! 54

கயிலாய கிரியை நோக்கி
கந்தனின் கையில் நின்று
மயிலின்மேல் ஏறிக் கொண்டு
மகிழ்ச்சியாய் வேலும் செல்ல
அயில்வேல்தான் வெற்றி கொண்டு
அவண்வரல் அறிந்தார் பெற்றோர்
உயர்ந்திடும் மகிழ்ச்சி யாலே
உயிர்க்கெலாம் வரங்கள் தந்தார்! 55

### வரம் நல்கும் வேல்

செல்கின்ற வழியில் வந்து
செவ்வேளை வணங்கி னோர்க்கு
நல்கிற்று நல்வேல் வேண்டும்
நல்வரம் அனைத்தும்; தர்மம்
மல்கிற்று வையந் தன்னில்
வானிலும் மற்றும் எங்கும்
வல்வினை தொலைந்த தென்று
வாழ்த்தினர் தேவரெல்லாம்! 56

### பாவலர் வேண்டல்

### வேறு

வாகைதனைச் சுமந்துசெல்லும்
வேலே உன்னை
வணங்கினேன் உளமுருகித்
தமிழாற் பாடி

தோகைமேல் சுடர்மணிபோல்
இவர்ந்து செல்லும்
சுப்ரமணி யனைமறவா
ஒருவ ரத்தைத்

தாகமுடன் உன்பாலே
கேட்கின் றேன்யான்
தந்ததற்கு நின்நாமம்
கோடி போற்றி

ஆகமங்கள் அத்துணையும்
உனக்குச் செய்வேன்
அடிமைக்கிவ் வரந்தந்த
அருட்பாங் காலே! 57

வேறு

படைப்பவன் செருக்க டக்க
படுதுயர் சிறையில் வைத்தே
அடைத்தவன் சிரத்தில் குட்டி
அருளிய அறுமு கன்றன்
படைக்கலம் பவனி வந்து
பராசக்தி புகழ்செப் பிற்றே
அடைக்கலம் நமக்கு வேலே
அறவழி நிற்போர் அஞ்சேல்! 58

கவிஞன் வேண்டல்

அம்மையப்பர் திருமுன்னை
நாடிச் செல்லும்
அயில்வேலே அடியேன்என்
வேண்டல் கேட்பாய்
செம்மைமிகு நல்வாழ்வை
எனக்க ருள்வாய்
செந்தமிழின் நாவன்மை
திருவு ளந்தா!

இம்மையிலும் மறுமையிலும்
வேலன் மேலே
இம்மியும்ஓர் ஐயமிலா
மனத்தைத் தாராய்!
வெம்மைசேர் ஆசைஅற
மார்க்கம் சொல்வாய்
விளங்குமறைப் பாசொன்னேன்
உன்றன் மேலே! 59

கலியுகத்துக் கொடுமைகளைக்
கணக்கெ டுத்துக்
கவிதையினால் யான்கூற
வல்லேன் அல்லேன்
மலிந்ததுகாண் எங்கெங்கும்
மறமே! நேர்மை
மண்ணோடு மறைந்ததுவோ
என்றே அஞ்சும்

நிலையதுவும் வந்ததையா
நீதி நேர்மை
நெறிவாழ்வும் நீணிலத்தில்
தழைக்கச் செய்ய
இலைவேலே அருள்செய்வாய்
இக்க ணத்தே
இவ்வடிமை செய்ததவம்
பலிக்கு மாதோ! 60

வேறு

மூவரும் காணா மேலாம்
முக்கணார் அடியார்க் குற்ற
தீவினை அறுப்ப தற்குத்
திருவருள் செய்த பிள்ளை
தேவர்கோன் திருக்கை மீது
திகழொளி செய்யும் வேலே
பாவிஎன் பிறப்ப றுக்க
பழுதிலா வரமே தாராய்! 61

வேறு

அடக்குமுறை தலைவிரித்தே ஆடும் ஆட்சி
அறவழியில் நிற்போரை நசுக்கும் ஆட்சி
எடுத்ததெற் கெலாம்படையை மக்கள் மேலே
ஏவிவிட் டவருயிரைக் குடிக்கும் ஆட்சி
சடசடென மடமடென சரிந்து வீழ
சைவநெறி அவன்பின்னே தழைக்க நீயும்
விடுவிடுஉன் வெங்கதிர்வேல் கொடியோர் மேலே
மேதினியில் அறம்வெல்லும் வேல்நீ வாழி! 62

### வேறு

ஓமெனும் பிரண வத்தை
ஒருநாள்யான் கேட்கச் சொன்னாய்
பூமியிற் புனித கங்கை
புதுத்தேனாய் ஒளியைச் சிந்தி
ஓமெனும் ஒளியி னோடு
வருவதாய் உணர்ந்தேன் ஐயா
நாமநீர் வைய வாழ்வில்
நனிகேட்க அருள்வாய் வேலே! 63

### வேறு

கலியுகத்தில் வாழ்கின்ற அடியேன் என்னைக்
கதிர்வேல்உன் கருவியாய் ஆக்கிக் கொள்ளே
உலகத்தில் மலிந்திருக்கும் மாயை நீக்கி
உய்யும்வழி மாந்தருக்குக் கூறும் நல்ல
கலைமிகுந்த நாவன்மை அருள்வாய் வேலே
கவிதைமழை யான்பொழிய அருள்வாய் அப்பா!
வலிவுடைய நற்றோளும் வைர நெஞ்சும்
வளர்செல்வம் எனக்கருள்வாய் வடிவேல் நீயே!
64

### படைப்போன் வேலை வணங்குதல்

ஆக்கும்தொழில் அயன்வந்து வணங்கி நின்றே
அயில்வேலைத் தொழுதேத்திச் சொல்வான்
ஆங்கே
மீக்குறுநல் வன்மையினால் என்றன் நெஞ்சில்
மிகவளர்ந்த ஆணவத்தைப் போக்கி மாயை
நீக்கியருள் செய்தசுப்ர மணியா போற்றி
நின்றிருக்கை நெடுவேற்குக் கோடி போற்றி
ஆக்குதொழில் பாவமற அமைவ தற்கே
அருள்புரிக என்றயனுக் கருளும் வேலே! 65

### கவிச்சொல்

எத்தனையோ யுகாதியுகம் காத்தி ருந்தே
எனதையன் கைவேலே உனைய றிந்தேன்!

புத்திக்கெல் லாம்எட்டாப் புனிதம் நீயே!
புவனமெலாம் பாலிக்கும் சக்தி நீயே!
சித்தத்தில் உறைகின்ற தெளிவும் நீயே
சிவம்நீயே! சக்திநீயே! தெய்வம் நீயே!
இத்தரையில் நினதுபுகழ் பரப்பும் பேற்றை
இன்றெனக்கு வல்லமையோ டருள்க நீயே! 66

### வருணன் வரல்

வருணபக வான்வந்து வேலின் முன்னே
வணங்கியே வாய்பொத்தி தாழ்ந்து நின்று
"தருணத்தில் தேவர்துயர் தகர்த்த ருள்செய்
சக்திவேலே நின்நாமம் கோடி போற்றி
உரியஇடம் பெய்யாமல் வேண்டா மண்ணில்
உகுக்கின்றேன் மழைதன்னைச் சிலநே ரத்தில்
வருத்துமெனை ஊழ்வலியால் அதனை மாற்ற
வரமருள்க" எனத்துதித்தான் வணங்கி வீழ்ந்தே! 67

'நானின்றி உயிரில்லை என்று நீதான்
நனிசெருக்குக் கொண்டதனால் வந்த திஃதே
வானத்தை எதிர்நோக்கா உயிர்கள் கோடி
வாழ்வதனை அறிகுவைநீ காண்க உன்றன்
தானத்தைப் பணியாகச் செய்வாய் உன்றன்
தலைவீக்கம் தவிர்த்திடுவாய் மேலாம் இந்த
ஞானத்தை உரைக்கின்றேன் உய்க' என்றே
நல்வேலும் நவிலவரு ணன்ம கிழ்ந்தான்! 68

### இந்திரன் வணங்குதல்

இந்திரன்முன் னேவந்து வணங்கித் தன்நல்
இரத்தினகிரீ டச்சிரசு மண்ணிற் றோய
முந்துமொரு பக்தியினால் தொழுதான் மாதோ
மறைகளெல்லாம் முயன்றுபுகழ் வேலை ஆங்கே
சிந்துதுயர்க் கண்ணீரை மாற்றி வானின்
தேவர்க்கு வாழ்வளித்த திருவேல் போற்றி
இந்திரப தவிதன்னை எனக்கு மீண்டும்
ஈந்தருள்க! எனவேலும் இயம்பிற் றாங்கே! 69

"உன்உயிருக் குப்பயந்து சூரன் இட்ட
ஓராயி ரம்ஏவல் செய்து வாழ்ந்தாய்
உன்நிலையைக் கண்டுதேவர் மலைத்துப் போனார்
உயர்யாகம் அத்தனையும் நீத்தார் கேள்நீ
என்னநிலை வந்தாலும் இறைவன் ஈசன்
இன்மலர்த்தாள் மறவாமல் துணிந்து நிற்பாய்
உன்னுடைநற் பதவிதனை உனக்கே ஈந்தேன்
உய்வாய்நீ' எனநல்வேல் உரைத்த தாங்கே! 70

### திருமால்

ஆயரிடைப் பிறந்திட்ட அண்ணல் இந்த
அவனிதனை வாய்மண்ணில் காட்டும் வள்ளல்
மாயனார் முன்செல்ல பின்னே நின்றார்
வளைந்துநெளிந் தேநாணி இந்தி ரன்தான்
சேயனாம் திருக்குமரனை இருவர் நோக்கி
திருவைநிகர் தேவயானை தனைம ணக்கத்
தூயோய்நீ அருள்புரிக எனவும் வேலர்
சுடர்மணிபோல் புன்னகைவாய் பூத்தா ரம்மா!
71

### முப்பத்து முக்கோடி தேவர்கள்

### நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள்

கோடான கோடியுகம் தவங்கள் செய்து
குமரவேள் தனைக்காணக் காத்தி ருந்தோம்
வீடான பேறுவிழை அவர்கள் வந்து
வேல்முருகன் றாள்பணிந்து வேலை வாழ்த்தி
'ஈடேறும் இனியவழி எமக்குச் சொல்க'
எனவேலின் முன்னிறைஞ்சி ஏங்கி நின்றார்
பீடான வெற்றிகொண்ட வேலும் ஆங்கே
பிரமோப தேசமவர்க் குரைத்த தம்மா! 72

### ஐம்பூதம்

ஐந்தான பூதங்கள் வேலின் முன்னே
அடங்கியே வாய்பொத்தி வந்து நின்றார்
நைந்துருகி நல்வேலை வாழ்த்தி னார்கள்
நான்மறைகள் புகழ்தலைவன் கைவேல் வாழ்க!

'மைந்தர்கள் யாங்களுய்யும் வழியைக் காணும்
மாதவத்தை எமக்கருள்க மணிவேல்' என்றார்
ஐங்கரத் தான்தம்பி அருட்கை வேலாங்
கருளியது கேட்டவரம் அவர்க்கும் மாதோ! 73

### அகத்தியர்

அகத்தியரும் வேல்முருகன் முன்னே வந்தார்
'அயில்வேலும் ஆறுமுகன் றாளும் போற்றி
செகத்தினிலே எந்நாளும் நிலைக்க வேண்டும்
செந்தமிழே! அஃதுலகைக் கவர வேண்டும்
தகத்தகெனும் புகழ்தமிழ்க்குக் கிட்ட வேண்டும்
தமிழ்வேதம் தரணிஎலாம் பரவ வேண்டும்
இகல்மாய்க்கும் எதிர்வேல்இவ் வரம ருள்க
என்றகத்தி யர்கேட்க அருளும் வேலே! 74

### திருவேல் திருஉலா

வெற்றிதனைச் சேவலுமே விளக்கிக் கூவ
மிகுதோகை மயிலதுவும் சுமந்து செல்ல
நற்றவத்தார் செய்தபல நற்ற வத்தால்
நான்மறைகள் பெற்றபெரும் பாக்கி யத்தால்
நெற்றிக்கண் ணனார்பெற்ற திருக்கு மாரன்
நீள்கையி லமர்ந்துவேல் உலாக்கொண் டாங்கே!
உற்றதிரு கயிலாயம் நோக்கிச் செல்லும்
உமையோடே அப்பருமே மகிழு மாறே! 75

வெற்றிதனை உரைப்பதற்கு விரைந்து செல்லும்
வேல்முருகன் பின்னாலே அணிவ குத்தே
உற்றஅன்பு வீரபாகு தலைமை தாங்க
உயர்வீர பூதகணம் அனைவர் வந்தார்
பெற்றபிள்ளை வருவதனை உணர்ந்த பெற்றோர்
பேருவகை கொண்டேதம் அருட்கண் ணாலே
உற்றுஉற்று நல்வரவு பார்க்க லானார்
ஒப்பில்லாப் பெருமைபெறும் ஒளிவேல் வாழி!
76

இமயகிரி அருகில்வர என்ஐ கந்தர்
ஈரேழு புவனத்தின் இறைவ ரோடே
உமையம்மை யும்எழுந்தே எதிர்கொண் டேகி
ஓங்குமன்பால் முருகவேளை உச்சி மோந்து
தமதுமார் போடணைத்து மகிழ்ந்தார் இந்தத்
தரணியெலாம் தருமநெறி நிறைந்த தம்மா!
தமையனை அணைத்தாரைங் கரத்து வள்ளல்
சக்திமிகு வேலேநீ நீடு வாழி! 77

பற்றறுத்த அம்மையப்பர் பற்று வைத்தார்
பற்றுநீத்த பரமகுரு முருக னாராம்
பெற்றெடுத்த பெருநிதியம் மீதே! அங்கே
பெருகுபக்தி யாற்சூழ்ந்த ஞானி யர்கள்
நற்றவத்தோர் வானுலகோர் பார்த்தோர் எல்லாம்
பற்றறுக்கும் பற்றதனைப் பற்றிக் கொண்டார்
உற்றஒரு கலியுகத்தைக் காக்க வந்த
உயர்வேலே உன்நாமம் கோடி போற்றி! 78

சூரனைஐ யன்மாய்த்த அவ்வி டத்தில்
தோத்தான்தோத் தான்தோத்தான் சூரன் என்று
வீரமுடன் சீரலைகள் விளம்பும்அந்த
வேலையரு கேகோவில் கொள்க வேலா
தாரணிந்த மார்பஎன வானோர் வேண்ட
தண்டபாணி கோவில்கொளச் சித்த மானார்
யாரங்கே தொழுதாலும் அங்கே தோன்றும்
அருள்வேலே நின்நாமம் வாழ்க என்றார். 79

ஆறுபடை வீட்டினுள்ளே இரண்டாம் வீடாய்
அமைத்திடுக திருச்செந்தில் என்ன மேலோர்
ஆறுமுக வள்ளலுமே செந்தில் தன்னில்
அழகாகக் கோவி(ல்)கொண்டார்! அகில
மெல்லாம்
மாறின்றி உவகையிலே மகிழ்க வென்றே!
மாத்தமிழ்போல் எந்நாளும் மங்கி டாமல்
சீரலைகள் திருமுருகன் புகழைப் பாடும்
திருச்சீ ரலைவாய்சேர் திருவேல் போற்றி! 80

### திருச்சீரலைவாய்

தத்தித்தோம் தித்தித்தோம் ததித்தோம் என்றே
தண்மைமிகும் அலைகளுமே தாளம் போடும்!
தித்திக்கத் தித்திக்கக் கவிதை சொல்வேன்
செந்திலாதி பதியேஉன் தலைய சைப்பாய்
முத்தைப்போல் வித்தான விந்து சிந்தி
மோனமிகும் மயில்நடனம் செய்க மாதோ
சத்திமிகு தனிவேல்உன் நடனம் செய்வாய்
தருமநெறி காக்கவந்த தனிவேல் போற்றி! 81

### ஐம்பூதங்களின் வழிபாடு

### வேறு

கதிரவன் எழுந்து காலை
கதிர்வேலைத் தொழுது செல்வான்!
பதிதனைப் போற்றிச் செல்வான்!
பனிநீர்தன் அலைக ளாலே!
முதிராத தென்றல், முத்தீ
முதுவையும் வானம் யாவும்
துதிசெய்யும் புகழைப் பெற்ற
சீரலைச் சுடர்வேல் போற்றி! 82

எட்டிரண் டானாய் போற்றி
ஏகமாய் நின்றாய் போற்றி
எட்டுடனெட் டானாய் போற்றி
எட்டாத பொருளே போற்றி
எட்டெட்டை அடியார்க் கீயும்
இணையிலா குருவே போற்றி
மட்டிலா வேலாய் வந்த
மணியேநின் மலர்த்தாள் போற்றி! 83

வேலனே விமலா போற்றி!
விண்ணவர் தலைவா போற்றி!
பாலனே குருவே போற்றி!
பண்டித மணியே போற்றி!

சீலனே திருவே போற்றி!
செகந்தனில் அடியார் பாற்செல்
காலனை உதைப்போய் போற்றி!
கருணைமா நிதியே போற்றி! 84

குருவாகி என்னைக் காக்கும்
குமரநின் மலர்த்தாள் போற்றி!
திருவெலாம் எமக்கு நல்கும்
செந்திலம் பதியே போற்றி!
அருள்செய்தே எமைப்பு ரக்கும்
அறுமுக வள்ளால் போற்றி!
திருவேலே போற்றி போற்றி
தேவாதி தேவே போற்றி! 85

### நூற்பயன்

திருவேலின் உலாநூல் தன்னைச்
சிந்தையிற் களங்க மின்றி
முருகனை மனத்தில் வைத்து
முப்பது நாட்செ பித்தால்
பெருகிய பகைகள் மாயும்
பிணியெலாம் தீரும்; மேன்மைத்
திருவெலாம் கூடும்: வேலின்
திருநாமம் போற்றி போற்றி! 86

### உள்ளுறை மறை

ஓமெனும் பிரண வத்தால்
உலகெலாம் வந்த தையா!
ஓமெனும் பிரண வத்தால்
ஒலியெலாம் பிறந்த தையா!
ஓமெனும் சொல்லுக் குள்ளே
உயிரெலாம் ஒடுங்கு மையா!
ஓமெனத் தினமும் சொன்னால்
உயர்வதும் பெறலாம் மாதோ! 87

### வாழ்த்து

ஈராறு கரங்கள் வாழ்க!
    இருமூன்று முகங்கள் வாழ்க!
பாரினில் எம்மைக் காக்கும்
    பருவேலும் வாழ்க! வாழ்க!
கூருகிர் கோழி, மஞ்ஞை
    குவலயத்து அடியார் வாழ்க!
சீருடை வள்ளி தெய்வ
    யானையும் சிறந்து வாழ்க! 88

திருவேல் திருஉலா முற்றிற்று

உ

# மயூரகிரியுலா

## சு.மு. இராமசுப்பிரமணியன் செட்டியார்

### காப்பு

செய்ய மயூரகிரி சேர்முருகப் பெம்மாற்குத்
துய்யவுலா வோதத் துணையாமே - பையரவ
மாதங்க வண்ணத்த வன்னருளுந் தோகையடி
மாதங்க வண்ணத்த வன்.

வேலறாக் கையருலா விற்குத் துணையாமே
பாலறா வாயர் பதம்.

### நூல்

பொன்னுலகங் காக்கும் புரந்தரனும் வானவரு
மன்னு மரியயனும் வண்மையுற — வின்னநிறத் 1

திப்படிய னிவ்வணத்த னிவ்வுருவ னென்றறிந்து
செப்பும் வகையறியாச் செல்வன்கா - ணிப்புவியில் 2

முத்துடைத்தே யென்றவ்வை மூதாட்டி யார்புகழ்ந்த
தத்தையர சாள்கன்னித் தண்ணாட்டில் - வித்தகநூ 3

லோங்கிவளர் சங்கமுய ரொண்கூட னன்னகரில்
தேங்குபுக ழாரவமர்ந் தேசிவனார் - பாங்குறவே 4

யங்கயற்க ணம்மை யளித்தவர சாட்சியினை
யிங்கயற்க ணுள்ளார்க ளின்பமுறப் - பொங்குபெருங் 5

கங்கைச் சடையைக் கரந்து கதிர்மகுடந்
துங்கமுற வேயணிந்து துள்ளுகயல் - தங்குகொடி 6

யென்ன வுயர்த்தி யிருந்தாண்ட முன்னாளில்
மன்னு தடாதகையின் வான்வயிறு - பன்னுகரு 7

வுற்றதுபோ லாக வுயர்சோம வாரத்திற்
கொற்றவர்க ணின்று குதுகலிக்க - முற்றியநால் 8

வேத முழங்கவுயர் விண்ணவரு மண்ணவரு
மேதமற்ற தென்ன வெழுந்தவன்காண் - சோதிமணிச் 9

சொக்கலிங்க னாரருளுந் தூவேல் வளைசெண்டு
மிக்கதெனப் பெற்ற விமலன்காண் - தக்கவடி 10

வேலைக் கடல்சுவற விட்டபெரு மான்முத்து
மாலை யளித்த மகபதியின் - கோலமுடி 11

சிந்த வளையெறிந்த செல்வன் மகமேரு
நந்து நிதிபெறவே நற்செண்டை - யுந்தியவன் 12

கோழியையும் பாடியதன் குஞ்சையும்பா டேனென்ற
வாழியபொய் யாமொழியை வாழ்விக்கத் - தோழமையால் 13

வெங்கா னகநடுவண் வேடுவனாப் போந்தருளி
யங்கார்விற் பன்னனனி யச்சமுற - விங்காரு 14

முட்டையையும் பாடுகென முன்னவன்சொல் பொன்போலுஞ்
சிட்டவுயர்வாசகத்தைச் சேர்த்தவன்காண் - மட்டவிழுங் 15

கொன்றை மலர்த்தாமக் கோவுக் குயர்பிரம
மன்று மொழிந்த வமலன்காண் - துன்றியசீர் 16

வெள்ளிக் கிரியான் விளங்குமுமை யம்மையினைத்
தெள்ளியிரு கூறாக்கிச் சேரொருகூ - றுள்ளியே 17

வாமபா கத்தமைத்து மற்றொருகூற் றையொருசீர்ச்
சேமக் குழவியாச் செய்தருளி - யாமவற்கு 18

ஞானசத்தி யைமனத்து ணல்கியிச் சைகிரியை
யானசக்தி யும்படைய தாவீந்து - வானக் 19

கயிலை வரையிற் கருது வடபா
லயிலார்நற் கோயி லமைத்து - மயிலொன்றை 20

யீந்து கிருத்தியங்க ளீரிரண்ட னோடொன்று
தேர்ந்துமுறை செய்யச் செலவிடுத்தான் - போந்துமுறை 21

செய்யுநாட் பூவுலகிற் சீரார்காஞ் சீபுரத்தி
லையனூ ரும்மஞ்ஞை யாகவெனத் - தொய்யலுடன் 22

சிங்கன் பதுமன் றிறற்றா ரகனென்னு
மிங்கமுடை யார்மூவ ரேத்தவே - துங்கமுறச் 23

செய்சூர னற்றவத்தைச் செந்தா மரையயனும்
பையார்பாம் புப்பாயற் பண்ணவனு - மையூர்தி 24

யேறு மயிலுக் கியம்பிடவே யம்மயிலும்
வீறுகொண்டு சென்று விமானமொன்று - தேறியெடுத் 25

தந்நால் வரையு மழைத்து வருகவென
முன்னாக வேவி முகமலர்ந்து - சொன்னால்வர் 26

வந்தவுட னன்னவரை மாகணத்திற் சேர்த்தவரின்
பந்தமறுத் தின்பமுறப் பாலித்துச் - சிந்தைமகிழ்ந் 27

தேயுநா ளோர்நாளி லிந்திரனும் வானவருந்
தூயவனீ வாகனனுந் தொல்லாழி — மாயவனும் 28

வந்து குகனை வணங்கி யினிதிருந்தா
ரந்தநாட் சூரனடைந் தம்மயிலை - முந்துநாள் 29

பங்கயங்கா ணாது பரமனடி கட்குவிழிப்
பங்கயத்தை யர்ச்சித்த பண்புமிகு - சங்கையனால் 30

சிட்டித் தொழில்செய் திசைமுகனா லேயுற்ற
நட்டத்தா லேபகைஃமை நண்ணியே - முட்டத்தான் 31

வாகனமும் வேதனூர் வாலனமு மும்மையலர்
சாகசத்தாற் சொற்றதெனச் சாற்றவே - வேகமாச் 32

சென்று கலுழனையுந் திண்ணனத்தை யும்பொருது
கொன்று விழுங்கிவரக் கூர்வேலா - னன்றுசெய்தாய் 33

பூவுலகஞ் சென்றங்கண் பொன்னாட ரேமுதலா
யாவுலகும் போற்று மியல்மிகுசீர்த் - தேவுசிவன் 34

சிந்தை மகிழுந் திருப்புத்தூ ரின்குணபா
லந்த முறுமரசா ரண்ணியத்தில் - வந்துவரை 35

யாகக் கிடக்கவென வண்ண லருள்புரிய
நாக மயூரமா நண்ணுமதில் - யோகம் 36

புரியு மடியார் புகழ வயனு
மரியு மறியாத வண்ணல் - புரிவேணி 37

யீசனுதற் கண்ணி லெழுபொறிக ளோராறும்
வீசுகா லக்கினியால் விண்ணீரால் - தேசுமிகுந் 38

துற்ற சரவணத்தி லோராறு தீப்பொறியு
முற்றிய வாறு முதல்வனா - மற்றுமுயர் 39

காழி நகரிற் கவுணியற்கு ஞானப்பால்
தாழி யளித்தநற் றாயணைந்து - வாழியவென் 40

றோதி யுருவாறு மொன்றாகச் சேர்த்தணைக்கக்
காத லுறுமடியர் கண்களிப்பச் - சோதித் 41

திருமுகங்க ளாறுந் திகழ்கரமீ ராறு
மருவ வுமைமகிழ வந்தோன் - கருணையே 42

சீர்மேனி யானான் றிகடோ மரங்கொடிவாள்
போர்குலிச மம்பு புகழ்மிகவே - யாரங்கு 43

சம்மணிநற் றாமரையுந் தண்டம்வில் வன்மழுவே
லம்மவிவை யாயுதமே யாவுடையான் - மும்மை 44

மலநீக்கு வான்சேவல் வான்கொடியான் வள்ளி
நலமாக்குந் தெய்வவுவா நாரிப் - பலவாகு 45

விந்திரற்கு விச்சுவநல் லின்னுருவங் காட்டியவன்
றந்தமகா மண்டபத்துத் தானிருந்து - முந்துமவன் 46

செய்மஞ் சனமாடுந் தேவசே னாபதியான்
கைகளீ ராறுறுநங் கண்ணுதலான் - வெய்யசூர்! 47

மேன்மை யுறவவனை வேலா லிருபிளவாம்
பான்மை யருளித்திண் பாதியுரு - வான்மயிலும் 48

பாதியுருச் சேவலுமாம் பண்பருளி யம்மயிலை
யோதுமுயர் வாகனமா யூர்ந்தங்கண் - மாதுவசஞ் 49

சேவ லெனவுயர்த்துஞ் செல்வ னடியவருக்
காவ லுடனருள்செ யண்ணல்காண் - தேவ 50

ரரசு பெறுதெய்வ யானை யணைந்தோன்
பிரசச்சிந் தூரத்தார்ப் பெம்மான் - கரடமிகு 51

வள்ள லுதவிசெய வள்ளி யினைமணந்தோன்
கள்ளார்பூ வேங்கைக் கடிதருவாய் - மள்ளர் 52

மருள வுருக்கரந்தோன் வானோ ரிடுக்கண்
வெருள வருள்செய் விமல - னருளினாற் 53

கந்தபுரா ணம்பாடும் கச்சியப்ப தேசிகற்கு
முந்து மடியெடுத்து முன்னருளி - யந்தவுயர் 54

நூலையரங் கேற்றுநா ளுண்புலவர் சொல்வழுவை
வாலறிவ னாகவவை வந்தவர்கள் - சீலமுட 55

னொப்பும்வண் ணம்மருளு மொப்பி றனிமுதல்வன்
செப்புதிறற் றாடகையைத் திண்கரனை - யிப்புவியி 56

லேழு மரத்தை யியல்பகனை நீலியினை
வாழு விராதனை வாலியைச் - சூழுமுடி 57

பத்துடையா னைத்தடிந்த பண்பன் மருகனலார்
நத்து மெழிற்புயங்கொ ணல்லோன்வண் - சித்தமுறு 58

கார்மருவு சோலைசூழ் காழிக் கவுணியரின்
சீர்மருவு செல்வக் குலஞ்சிறப்ப - வேர்மருவு 59

சம்பந்த னாயுதித்துச் சைவசம யம்வளர
வெம்பந்த மோட வியன்றமிழ்ப்பா - சம்படியிற் 60

சாத்துந் தகைமையினன் தண்கூடற் கூனரச
னேத்துதிரு நீறணிய வெய்தினோன் - சீர்த்தி 61

யருண கிரியா னணிபுகழைப் பெற்றுக்
கருணை புரியுங் கடவுள் - வருணன்றான் 62

பெற்று வளர்த்த பெருமானீ ராறுகர
முற்ற பெருமா னுயர்பெருமான் - கற்றைச் 63

சடையா னருள்பெருமான் தைய லிருவ
ருடையா னிலைவடிவா மொள்வேற் - படையான்றாள் 64

வேதச் சிலம்பினான் வெற்றி மயூரமெனுஞ்
சீதச் சிலம்பினான் றேவரெலா - மோதுபல 65

மாகுவான் வாச வணிநீப வாகுவான்
வாகுவான் பாந்தளூறு மாமயிலான் - நாகத் 66

திறைவ னொருவே லிருபன்னி முப்பு
ளரையனால் வாய னனுசன் - பரையாகத் 67

தைந்து முகன்மதலை யாறு முகக்கடவுள்
சந்தநிறை யேழிசையுந் தானருள்வான் - வந்தெட்டுத் 68

திக்குந் தொழுபுத்தேள் செல்வமொன்ப தும்மீவோன்
சொக்கவங்கம் பத்துடைய தூயோன்மா - நக்கர் 69

பதினொருவர் போற்றவளர் பண்பனடி யார்க்குக்
கதிதருநற் பன்னிரண்டு கண்ணான் - விதிநூ 70

லுரைத்தமுறை யேமீன வுத்தரத்திற் சேறு
பொறித்தகொடி யேற்றிப் புலவ - னருத்தமுடன் 71

கொள்ளுதிரு நாளிற் குரைகழல்க ளேத்துவிரேல்
விள்ளு முமது வினையென்னப் - பள்ளிதொறும் 72

விட்ட திருமுகமே மேவுந் திருநாளிற்
செட்டியுலாத் தெய்வத் திருநாளிற் - கிட்டவந்து 73

வேதிக்கு மானுடரை மேனிலையி லுய்வித்து
வேதியா மானவரை வேதிக்குந் - தீதில் 74

திருநாளில் லும்பர் திருமகுடப் பத்தி
நிறைநாளி லேழுமுந் நீரு - முறையே 75

சிகிவரைநற் பாக்கத்துச் சேர்ந்ததா மென்ன
மிகவொலிசெய் நாளில் விளம்புந் - தகவுடைய 76

மாமஞ்ஞை யேமுதலாம் வாகனங்கள் மேற்பவனி
யேம முறவருநல் லின்னாளிற் - காமன் 77

### திருப்பள்ளியெழுச்சி

பெறுதெய்வ யானையினைப் பேருலக மேத்த
வருவள்ளி மானை மருவி - யருண 78

னெழுமுன்னே யன்ப ரிசைமறையி னார்ப்பும்
பழுதிலா வீணையொலிப் பண்பும் - விழவறியச் 79

சாற்று முரசொலியுஞ் சங்கவொலி யும்மடியர்
போற்றமுரு காவொலியும் பொங்கியெழக் - கூற்றினைமுன் 80

காதினான் மைந்தன் கடுகத் துயிலினைநீத்
தேதினான் மெய்ப்பொருளை யேத்தன்பர் - தீதறவே 81

திருமஞ்சனமாடல்

பெற்றுப் பெருமையுறப் பேருலாக் கொள்ளநினைந்
துற்றவா னைந்து முயல்பாலு - முற்று 82

ததியும் பிரசமுஞ் சந்தனமு நீறும்
விதிநூற் கனித்தொகையு மேலாங் - கதியுதவுந் 83

தண்பனிநீ ரும்மிறைவன் சார்சரவ ணப்பொய்கை
வன்பனி நீரு மகிழ்ந்தாடிப் - பண்புமிகு 84

மாதிசைவர் நீடுமுய ராகமத்தி லேயரனா
ரோதிசைவிற் செய்பூசை யுட்கொண்டு - கோதிலுயர் 85

திருவாபரணம் புனைந்தருளுதல்

பொற்றூச தார்த்துப் புறங்கச்சு வீக்கியிரு
ளூற்றதென வோது முயர்குழலை - முற்றுமறைத் 86

தம்பொன் மகுட மணிந்து கதிர்முழுது
மிம்பரினில் வந்ததென வெண்ணவே - கம்படரும் 87

வச்சிரநற் றோடு வளர்ந்திலங்க நன்னுதலி
னிச்ச முயர்திரு நீறணிந்து - மெச்சுமடைக் 88

காயருந்திக் கந்தரத்துக் கண்ட சரமணிந்து
மேயமுத்து மாலை விளங்கவொளி - நாயகமாஞ் 89

செம்பருதி யென்னத் திகழ்மகரி நற்பதக்கஞ்
சம்பருளு மக்கமணி தான்மலைந்து - நம்பரன்றன் 90

தோளிடைநற் கேயூரஞ் சூட்டிவலி யாகமிசை
வாளொளிசெய் மின்னல் வளைந்ததெனக் - கோள றுநூல் 91

சூட்டியரை ஞாணரையிற் றோன்ற மணிக்கடகம்
பூட்டிநவ கோளும் பொலன்கழல்கள் - வேட்டதனைப் 92

பற்றியதே போலப் பகரு நவமணிகள்
முற்றொளிசெய் நூபுரமு முன்னணிந்து - கொற்றப் 93

பிரணவத்தை யன்பர் பெரிது நினைந்து
சரண மெனத்துதிக்கத் தங்கும் - பெருநல்வான் 94

வில்லென்ன வம்பொன் வியன்றிரு வாசியுற
மல்லர் கொடிதழுவு மாவுரத்துச் - சொல்லரிய 95

கந்தங் கமழும் களபகத் தூரியணிந்
தந்தமிலா மேனி யழகதனை - முந்து 96

சுருதி மிகத்தேடித் தோன்றரியான் சோதிப்
பருதிநிலைக் கண்ணாடி பார்த்து - முருகுவளர் 97

மல்லிகை முல்லை மருக்கொழுந்தி னாற்றொடுத்த
பல்லியலார் கோதை படர்ந்திலங்க - மெல்லியலார் 98

இன்ன லுறமயின்மீ தேறி முரசொலிப்பப்
பன்னு முழவதிரப் பண்புடனே - நன்னயமார். 99

சங்கந் தொனிப்பவுயர் தக்கை குழல்பேரி
துங்க முழவுதிண்டி தூரியங்கள் - பொங்கவிசை 100

நாக சுரமதிர நாரதருந் தும்புருவும்
வேகவிசை பாடவரை வெம்முலையா - ராகத் 101

தெழுகளை நீங்க விருகவரி வீசப்
பழுதி லடியார் பணிய - முழுது 102

மலக்கணற வந்திக்கு மன்பர் பவத்தை
விலக்குவபோ லாலவட்டம் வீசத் - துலக்குமுறை 103

வல்லோர் மறைமுழங்க வான்புறவம் வந்தோனுங்
கல்லேநற் றோணியெனக் கண்டோனு - நல்லநிதி 104

யாற்றிலிட்டுச் சம்பருளா லாரூர்க் குளத்திலெடுத்
தேற்றுபெரு மானு மிறைசிவனைத் - தோற்று 105

நரிபரியே யாக்க நடத்தும் பிரானு
முறையேசெய் நூல்கள் முழங்கக் - குறைவின்றி 106

யாண்ட வருணகிரி யண்ண றிருப்புகழுங்
காண்டகுசீ ரோங்கிக் கறங்கவருள் - வேண்டடியார் 107

பல்லாண்டு கூறப் பரந்து சயசயவென்
றல்லாண்ட கூந்த லணிமுலையார் - மல்லாண்ட 108

திண்டோள்கள் கொள்ளுந் திருட்டிபரி காரமா
வெண்டோட்டுக் கைகள் விரித்துப்பொன் - தண்தட்டி 109

லாலத்தி சுற்ற வணிமிகுவா யில்கடந்து
கோலப்பூம் பட்டுக் குடைநிழற்றச் - சீலத்தேர் 110

விண்ணவர்க ளைந்தருவின் விண்பூ மழைபொழிய
மண்ணவர்க டன்னாம வாழ்த்தெடுப்பப் - பண்ணமருந் 111

தெய்வானை வள்ளி திகழ வருள்மாரி
பெய்வான நாதன் ·பெரிதேறி - மைவான 112

**உடன்வருந் தேவர்கள்.**

வண்ணன் களதமு மாதேவ னேறுமழை
வண்ண னுவணமு மாலுந்திப் - பண்ணவனூ 113

ரன்னமுமு ருத்திரர்க ளாறைவ ரேறுமொளி
பன்னிருவர் யந்திரமும் பானிலா - மன்னிவளர் 114

மானமு மஷ்டவசு வானிருடி யோரெழுவ
ரான விவர்வருநல் லாதனமு - மானமிகு 115

காரி யிருவர் களிறும் புரோகதியும்
வீரரொன்பான் றேருமுயர் விண்ணிறைவன் - வாரணமுந் 116

திக்கெட்டுங் காப்போர் திகழு நரர்விலங்கு
மிக்குயருங் கோள்கள் விளங்கரியுந் - தக்கசீ 117

ரேழு மடவா ரிலங்கு விலங்குபுள்ளும்
யாழின் முரியருளு மண்ணலூர் - மாழைமணி 118

முத்தூர்தி யும்வாய்மூர் முன்னவனின் கேடகமு
மத்தனன்ப னேறும்வெள் ளானையுஞ் - சித்தப் 119

பெருந்துறையிற் கோயிலமை பெம்மானி னேறு
மரன்றோழன் கஞ்சிகையு மாரூர்ப் - பரனையிராத் 120

தூதுவிட்ட பெம்மானார் சொல்லுந்தொண் டத்தொகையு
ளோதிவைத்த நாயன்மா ரூர்தியுங் - கோதறுநற் 121

சீர்ப்புகழைக் கந்தனடி சேர்த்தபிரான் கேடகமுங்
கூர்ப்புக் குமர குருபரனி - னார்ப்பறுகுங் 122

காம னவந்திகையுங் காந்தருவர் பைசாசர்
சேமவிஞ்சை யர்யோகர் சித்தசுரர் - மாமகரம் 123

பூதர் கருடர் புகழ்சா ரணரியக்க
ரேதமில்விண் வாச ரியலுரகர் - மாதேவ 124

ரேமமுறு கோக்க ளிசைதைத் தியர்நிருத
ராமிவரும் பூவிற்பா லாழியெனச் - சேமநிதி 125

யாகுந் திருநீ றணிந்துவரு தொண்டரும்
வாகு மிகுபுயத்து மாறனும்வண் - ணீகைமிகு 126

சோழனுஞ் சேரனுஞ் சொல்லுமறை யோர்களுங்
கோழிப் பதாகைக் குமரனுரு - தோழமையால் 127

தீண்டும் பெரும்பேறு செய்யுமறை வாணரு
மாண்ட லுறவரமா வண்வடிவே - லாண்டகை 128

**திருச்சின்னம்**

வந்திப் பவரிடர்கள் மாற்றத்தே ரூர்ந்துவந்தா
னந்திப் பிறையணியு மண்ணற்கு - முந்துநாள் 129

ஞானப் பொருள்விளக்கு நங்குகன்வந் தான்றேவ
சேனைக் கிறைவந்தான் செய்யகான் - மானுக் 130

கிறைவந்தான் காழி யினில்வந்தான் வந்தான்
கறைமேனிக் கைமுகத்தான் றம்பி - முறையேவந்
131

தான்முகை நீக்குஞ் சரவணப வன்வந்தா
னான்முகனு மாலு நயந்தறியா - வானவன்செவ் 132

வேள்வந்தா னென்ன வியன்றிருச்சின் னம்மார்ப்ப
வாள்விழியா ராட வருகுழுவுக் - கேழ்கடலு 133

**குழாங்கள்**

மொப்பில்லை யென்னவுல குய்யமறு கெய்தினனால்
செப்புகலை விஞ்சையரின் தேவியரு - மைப்படியு 134

நாட்டத்துக் கந்தருவ நல்லாருங் கின்னரரி
னாட்டியரு நாக ரரிவையருங் - கோட்டசுரர் 135

கன்னியருங் கிம்புருடர் கன்னியருஞ் சாரணரின்
கன்னியரும் பூதலத்துக் கன்னியரு - மன்னுமயில். 136

தாரகற்செற் றோனைத் தாங்கத் தவஞ்செய்த
சீரகத்தைக் கண்டுதெரி சிப்பமென - வோரகத்தே 137

யெண்ணி யடைமயில்க ளென்ன முருகனெழில்
வண்மை யறிய வருமடவார் - நண்ணுமனை 138

முன்றிலில்மா டத்தில் முகப்பில்திட் டையிற்செய்
குன்றினிற் சாலத்திற் கோபுரத்தில் - மன்றில் 139

பலாப்பழத்தி லீமொய்க்கும் பான்மையே போல
உலாப்போது மண்ண லுளத்தி - லுலாப்போதுந் 140

தெய்வத். திருவருளாஞ் செந்தேனை வான்கயலா
மைவைத் தகன்றவிழி வண்டுகளா - லுய்யவுண்பார் 141

வானோ ரிறைவன் மகளை வழுத்துவா
ரேனையோர் பெண்ணை யிறைஞ்சுவார் - வானநீர்க் 142

கங்கை மதலைதோள் கண்டு தமதுவரைக்
கொங்கையிணை நோக்கிக் குழைவரகம் - பங்குயரும் 143

வள்ளிதெய்வ நாயகியை மாமயிலை யன்பரெலா
முள்ளுமீ ராறுகணை யொள்வேலை - வெள்ளைநீ. 144

றேய்ந்த திருநுதலை யின்முகத்தைப் புன்முறுவல்
வாய்ந்த மலர்வாயை வாகுவினை - யாய்ந்தமராத் 145

தாமத்தை யாயுதங்க டங்கு மலர்க்கரத்தை
நாமத் திருவடியை நண்ணெழிலைக் - கோமகனைக் 146

கண்ணார நோக்கிக் கசிந்து வியந்துவப்பர்
அண்ணாந்து நோக்கி யழகென்பர் - மண்ணாளுஞ் 147

சேயோ னுவக்குந் திருத்தே ருலாக்காண
மேயோமே யெங்கடவ மேலென்பர் - நேயமிகு 148

காரூர்தி யென்னவே கண்களோ ராயிரம்பெற்
றாரவரே மேலா மமரரென்பர் - வீரமயி 149

லேறுவாற் பார்த்துயிர்த் தெம்மையணை வீரென்று
கூறுவார் மால்கொண்டு குன்றுவார் - சேறுமிகு. 150

மாலை யணியென்பார் மாலை யழியென்பார்
வாலைப் பெருமானே வாவென்பார் - சீலக் 151

கொடிக ளிருவர் குலவு பெருமாள்
படியருள்வ ரென்று பணிவா - ரடிகளுக் 152

கெங்கணீர் மஞ்சனமோ வெந்தொடிகள் பூசனைக்குத்
தங்கு திருப்பள்ளித் தாமமோ - விங்குறையுங் 153

காம னெமைவருத்தல் காணுமிறை வாவென்பார்
யாமமுற்று மெம்மிடர்நீக் காயென்பார் - சேமத். 154

துகிலிழப்பார் மாரன் றொடுகணையாற் றுன்ப
மகமுறவே யொன்று மறியார் - மிகவெயர்வை. 155

சிந்துவார் கொங்கை திரண்டுவிம்ம வஞ்சியிடை
பந்ததனைத் தாங்காது பாரத்தால் - மந்திரமுண் 156

புல்லோனைப் போலப் புரள வருந்துவார்
நல்லோனே யெம்முடைய நாணையழித் - தில்லிருவா 157

வும்முடைய நாணை யுவந்தாகத் தேயணிந்தீர்
வெம்மலையிற் செண்டை விரட்டினீ - ரெம்முலையிற் 158

செண்டை விரட்டுவீர் செவ்வாய் திறந்தொருகா
லண்டைவரு வேனெனன் றறைந்திடீ - ரெண்டிசைக்கு 159

மிக்கான செம்மலே வேலாயென் பாருருவில்
மிக்கா ரிவருள் விளங்கொருத்தி - தக்க 160

### பேதை

பருவச் சிறுபேதை பார்மகன்றன் பாண
மருவப் பெறாத மடமா - னுருவினி 161

லொப்பற்ற காளையர்க ளுள்ளமுறா மாமயிலாள்
செப்பழகோர் தெய்வவுருக் கொண்டென்ன - விப்புவியி 162

லேய்ந்ததிருப் பாவை யினியமல ரோதிமநீர்
வாய்ந்த வளைமருவா வண்டரள - மாய்ந்தமலர் 163

பூத்தறியா வஞ்சி புகமு மணிச்சுரங்கம்
வாய்த்தறி யாதவிள மாணிக்க - மேத்தருசீர்க் 164

கொம்பறாத் தேறல் குறைவில் மருக்கொழுந்
தம்பறா மாரனெடா வங்கன்னல் - வம்பறாச் 165

சோலை பொதியமலை தோன்று முயர்தென்றல்
வேலையிடைத் தோன்றாத விண்ணமுதம் - பாலையுணப் 166

பாவையினைத் தோன்றாப் பயோதரத்திற் சேர்த்தணைப்பா
ளாவலுடன் சித்திரவா ழைக்கனியைத் - தாவறுசீர் 167

வன்னிக்குக் காட்டி மகிழ்ந்துண்ணச் சொல்லுவாள்
துன்னு புளகத்துத் தோன்றுருவைத் - தன்னுடனே 168

சிற்றி லமைத்துத் தெருவில் விளையாட
வுற்றணை வாயென் றுரைசெய்வாள் - கொற்றமுலைப் 169

பாலருந்து கின்றதிலை பாவைமருந் தூட்டினாற்
பாலருந்து மென்று பகருவாள் - ஞாலமிசைக் 170

கூர்த்த மதியிலார் கொண்டுசெயு நற்றொழில்போ
லார்த்து முடியா வளகத்தாள் - தீர்த்தத்துப் 171

பங்கயங்க ளென்னப் பகரு மிணைவிழியாள்
திங்களென வோதுந் திருமுகத்தாள் - தங்குகுழ 172

லென்ன விசைக்கு மிளமழலை வாயினாள்
துன்னுவித்தில் மாமரங்கள் தொக்கதுபோல் - முன்னநெடு 173

மால்செவியி னுள்ளே மறைந்தமது கைடவர்போல்
வாலியெய்ய ராமன் மறைந்ததுபோல் - வேலை 174

யொளித்தமைநா கம்போ லுமையிறைவன் வேணி
யொளித்த பகீரதிபோ லும்பர் - களிக்குமிறை 175

யம்போ ருகத்தொளித்த வாகண் டலன்போல
மொய்ம்பேறத் தோன்றா முலையினாள் -
பைம்பொழில்வாய் 176

மன்னுகொடிப் பந்தர் மணப்பந்த ராவாவி
யுன்னுமரக் காம்ப லுயர்தீயாத் - தன்னுடைய 177

கிள்ளையே வேட்டற் கிரியைசெயு மந்தணராக்
கள்ளையே நெய்யாக் கடிவிரவு - வெள்ளைநிறப் 178

புன்னை யரும்பே பொரியாகப் பொற்பாவைக்
குன்னுமணஞ் செய்யு முயர்காலை - மன்னுவேல் 179

வேந்தன்வந் தான்றேவ வேழ முவந்தணையுங்
காந்தன்வந் தானென்னுங் காகளமுந் - தாந்தமெனக் 180

கிண்ணொலிசெய் பல்லியமுங் கேட்டு முலைத்தாயர்
விண்ணவனைச் சேவிக்க மேவினரால் - புண்ணியத்தாள் 181

தாயர் தொழப்பார்த்துத் தானுந் தொழுதிறைஞ்சி
யாயவிவர் சிற்றி லடைந்தனரால் - தூயவென 182

சிற்றிற் சிறுசோ றுகந்தோ சிறியனேன்
கற்றகழற் காயாடல் கற்கவோ - சொற்றகைய 183

வம்மா னிறைவ னருளு மணிமுருக
னம்மான் மகள்கணவ னாறுமுகப் - பெம்மானிங் 184

கேய துரைமி னெனப்புகன்றாள் பேதையுயர்
தாய ரதுகேட்டுத் தையலே - யாயவிதென் 185

வேதியர்க ளாகமமா மெய்ந்நூல் முறையேசெய்
கோதி லமுதுண்ணுங் குமரன்றான் - தீதறுநின் 186

சில்லடிசிற் காகவிரு சேருவனோ முத்தொழில்செய்
வல்ல பெருமான் மறைப்பெருமான் - சொல்லுகழற் 187

காயாட விங்கண் கடிதி லடைவனோ
வாயிவ்வா றோத வணங்கும்பின் - மேயதற்குக் 188

காரணமே தென்னக் கடியுலாப் போந்தானென்
றாரமுடை யாய ரறைந்தனரால் - பேரமுதம் 189

தாவி றிருத்தேரிற் றங்கு மிளையோனை
யாவ னெனக்கேட்டா ளன்னைமார் - தேவரது 190

சேனை யிறையென்றார் தெய்வச் சிலம்பைவள்ளி
மானையெவ ரென்றாள் மனையென்றார் - வானயிலை 191

யென்னென்றாள் கூர்வடிவே லென்றார் சிகாவளத்தை
யென்னென்றாள் மாமயிலென் றேத்தினா - ரன்னதனைத் 192

தத்தையுடன் வைத்துவிளை யாடத் தகவுடைய
வத்தனிடம் வாங்கி யளியுமென்றாள் - கர்த்தனுமவ் 193

வாகனமா யூருமிள மாமயிலை யீவானோ
வேகனையே யென்ன விருகணீர் - மாகதிர்கள். 194

வீசுந் தரளம்போல் விட்டா ளிறைவனுமவ்
வாசி றெருவகன்றா னங்கொருத்தி - பேசும் 195

## பெதும்பை

பருவப் பெதும்பையுயர் பார்மகன்றன் பாண
மருவ நினைக்கு மடமா - னுருவத்துச் 196

செந்தா மரைத்திருவின் செவ்வி வளரன்னம்
பைந்தா துகாத பருமரும்பு - கந்தரங்கண். 197

டாடாத மஞ்ஞை யழையாத கோகிலம்
வாடாத மன்மதனூல் வாசிப்பாள் - கோடாத. 198

வாய்சரவ ணத்திலுய ரண்ணலுருக் கூட்டுதல்போ
லேய முடித்த விருங்குழலாள் - தூயநுதல். 199

வெண்பிறையே யென்ன விளங்குவாள் சேல்விழிகள்
தண்சுரும்பே யென்னுந் தகைமையாள் - வெண்சங்க 200

மென்னுமணி கண்டத்தா ளென்பினைப்பெண் ணாகச்செய்
மன்னன்கைத் தாளம்போல் வான்கமுகிற் - றுன்னுமிளங் 201

காயைப்போற் புற்றிலுறு கட்செவியைப் போற்சிறிது
தூயமுகங் காட்டுந் துணைமுலையா - ளாயவொளி 202

வெங்கதிர்க்கு மில்லையென மேவுமிள மூரலாள்
செங்கைகள் மாந்தளிர்போற் செம்மையாள் - துங்கமணம். 203

வேட்டுத் தனதுகிளி மென்மணத்தை நோக்கியுள
வாட்ட மடைந்து வருந்துவா - ளீட்டமாய் 204

வண்டு பயிலு மலர்முகத்தாள் மாளிகையில்
தொண்டியற்ற மன்னுமுயர் தோழியரோ - டண்டர்பதி 205

நந்துமுயர் மாடத்து நாடம் மனைகழங்கு
பந்து பயில்காலை பண்புடனே - சந்தநிறை. 206

யோவியந் தீட்டு மொருவன் வரக்கரிய
காவியங் கண்ணி கழறுவா - ளோவியனே. 207

தோகை வரைவளருந் தோன்ற றிருவுருவை
மாகயி லாயன் மகனுருவை - வாகையுறு. 208

சேவற் கொடியானைச் சீரார் படத்துவரைந்
தாவ லுறுமெற் களியென்றாள் - மாவலனு 209

மிப்படிய னிவ்வடிவ னிக்குணத்த னென்றெழுதிச்
செப்பமுடி யாதான் றிருவுருவை - மெய்ப்புலவ. 210

நாம விறைவனை நாகங் களுக்கிறைவ,
மாமறையாற் றேடரிய மன்னவனை - யாமெழுத. 211

வல்லோமா வாயினுமென் மாதே யுனக்கவனை
நல்லார்கள் சொல்லுவபோ னாட்டியே - யொல்லையினி 212

லீவே னெனவுரைத் தெம்பெருமா னல்லுருவை
யோவியமாத் தீட்டி யுவந்தளித்தான் - தேவியரை 213

யாரென்றாள் மானி னமரர் பெருமானின்
சீருயரு மக்கள் தெரியென்றான் - நாரியரைப் 214

பார்த்துப் பெருமூச் செறிந்துபரன் பக்கத்தே
சேர்த்தவ ளையுமெழுதச் செப்பினாள் - கூர்த்தமதி 215

கொண்ட கரவலவன் கூறுவான் கந்தனடி
யண்டவெல் லோர்க்குமெளி தாகுமோ - பண்டைநா 216

ளில்லா வழியே யிவனெழுதி னானென்றே
யெல்லோரு மென்னை யிகழுவார் - நல்லாய்கே 217

ளின்றிறைவன் போது மினியவுலாக் காட்சியினி
னன்றுநினைக் கண்டனனே னாளையவ்வா -
றொன்றெழுதி 218

யீவே னெனவுரைத் தேகினா னோவியன்
மாவேள் மணித்தே ருடன்வந்தான் - பாவைமறு. 219

கேகிச் சகிகளுட னெம்பெருமா னையிறைஞ்சிப்
பாகனைய சொல்லுடையீர் பாங்கிமீர் - நாகியரோ. 220

டியானு மொருத்தியா விவ்விளைஞன் பாலிருக்க
வேனாகா தென்ன வியம்பினாள் - மானமுறு 221

தோழியரு மாதே சொலுமப்பன் காபாலி
வாழியனை யோநன் மலைநீலி - சூழுமம்மான் 222

வெண்ணெய் திருடி விளங்குமுன்னோன் மாவயிற
னண்ணலிவ னிப்பரிசுக் காகவோ - யெண்ணுமயல் 223

கொண்டாய் மிகவென்று கூறி யுடனகைத்தார்
வண்டாருங் கோதையொன்று மாறுரையாள் - தண்டாரா. 224

ரும்பர் பெருமா னுயர்குமரன் சேயிளைய
நம்பன் றிருத்தேர் நடத்தினான் - கும்பமலைக். 225

மங்கை

கொங்கையாள் மாரன் குலவ விரும்புமெழில்
மங்கைப் பருவமட மங்கையாள் - தங்குமெழிற் 226

காளையர்க்கு மையற் கடுவாகு நோயீந்து
கூளியா னோய்தீர்க்குங் கொள்கையாள் - வாளியான். 227

போகநூல் கற்றுப் பொருளறிந்து பூரிப்பாள்
நாகிறைவன் றோளணைய நாடுவாள் - வேகமின். 228

காசினியில் வந்ததெனுங் காட்சியாள் வாசவனி
னாசிலுய ரூர்தி யளகத்தாள் - மாசிவனின். 229

வேணி வளருமதி யன்ன வியனுதலாள்
நாணி யெனும்புருவ நங்கையாள் - மாணெழில்சேர். 230

வள்ளி யினைப்பயந்த மான்விழிபோ லேயிறைவ
னுள்ள முவக்கு முயரயில்போற் - கள்ளவிழிச் 231

சாரங்கங் கொவ்வைத் தனிக்கனிச் செவ்வாயாள்
சாரங்கி யென்னமொழி சாற்றுவாள் - நீறங்கன். 232

தோன்று குழலனைய தோளினா டோகைமலை
போன்ற தனத்தினாள் பூவாளித் - தோன்றலுடல். 233

மானு மிடையினாள் வானுயரு மோடையினை
மானுமக லல்குலாள் வான்கதலி - மானுந். 234

தொடையினாள் நான்முகனின் சோதிவள ரன்ன
நடையினாள் பூஞ்சோலை நண்ணிப் - புடையினார். 235

சேடியர்கள் கூறத் திருவூச லேறிமணிச்
சூடகங்க ளார்ப்பத் துணைவிழிகா - தோடநுதல். 236

வேர்வை யரும்ப வியனூ புரமொலிப்பக்
கூர்விழியா ளாடிக் குதுகலித்துப் - பார்வரையான். 237

வண்மையுயர் பாங்கியராற் கேட்டு மகிழ்காலை
திண்மையுடை வேலான் றிருத்தேரி - லண்மையுறுந் 238

தொண்டர்க் கருள்புரியத் தோன்றினான் மங்கையடைந்
தண்டர்க் கரியானை யஞ்சலித்தாள் - புண்டரிகத். 239

தாளான் மறுகு தனைக்கடந்தான் மாமயிலாள்
வேளான் கணையால் மிகமெலிந்தாள் - தோழியர்கள் 240

மாதுக் கரசனைய மாமயிலைக் கொண்டேகிப்
போதுப் படுக்கை புகுத்தினார் - நாதன். 241

திருமாலை வேண்டுமுயர் செம்முலையா ளூற்ற
பெருமாலை கண்டு பிதற்றி - நறுமாலை. 242

வாசம் புரியுமிட மென்ன வளர்பெருமா
னேசம் புரியுமுயர் நித்தனே - யாசையினை. 243

நீக்குவா யென்னு நிருமலா யென்னுமிடர்
போக்குவா யென்னும் புகழ்முலைகள் - நோக்கி. 244

நெடிதுயிர்க்குந் தத்தையினை நீபோய் மயலைக்
கடிதுரைப்பா யென்னக் கழறு - முடிசோரு. 245

மிப்படி யாகு மிவடன்னைத் தாயரடைந்
தொப்பிலான் மாலை யுனைமருவச் - செப்புவே 246

மாலை யளித்துன்னை மருவுவா ராகலினீ
மாலை யொழிக்கவென வாணுதலுஞ் - சாலவே 247



## மடந்தை

யாறினா ளங்கொருத்தி யாயு மிழைமடந்தை
மாறில் மதவேளின் வான்கரும்பு - கூறுமதன். 248

காமச் சுவையமிர்தங் காமப் பெருஞ்செல்வ
நாமத் திருத்தணியி னற்சுனையிற் - சாமக். 249

கருங்குவளை யில்வளருங் காமருபூந் தும்பி
பருங்கொன்றைக் காயளக பாரஞ் - சுருங்குநுதல் 250

விற்கோல மானாள் விழியாலங் காட்டினாள்
மற்கோண மெட்பூ வணத்தினாள் - சொற்பால. 251

வெண்முல்லை வாயினாள் மேவுவஞ் சைக்களத்தாள்
வன்முலைகள் வல்லமெனு மாணிழையாள் -
பண்மொழிகள் 252

பாலொடுதேன் கூடலாள் பாரிலிடை வஞ்சியாள்
மாலுதரங் குற்றால வாய்மையாள் - சாலவே. 253

மார னுருவனைய வஞ்சியிற் காஞ்சியாள்
சீருறுமா யூரமெனுஞ் செவ்வியா - ளாரல்குல் 254

மாநாகர் கோவிலாள் வாழ்கஞ்ச னூரன்ன
சீநடையாள் சேடியினை நோக்கியே - நானிரவிற் 255

பஞ்சமலர்ப் பாயற் படுத்துறங்குங் காற்கனவி
லஞ்சுகின்ற வேலினா ராறுமுக - மெஞ்சலிலாப் 256

பன்னிரண்டு செங்கைகள் பாரக் கதம்பமலர்
மன்னியிவண் வந்தனரால் மாசகன்று - துன்னுநீ 257

ராரென்றே னெந்தை யணிமுடியி லாரென்றார்
நீரென்றே னென்பிறப்பு நீரென்றார் - நீரெந்த 258

வூர்நாடென் றேனல் லுறவேநா டென்றுரைத்தார்
பேர்மாதே வாவென்றேன் பின்னுமவ - ரோர்மாதே. 259

வாவென் றுரைசெய்தார் வானவா சம்போகந்
தாவென் றுரைத்தேனச் சண்முகனு - மாவின்று 260

சம்போகந் தாவென்று சாற்றினா ரிவ்வேளை
வெம்பாகாஞ் சொல்லாய் விழித்திட்டே - னம்பியிதற். 261

குற்ற பலனை யுரையென்றாள் சேடியுமுன்
வெற்றி மயூரமலை மேவினோன் - சொற்றகைய. 262

வள்ள லுனைப்போற்ற வந்தானென் றென்கருத்தி
லுள்ளுகிறே னென்ன வுவந்திருந்தாள் - கள்ளமலர் 263

மாலையான் மாயூர மாமலையா னவ்வழியே
கோலச் சயந்தனத்துக் கூடினான் - சாலவிவ. 264

ணின்று கரங்குவித்தா ணீள்காமப் பித்தேறி
யொன்று மறியா துருகினாள் - தென்றல்வேள் 265

வில்லம்பு பட்டு மெலிந்தாண்முன் னாட்கண்ட
நல்லகன வெண்ணி நலிந்திட்டாள் - சொல்லுவளை 266

நீங்கினாள் கந்த நிமலன் புயத்துக்கா
வேங்கினா ளாறுமுக வெம்பிரா - னாங்கிருந்து. 267

செவ்வேள் திருத்தேர் செலுத்தினா னன்னையணைந்
திவ்வா றிரங்கு மிளமகளின் - செவ்வியறிந். 268

தாய்சேயை நோக்கி யணியா ரிருமனையை
மேயநீர் சேயை விரும்பினிரோ - வாயவிவள். 269

கைவளையில் லாதுமது கைவளைகள் மேவாதோ
மெய்வளரு மேகலையை யன்றியுமக் - கைவளரு 270

மேகலையின் றோமகளின் மென்றுகிலல் லாதுமக்
காகுந் துகிலொன் றறியீரோ - வேகமா. 271

யித்தொழிலைச் செய்யவோ யிங்கணைந்தீ ரென்றறைந்து
தத்தைமொழி யன்னை தனதில்ல - நத்தினா. 272

அரிவை

ளன்ன திருத்தெருவி லாரமுத மாமரிவை
பன்னுகச்சி யேகாம் பரநாதர் - மன்னிவளர். 273

சூத மரம்வளருந் தோகைக் களகண்ட
மாதேவ னஞ்செழுத்து வாழ்வுறாப் - பாதகரி 274

னெஞ்ச மனையகரு நீள்குழலாள் சம்புகள
நஞ்சனைய கண்ணினா ணாடுமுகம் - பஞ்சமலர்ப். 275

பாணத்து ளொன்றனைய பண்பினா ளாடியெனக்
காணத் தகுஞ்செங் கபோலத்தாள் - மாணத்தன் 276

வேலைவிட முண்டநாள் விண்ணோ ரினிதுண்ட
மாலமுத மொத்தசுவை வாய்மொழியா - ளாலடியன். 277

முப்புரந்தூ ளாக முதிர்நாண் வளைத்தநாள்
செப்புநகை யன்ன சிறுநகையா - ளப்பிலுறு 278

சங்கன்ன கண்டத்தாள் சார்கச் சணிந்துபொன்போற்
பொங்கு பசலை புகுந்துதிரண் - டங்கத்தைச் 279

சின்ன மெனவிசைக்குஞ் செம்முலையாள் சேடியர்க
ளுன்னுபலர் நிற்க வுயிர்ச்சேடி - தன்னையழைத் 280

தோங்கிய செய்குன்றி னுள்ளிருத்தி யாவலொடு
மாங்கவளை மஞ்சனநீ ராட்டியே - வீங்குவிரைச் 281

சந்தனத்தைப் பூசினாள் தன்னா பரணமெலா
மந்தமிக்க தென்ன வவட்கணிந்தாள் - பைந்தொடியைக் 282

கட்டி யகமகிழ்ந்தாள் கைத்தாம்பூ லங்கொடுத்தாள்
மட்டில் மகிழ்ச்சியுடன் வாழ்த்தினாள் - கிட்டப்போய் 283

வஞ்சியே யென்றன் மனத்தில் விளைகருத்தைப்
பஞ்சாக நான்படும் பாடதனைக் - கஞ்சமுக 284

மாறுடையான் பாலே யறைவா யெனவுரைத்தாள்
மாறுசொலாச் சேடியுமம் மங்கையைப்பார்த் - தாறுமுகப் 285

பெம்மான்மா யோன்மருகன் பேருலா நாளையிவ்வா
றம்மவரு வானென் றறைந்திட்டாள் - கொம்மைமுலை 286

யாங்கதுகேட் டல்குல்வே ளாசை யினும்விரிய
வீங்குமுலை விண்ணடைய மெய்ம்மயிர்க்கூச் - சோங்கியே 287

மன்னிய காமம் வளர்காலை மாலைவர
யென்ன மறலிநிற மிந்நிறமோ - மன்னுமவ 288

னென்ற னுயிர்குடிக்க விங்கு பொருந்தினனோ
குன்றவேள் சிந்தை குடியிருக்கத் - தென்றல்வேள் 289

வில்லம்பென் னாகத்தில் மேவுவதெ னென்றுரைப்பாள்
வல்லம் புலியின் வளரொளியை - நல்லம்பாச் 290

சுட்டதெனக் கூறுவாள் தோன்ற னுதலழலாற்
சுட்டமதன் வாளி தொடுப்பதெனோ - விட்டப் 291

பொதிய மலைபிறந்த பூங்காற்றென் மேனி
யுதிர மருந்துவதெ னும்பர் - பதியினிட 292

மென்னிலைமை சென்றுரைப்பீ ரென்றுரைப்பாள் சேடியரை
யின்னனைய துன்பத் திளையாளுங் - கொன்னெடுவேல் 293

வேந்தன் றனதடியே மெய்ப்புணையாக் கொண்டிரவா
மேந்தற் கடலை யிகழ்ந்திகழ்ந்து - நீந்தினாள் 294

காலை யெழுந்து கடன்கள் முடித்திறைவன்
மாலை விரும்பி மறுகடைந்தாள் - வேலையுன் 295

நாடுதிருத் தேர்கண்டு நாளைவரு மென்றுசொன்ன
சேடி யினைநினைத்துச் சேவித்தா - ளாடினாள் 296

பாடினா ளண்ணலிரு பாதபங்க யஞ்சிரத்துச்
சூடினாள் தோத்திரங்கள் சொல்லினா - ணாடியவன் 297

செய்யதிருத் தோள்சேரச் சிந்தித்தா ளிவ்வமய
மையன் றிருத்தே ரகற்றினான் - நையுமிடை 298

தெரிவை

மங்கை யொருத்தி வளருந் தெரிவையாள்
பங்கயம் பங்கம் படைத்ததென - விங்கணைந்த 299

செந்திருவே யன்னாள் திகழ்நான் முகன்சிகுவை
நந்திவளர் வாணியெனு நாரியா - ளந்திவண 300

னுண்ட விடமனைய வோதியா ணீண்முடியிற்
கொண்டபிறை யன்ன குளத்தினாள் - புண்டரிகம் 301

போன்ற விணைவிழியாள் பொன்குமுத வாயினா
ளான்ற வருக்கை யணிமொழியாள் - சான்றகமு 302

காகுங்கண் டத்தினா ளம்பொற் கலசமெனு
மோக மளிக்கு முலையினா - ளாகத்தி 303

லூருமெறும்பொழுங்கை யொக்குமுரோமக்கொடியாள்
சாருந் துடியனைய தண்ணிடையாள் - தேரிலுறு 304

தட்டனைய வல்குலாள் தந்திக்கை போற்குறங்காள்
மட்டவிழுங் கஞ்சமெனு மாவடியா - ளிட்டமுடைப் 305

பெம்மான் மயூரகிரிப் பேராளன் றோளிணைகள்
கொம்மைமுலை சேர்கவெனுங் கொள்கையளா -
யம்மைமிகு 306

வன்னியைமா யூரகிரி மன்னன்பால் தூதனுப்பிக்
கன்னலிள வேளின் கணைபாய - மன்னந்திப் 307

போதுவர வுள்ளம் புழுங்கி நெடிதுயிர்த்து
மாதவனை யெண்ணி மனம்பதைத்துக் - காதலுறுஞ் 308

சேடியரை நோக்கிச் சிறியேன் படுந்துயரங்
கூடெவர்க ளாற்றிக் குறைதவிர்ப்பார் - மாடுவளர் 309

வேனிலா னையார் விரட்டுவா ரென்றுரைத்தாள்
பானிலா வன்னமுகப் பண்பினருள் - மானனைய 310

சேடி யொருத்தி திகழுமிசை யாழ்வாங்கி
நாடரிய வேலிறைவ னானிலத்திற் - றோடகங்கள் 311

மன்னு முயர்வாவி வான்காழி நன்னகரிற்
பன்னுசிவ பாதமனப் பண்புடையர் - ரின்னலுறுந் 312

தேசஞ் செழிக்கச் சிவனருளை வேண்டவவ
ராசில் மனங்களிக்க வன்னவற்குத் - தேசுமிகு. 313

சம்பந்த னாயுதித்த தன்மையுந் தோணிபுரத்
தம்பனைய கண்ணா ளருள்முலைப்பா - லும்பரெலாம் 314

போற்ற வருந்தியதும் பொற்றாளம் பெற்றதுவு
மேற்றமுத் துச்சிவிகை யேற்றியதும் - சாற்று 315

முயலகனோய் நீக்கியது முத்துவிதா னம்பெற்
றியலிசையாற் பொற்பதிக மேத்தி - வயல்சூழும் 316

வீழி மிழலை விமலன்பாற் பொற்காசு
தோழமையாற் பெற்றுச் சுருதிவனம் - வாழ்கதவம் 317

பூட்டியதுந் தென்னனுடல் பொங்குசுர நீக்கியது
மேட்டை நெருப்பிட் டெடுத்ததுவுந் - தீட்டுதமிழ் 318

ஆற்றிலெதி ரேறவிடு மப்பெருமை யுங்கொடிய
கூற்ற வமணரைக் கூர்க்கழுவி - லேற்றியது 319

மோடம் பதிகத்தா லோட்டியதும் புத்தநந்தி
மூடன் றலையிலிடி முட்டியது - மேடகத்துச் 320

செங்கனிக ளேற்றியதுஞ் சீர்ச்சிவநே சர்மகளி
னங்கம்பெண் ணாகவருளியதுஞ் - துங்கவொளி 321

தன்னிற் கலந்ததுவுஞ் சாரிசையிற் சாற்றினாள்
மன்னு மிரவகன்று வானொளியான் - துன்னினான் 322

பல்லியங்க ளார்ப்பப் பழுதில் குமரன்றா
னொல்லையினி லுற்றனனென் றோங்குகிளி - சொல்லவே. 323

வேள்யானை யன்ன விரைகுழலா ளன்னவனின்
வாள்கணை யன்ன மதிமுகத்தாள் - வேள்கரும்பை 324

யொத்தபுரு வத்தினா ளோங்குமுர சக்கண்ணாள்
கத்துமவன் காகளம்போற் காண்மொழியாள் - வித்தைமிகு 325

மாமகுடம் போலும் வனமுலையாள் மால்மகனுக்
கேமமுறு காலம்போ லேகினா - ணாமவேல். 326

வேந்தன் றிருவடியில் வீழ்ந்து வணங்கினாள்
சேந்தா வெனதாவல் தீரென்றா - ளேந்துமிழை. 327

சொல்லு மிதுகேட்டுத் தோழி யொருத்தியவண்
சொல்லுவாள் மஞ்ஞைமலைச் சோதியே - வல்லாய்நின். 328

மாமலையோ வெந்தலைவி மாமுலையோ நன்றென்று
வாம முறக்காண வந்திடாய் - நாமவே. 329

னற்படையோ வெந்தலைவி நல்விழியோ நன்றென்று
சொற்படையா யிங்கணைந்து சொல்லுவாய் - வெற்பனே. 330

வள்ளிமான் தாய் விழியோ மானிவளின் வான்விழியோ
வுள்ளவிவை யின்னன் றுரைத்திடாய் - தெள்ளுதமிழ். 331

நாதா வெனவுரைத்தா ணாதன் றிருத்தேரி
லோதா தகன்றனன்பி னோர்வனிதை - பூதலத்துக் 332

## பேரிளம் பெண்

காமன் றவத்தாற கடிதி னடைந்ததிரு
மாமயிற் பேரிளம்பெண் வாய்மையாள் - காமனூல் 333

கற்றுப் பயனறிந்த காரிகை வானழகு
பெற்ற மகளனைய பெட்பினா - ளுற்றமதன். 334

கைக்கணையி னீலக் கணையன்றி மற்றவற்றாற்
புக்க செயலறியும் பொற்பினாள் - மிக்கமலர். 335

சூடினா னன்னுசுப்புச் சோரு மெனநினைந்து
தோடலர்கள் சூடாச் சுரியலாள் - வேடனையுங். 336

கூற்றினையு மேவல்கொள் கூர்விழியா ளெண்ணொன்பான்
சாற்று மிசைவெல்லுந் தண்மொழியா - ளாற்றவிடை. 337

தாங்குமோ வென்றறியச் சாய்ந்ததோ வன்றியிடை
தாங்கா தெனவறிந்து தாலமுற - வாங்கிருந்து 338

நோக்குகின்ற தோதன்னை நோக்கியெதிர்ந் தோரையெலாந்
தாக்கி யலுத்த தகைமையோ - மூர்க்கர்முன் 339

சொல்லுமொழி கேளாது துன்பமுற்றுப் பின்புகுனி
நல்ல பொருள்விளக்க நண்ணியதோ - வல்லதிசை 340

யெட்டுச் சிலம்பைவெல வெண்ணிக்காஞ் சீபுரத்தை
முட்டியதோ வென்னு முலையினாள் - வெட்டவெளி 341

யான விடையினா ளாலவட்ட வல்குலாள்
மான வனிச்சமெனும் வானடியாள் - வேன்முதலைக் 342

காலைபகன் மாலை கடிதி னடைந்திறைஞ்சும்
வேலை யுடையாள் விமலனடி - சாலவே 343

யண்ணா மலையி லருணகிரி யாரணியும்
பண்ணார் திருப்புகழைப் பாடுவாள் - பெண்ணாவாள் 344

வள்ளி யெனுந்தனது வன்னியினை நோக்கியுயர்
வள்ளி மணாளன்றன் வண்புகழை வள்ளயிலார். 345

பெம்மான் றிருப்புகழைப் பேசெனச் சொல்லவது
வெம்மான் புகழை யிசைக்குங்கா - லம்மான்சேய். 346

வீதியினிற் றேரில் விளங்கினான் பேரிளம்பெண்
காத லுடனணைந்து கைகூப்பி - யோதிவருஞ் 347

சீர்ப்புகழ்க் கூட்டத்திற் சேர்ந்து திருப்புகழாற்
சூர்ப்படைவென் றோனைத்தொழுதிறைஞ்சி - யார்ப்புடன். 348

செல்லுங் குழுவுடனே தேர்நிலைக்குச் சென்றிறைவன்
வல்ல முருகனடி வந்தித்துச் - சொல்லரிய 349

வான்பெருமை பேசி வளரிறைவன் றார்பெற்றுத்
தான்பெரிய ளாயினாள் சாருமிவ்வா - றானிறைவன் 350

பாரிறைவ னண்டர் பதியிறைவன் மாமஞ்ஞை
யூரிறைவன் போந்தா னுலா 351

## வாழி

வாழி மயூரகிரி வாழி முருகனடி
வாழி யவனடியார் வாழியவே - கோழியயில்
மாமயிலும் வள்ளி வருதெய்வ யானையுஞ்
சேமமுற வென்றுஞ் சிறந்து .

**மயூரகிரி யுலா முற்றிற்று**

உ

# ஆடுக ஊஞ்சல் ஆடுகவே

## காரைக்குடி மெ. மெய்யப்பன்

ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே. 1

ஆழிப் படுக்கை கொண்டோனின்
அருமை மருகா ஆடுகவே
ஊழி தாண்டி நிற்பானின்
உத்தமச் செல்வா ஆடுகவே
வாழும் மனிதர் யாவருக்கும்
வழிக்குத் துணையாம் வேலவனே
ஆளுங் கவலை ஓடிடவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே. 2

ஆடகப் பொன்னால் ஊஞ்சலிட்டு
அதற்கு வயிரக் கயிறுமிட்டு
கூடிடும் அடியார் ஆட்டிடவே
குமரா ஊஞ்சல் ஆடுகவே
பாடுகள் குறைந்தே மாந்தரெலாம்
பண்பால் உயர்ந்தே வாழ்ந்திடவே
வாடிடும் பயிர்கள் வளம்பெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே. 3

முன்னே பின்னே சென்றாலும்
முளையில் ஒன்றி நின்றிடுமே
என்னே வாழ்க்கை என்றாலும்
எல்லாம் உன்னைச் சுற்றியதே

குன்றாக் குடியாய் எமையாக்கும்
குன்றக் குடியின் வடிவேலா
கண்ணே மணியே கதிர்வேலா
கவினாம் ஊஞ்சல் ஆடுகவே. 4

விண்ணவர் செல்வி தெய்வானை
வேடவர் மகளாம் வள்ளியுடன்
மண்ணகம் சுற்றும் மயிலேறி
மேதகு சேவற் கொடியாட
கொண்டிடுங் காதல் உணர்வோடு
கனிந்த நெஞ்சத் தூஞ்சலிலே
அன்புடன் ஏறி இனிதமர்ந்தே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே. 5

மண்ணைப் பிளந்து பெரும்பேட்டில்
மாபெரும் அருளுடை சுயம்புவென
பெண்ணின் நல்லார் இருவருடன்
பெருமயில் ஏறி வந்தவனே
கண்ணே தெரியாக் காட்டிடையே
கலங்கித் தவிக்கும் எங்களுக்கே
உன்னால் வழியும் தெரிந்துயர
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே. 6

ஆறடி நெடிதாம் உருவுடனே
அடியார் பக்தி உருவேற்ற
பேரருள் கொண்டாய் பெரும்பேடா
பிள்ளை நலிவினைப் போக்கிடவே
சீரடி வணங்கிட வந்துள்ளோம்
செல்வா அருளினைத் தந்திடுக
ஆரிருள் விலகி ஒளிபெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே. 7

ஆடுக ஊஞ்சல் ஆடுகவே முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதிக் கந்தன் திருப்பொன்னூஞ்சல்

சீ. விநாசித்தம்பி

## காப்பு

சோதியே அடியார்க்குத் துணைவா போற்றி
தும்பிமுகச் சுந்தரனே போற்றி போற்றி
நீதியே அண்டமெல்லாம் நிறைந்த கோவே
நெடுங்கிரியில் பாரதத்தை வரைந்த தேவே
ஓதியே அறிவரிய கருணை யாளன்
உன் தம்பி வடிவேலற் கூஞ்சல் பாட
ஆதியே மாணிக்கப் பிள்ளை யாரே
அடியேற்கு நினதுகாப் பருளு வாயே.

## நூல்

ஓங்கார மந்திரனே உமையாள் பாலா
உட்பொருளை அப்பனுக்கன் றுரைத்த சீலா
பாங்கான ஆறுபடை பயிலும் செல்வா
பங்கயனைச் சிறையிலிட்ட தேவ தேவா
பூங்கானக் குறமகளை வேட்ட நாதா
பொற்பதத்தை இதயமிசைப் பொருத்து வார்கள்
தாங்காணும் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 1

அற்புதமே கைலேசன் அருட்கு மாரா
அசுரரது குடிகெடுத்த அமர ரேறே
கற்பகமே பாலுண்ட கார்த்தி கேயா
கலைஞான ரசமூறிக் கனிந்த தேனே
பொற்பதமாஞ் சுகமருளும் புனித நாதா
பூரணனே வெற்றிநலம் பொலிதோ ளானே
தற்பரமே தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 2

புண்ணியனே பிரணவமெய்ப் பொருளே நீதி
பூத்தவனே காத்தவனே கூர்த்த வேலா
கண்ணுதலில் விளைந்தவனே கௌரி யம்மை
கையணைக்க ஒன்றுமிளங் கந்த நாதா
எண்ணரிய தவவேள்வி இசைந்த சூரன்
இரண்டுபட எரிதவழ்வேல் விடுத்த வீரா
தண்ணளிசேர் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 3

பேர்பூத்த உலகமெலாம் தூண்க ளாக
பிறைபூத்த சிவனுலகம் விட்ட மாக
சீர்பூத்த நான்குமறை வடங்க ளாக
செயல்பூத்த ஆகமநற் பலகை யாக
பார்பூத்த கலையாவும் பீட மாக
பயன்பூத்த மலர்பொலிந்த ஊஞ்சல் மேவி
தார்பூத்த தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல் 4

சந்திரனும் சூரியனும் குடைகள் தாங்க
தவமுனிவர் விண்ணவரும் சிவிகை தாங்க
இந்திரனும் அரியயனும் தீபம் காட்ட
இறையவனும் உமையவளும் அழகு தீட்ட
மந்திரமா கணநாதன் மாலை சூட்ட
வனமகளும் துரைமகளும் மகிழ்ச்சி கூட்ட
சந்ததமும் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 5

பண்மருவு மடியார்கள் பாடி ஏத்த
பதினான்கு புவனங்கள் கூடி வாழ்த்த

வண்மைமிகு சுரமகளிர் கவரி வீச
வந்தனைசெய் நாரதரும் யாழும் பேச
விண்மருவு கந்தருவர் கீதம் பாட
மேவியமத் தளநந்தி நாதம் போட
தண்முகில்சேர் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 6

நலமுடனே நின்பதியை நாடி வந்த
நாட்டமுள அடியார்க்கு ஞானம் கூட்டி
கலையுணரும் அன்பருக்குக் காட்சி காட்டி
கட்டளையின் மௌனவிதிப் பூசை ஏற்று
வலமுறையின் கனிபெற்ற அண்ண னோடு
வருமிடியின் துயர்தீர்க்கும் வைத்ய சீலா
தலைமைபெறு தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 7

ஆகமத்தின் முறைகாண அடியார்க் கெல்லாம்
''அன்பிலருள் பெருகு''மெனும் அர்த்தம் காட்ட
நாகமுறை பூவரசின் நன்னி ழற்கீழ்
நற்பாதச் சுவடுவைத்து நண்ணும் மேலாம்
யோகமுறு நெறிகாட்டி நோன்பு காட்டி
நூன்முறையி லடங்காத நுட்பம் காட்டி
சாகரம்சூழ் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 8

திருமுகங்கள் ஓராறும் ஆட ஆட
திருக்கரங்கள் ஈராறும் ஆட ஆட
திருவடியும் மணிமயிலும் ஆட ஆட
சேவல்வேல் திருக்குழைகள் ஆட ஆட
திருமார்பும் தார்நூலும் ஆட ஆட
தினைவள்ளி குஞ்சரியார் ஆட ஆட
தருமமுயர் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 9

சேவடியால் திருவீதி சிறக்க ஆடி
தீக்குளிப்பார் புரண்டழுவார் மனத்தில் ஆடி

காவடியைத் தூக்குமவர் உடலி லாடி
கற்பூரக் கரகமொடு கலந்தங் காடி
ஆவணிசேர் பூரணையிற் தீர்த்த மாடி
அத்தீர்த்த மாடுவார் தம்மோ டாடி
தாவலைவாய்த் தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 10

நற்கருணைக் கணபதியே ஆடீ ரூஞ்சல்
நமசிவய நாயகனே ஆடீ ரூஞ்சல்
பொற்கலசப் பூரணியே ஆடீ ரூஞ்சல்
புவிகாத்த நாரணனே ஆடீ ரூஞ்சல்
வற்கலையின் வள்ளியம்மா ஆடீ ரூஞ்சல்
வான்வந்த குஞ்சரியே ஆடீ ரூஞ்சல்
சற்குருவே தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவாழ் வேலவரே யாடீ ரூஞ்சல். 11

## வாழி

சிவநெறியும் அடியவரும் சிறந்து வாழி
திருமறையும் செந்தமிழும் சேர்ந்து வாழி
புவனமெலாம் அந்தணரும் ஆவும் வாழி
போற்றுமுயர் சேவலொடு மயிலும் வாழி
நவவீரர் நலம்வாழி வடிவேல் வாழி
ஞானகுஞ் சரிவள்ளி வாழி வாழி
தலமோங்கு தொண்டைமா னாற்றூர்ச் செல்வச்
சந்நிதிவே லவர்திருத்தாள் வாழி வாழி.

**செல்வச் சந்நிதிக் கந்தன் திருப்பொன்னூஞ்சல்**

**முற்றிற்று**

உ

# செல்வச்சந்நிதி முருகன் பெயரில் திருஊஞ்சல்

## வைத்தியர் ஆண்டியப்பர்

### காப்பு

பொன்னுலக மன்னவற்குப் பூங்கா வியருளும்
முன்னவனே ஆனை முகத்தவனே - என்னுடைய
தீத் தொழில்கள் நீக்கியே சிந்தைதனில்உறைந்து
காத்தருளல் உந்தன் கடன். 1

பொன் பொருந்தும் தென்கதிரைப் பதிபேரி லொன்றும்
புகழ் பொருந்தும் தொண்டவர் வேலவன் பதிவாழ்
மின் பொருந்தும் செங்கதிரைக் கந்தர் தன்மேல்
விந்தை பொறும் அன்ன ஊஞ்சல் விரும்பிப்பாட
வின்பொருந்தும் கொங்கைமலை மங்கை பாகன்
மைந்தனோடு கந்த ணிந்து மகுடம் தாங்கும்
கொன் பொருந்தும் சிந்தூர மாமுகன் கல்லோடை
குணபதியாம் கணபதிதாள் கும்பிட்டோமே. 2

திருமருவுபுணரி இருபுறமு மேவும்
தெய்வசின்னச் சந்நிதியில் சிறந்து மேவும்
உருமருவு ஓங்காரத்து முதல்வனாகும்
உந்தன்மேல் ஊஞ்சலிசை உவந்து பாட

மருமருவும் மலர்மாலை மதியமோடு
வைத்த சடை உத்தமனார் மகிழவீன்ற
கருமருவு மும்மதத்து கும்பதம்ப
கணபதியை எஞ்ஞான்றும் கருது வோமே. 3

## நூல்

நாதமுறும் ஓங்காரக் கோயில் மூட்டி
நம்புமகா மேருவைப்போல் தம்பம் நாட்டி
சோதிநிறை பானுமதி வளையைச் சூட்டி
தூங்கு கதிர்தாங்கு கரவடத்தைப் பூட்டி
பூதலமாம் மாதரெனும் பொற்பலகை ஈட்டி
புற்ப சயனம் பரப்பிப் பூதசுரகரார்க்க
வேத விதிப்படி ஏறிஆடீ ரூஞ்சல்
வேதநாயகி முதல்வா ஆடீ ரூஞ்சல். 4

நகர உகரங்கள் இரு தூணதாக
நான்வேத ஓங்காரம் வளையதாக
பகர அகரம் புரிந்த கயிறதாக
பன்னரிய றீங்காரம் பலகையாக
சிகரமொடு தகரமுறும் அடியார் வாழ்க
தெய்வசின்னச் சந்நிதியில் சிறந்து மேவி
அகர முதலானவரே ஆடீ ரூஞ்சல்
ஆறுமுக ஆண்டவரே ஆடீ ரூஞ்சல். 5

வட்டமலை எட்டுமிரு தம்பமாக
வன்னமுறும் ஆகாயம் வளையதாக
விட்டமுறும் உலகமது பலகையாக
வீரமணி வாசுகியே கயிறதாக
சிட்டர் இருபங்கில் தொட்டே ஆட்ட
சின்னவண்ணச் சந்நிதியில் சிறந்து மேவும்
அட்டதிக்கும் கொண்டாட ஆடீ ரூஞ்சல்
ஆறுமுக ஆண்டவரே ஆடீ ரூஞ்சல். 6

தேவர் முனிவோர்கள் வடந்தொட்டே ஆட்ட
சித்தவித்தி யாதரர்கள் சேர்ந்துபாட
பூமடந்தை நாமடந்தை முதலானோர் தேட
பொன்னுலகு மன்னனுடன் புகழ்ந்து கூட

தேன்மொழிசேர் இமயவரும் அன்பு கூர
சின்னவண்ணச் சந்நிதியில் சிறந்துமேவி
கோமளஞ்சேர் ஆறுமுகா ஆடீ ரூஞ்சல்
குறக்கொடிக்கு நாயகரே ஆடீ ரூஞ்சல். 7

வாமமுறு வாரணத்தின் பிள்ளை மேவ
மற்றவலப் பக்கத்தில் வள்ளிமேவ
ஏமன்முதல் இந்திரனும் கவரி சாய்ப்ப
இமயவரும் அடப்பமதை ஏந்தி நிற்பக்
கோமுறைசேர் இருஷிகளும் குடைகளேந்த
குலவுசின்னச் சந்நிதியில் குழந்தையான
மேவிவளர் வேலவரே ஆடீ ரூஞ்சல்
வேதநாயக முதல்வா ஆடீ ரூஞ்சல். 8

முத்தாட முடியாட மாலை ஆட
முண்டகந்தோய் செய்யகருங் குண்டலங்களாட
மத்தாரும் மருவில்செறி ஓடை யாட
வளமை செறிவாகு வளையங்களாட
கர்த்தாவின் காற்சிலம்பு கலீரென் றாட
கருதுசின்னச் சந்நிதியில் கருணையான
வித்தார மோடிருந்து ஆடீ ரூஞ்சல்
வீரமணி வாசுகியே ஆடீ ரூஞ்சல். 9

கருணைசெறி ஆறுமுகா கார்த்தி கேயா
கங்கையருள் காங்கேயா கருணைநேயா
பொருனர் தொழும் மந்திரதந்திர சொந்தகந்த
புனிதவனை அனுதினமும் போற்றுவோர்கள்
வருணமுறு நான்கினுமே வார்த்தை யீந்து
வருணமுறு சின்னச்சந்நிதியில் வாழும்
அருண வடிவேற் கரத்தாய் ஆடீ ரூஞ்சல்
ஆறுமுக ஆண்டவரே ஆடீ ரூஞ்சல். 10

## வாழி

மருமேவு சிவபரனும் உமையும் வாழி
வயங்கு திருநீறு சிவமணியும் வாழி

உருமேவு அரசன் மனுநீதி வாழி
உலவுமுயிர் பரவுகல் லோடை வாழி
கருமேவு முகில்வாழி கடலும் வாழி
கற்றறியா அடியேன் சொற்கவிதை வாழி
திருமேவு சேவலுடன் மயிலும் வாழி
சின்னச் சந்நிதி முருகர் வாழிதானே. 11

மங்களம் ஜெய மங்களம்
நித்தியசுப மங்களம்
ஆனைமுகவர்க்கு மங்களம் எங்கள்
ஆறிரண்டு கையருக்கு மங்களம்
செங்கமல நாதருக்கு மங்களம் செல்வச்
சந்நிதிவாழ் முருகருக்கு மங்களம்
வீராதி வீரருக்கு மங்களம் நல்ல
வெள்ளி மயில்வாகனர்க்கு மங்களம்
சோதிவடி வேலருக்கு மங்களம் சிவ
சுப்பிர மணியருக்கு மங்களம். 12

## எச்சரிக்கை

கருணாகரப் பொருளே கணபதியே எச்சரீக்கை
கதிராபுரி தரமேவிய கந்தா எச்சரீக்கை
கந்தா செல்வா கரமேவிய கருணா எச்சரீக்கை
வந்துயர் தீர்க்குமெங்கள் வணிகா எச்சரீக்கை
வணிகா செட்டிகுமரா கார்த்திகேசா எச்சரீக்கை
வருவார் பிணிநீக்கிய முருகா எச்சரீக்கை
முருகா அரிமருகர் ஆறுமுகனே எச்சரீக்கை
கருவான துதிக்கும் எங்கள்கந்தா எச்சரீக்கை
கந்தா கடம்பணிகா திருத்தணிகா சுப்பிரமண்யா
எத்தாகிய பேரூர் வருகந்தா எச்சரீக்கை
கதிரமலைக் கரசேஎனும் கருணைக் கிருபைக்கடலே
அதிரூப சிங்கார ஆறுமுகனே எச்சரீக்கை. 13

### பராக்கு

தந்திமுகத் தைந்துகரன் தம்பி பராக்கு
கந்தர் துணைவந்த ஒற்றைக்கொம்பா பராக்கு
கதிரமலை தனில்வந்த கந்தா பராக்கு
கனகமணி குஞ்சரிதன் கணவா பராக்கு
போதவடிவா யமர்ந்த புலவா பராக்கு
புள்ளிமயில் ஏறிவரும் புனிதா பராக்கு. 14

**செல்வச்சந்நிதி முருகன் பெயரில் திருஊஞ்சல் முற்றிற்று**

உ

# செல்வச் சந்நிதி வேலர்
# திருவூஞ்சல்

## த.பொ. கார்த்திகேசு

### காப்பு

திருவோங்கி வளரீழ மண்ட லத்து
சிவம்பெருக்கும் யாழ்ப்பாணத் தேயந் தன்னில்
தருவோங்கி வளர்தொண்டை மானா றென்னும்
தலமதனின் தென்பாலில் இனிது மேவும்
உருவோங்கி வளர்செல்வச் சந்நிதி யுற்று
ஒளிர்கின்ற வேலவர்மேல் ஊஞ்சல் பாட
மருவோங்கி வளர்சோலைப் பாங்கர் மன்னும்
மாணிக்கப் பிள்ளையார் காப்ப தாமே. 1

### நூல்

சொல்லாரும் நாதவிந்து கால்க ளாகத்
துதித்திடுநற் சத்தியதே விட்ட மாக
நல்லார்சொல் தந்திரநூ லிழைய தாக
நாடுகின்ற நான்மறைகள் கயிற தாக
வல்லார்சொல் உபநிடதம் பலகை யாக
வாகதரும் பிரணவமே பீட மாக
எல்லாரு மேத்துசெல்வச் சந்நிதி மேவும்
எழிலாரும் வேலவரே யாடீ ரூஞ்சல் 2

நக்கீரன் அருணகிரி நவிலு மின்னோர்
நலிவுற்ற துயர்களைந்தீர் ஆடீ ரூஞ்சல்
உக்கிரமாய் வருகடலைச் சுவற விட்ட
ஓங்காரத் துட்பொருளே' யாடீ ரூஞ்சல்
நெக்குருகித் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
நின்றொளிரும் நீர்மையரே யாடீ ரூஞ்சல்
தக்கவொரு பதிசெல்வச் சந்நிதி மேவித்
தமிழ்தழைக்க வேலவரே யாடீ ரூஞ்சல். 3

### வாழி

சீராரும் தீருநீறும் அக்கம் வாழி
திகழ் மறைகள் ஆகமங்கள் சிறந்துவாழி
நேராரும் அந்தணர்கள் நிறைந்து வாழி
நெடுவேலின் புகழ்பரவும் நெறியோர் வாழி
ஏராரும் தமிழ்சைவம் இயைந்து வாழி
எழிலாரும் யாழ்ப்பாணத் தேயம் வாழி
பேராரும் தொண்டைமா னாறும் வாழி
பிறங்குசெல்வச் சந்நிதியும் வாழி வாழி. 4

### எச்சரிக்கை

அன்பருளம் மேவுகின்ற ஐயாவெச் சரிக்கை
ஆறுபடை வீடுகளில் அமர்ந்தோயெச் சரிக்கை
துன்புசெய்த அவுணர்களைத் தொலைத்தோயெச்
சரிக்கை
தொல்பிறவிப் பிணிதீர்க்கும் துய்யாவெச் சரிக்கை
முன்பவ்வைக் கருள்புரிந்த மூர்த்தியெச் சரிக்கை
மொழிவள்ளி மகிழ்கணவ முருகாவெச் சரிக்கை
இன்புதர வேலேந்தும் எழிலோயெச் சரிக்கை
இனியசெல்வச் சந்நிதியின் இறைவாவெச் சரிக்கை 5

### பராக்கு

ஆடுமயில் மீதிவரும் அழகா பராக்கு
அணிசேவற் கொடியுயர்த்த அமலா பராக்கு
கூடசுரர் குலமொழித்த கோவே பராக்கு
குலவுதெய்வ யானைமகிழ் குழகா பராக்கு
நாடுவள்ளி தனைமணந்த நாதா பராக்கு
நம்பனருள் நாயகனே நலனே பராக்கு
தேடுகின்ற வேலேந்தும் செல்வா பராக்கு
செல்வச்சந் நிதியமரும் தேவே பராக்கு. 6

### இலாலி

பிரணவப் பொருளதைத் தந்தோயி லாலி
பிறங்கிடுந் தமிழினை வளர்த்தோயி லாலி
சரவணப் பொய்கையில் வந்தோயி லாலி
சங்கரன் தந்தநற் சாமியேயி லாலி

அருண கிரிக்கருள் செய்தோயி லாலி
ஆதியாய் நின்றிடும் அன்பேயி லாலி
அரணதாய் எமக்குதவும் அமுதேயி லாலி
அருள்செல்வச் சந்நிதிவே லப்பாவி லாலி. 7

மங்களம்

எங்குநிறை ஈசருக்கு மங்களம் — எழில்
இயைந்தமயில் இவர்பவர்க்கு மங்களம்
கங்கைதன் சிறுவருக்கு மங்களம் — மகா
கணபதியின் இளவலுக்கு மங்களம்
பங்கமெலாம் அகற்றுவோர்க்கு மங்களம் — குரு
பரனாகும் குமரருக்கு மங்களம்
செங்கைவடி வேலவர்க்கு மங்களம் — சீர்
செல்வச்சந் நிதிக்குகற்கு மங்களம். 8

செல்வச் சந்நிதி வேலர்
திருவூஞ்சல் முற்றிற்று

உ

# மயிலைச் சிவசுப்பிரமண்யர் ஊஞ்சல்

## க. மயில்வாகனப் புலவர்

### காப்பு

வெண்பா

தென்மயிலை வாசர் சிவசுப்ர மண்யர்தமக்
கின்மொழிசே ரூஞ்ச லிசைபாடப்—பொன்மணிப்பூட்
கோட்டுக் களிறு குடிகொண்டு வாழுமன்பி
னாட்டு மடியே னகத்து.

விருத்தம்

பூமேவு சூரியனைப் புடைத்து நீட்டிப்
புரிந்ததுபோன் மாணிக்கப் புதுத்தூ ணாட்டி
ஏமேவு சந்திரனைப் பிடித்து வாட்டி
யிசைத்ததுபோல் வயிரவளை யிறுக மூட்டி
மாமேவச் சுதைமுத்தக் கயிறு பூட்டி
வான்மணிபோ னவரத்நப் பலகை மாட்டித்
தேமேவச் செய்யூஞ்சற் பீடத் தேறிச்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 1

நானமணி மண்டபத் தளாவி யாவு
நறுவிரைநீ ரூழ்கியிழைப் பட்டா லொற்றி
ஆனதிரு வாபரணங் கலைகள் சாத்தி
யமைவுபெறச் செய்ததிருப் பந்தர்க் கீழாப்
போனகநீர் கைதொட்டுப் பூசி வாசம்
பொலியமடுத் தரும்புகைபஃ றீப மாடித்
தேனமரும் பூமலிதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 2

வெண்கவரி யெழுந்துசர வணத்தி னார்ந்து
மிளிர்திரைபோ லிருபாலும் வீச முத்தத்
தண்கவிகை நிழற்றவொளி ரால வட்டந்
தயங்கிக்கால் செய்யவலம் புரிக ளார்ப்பக்
கண்கள்சுக நீர்சொரியக் கரங்கள் கூப்பிக்
கசிந்துதொழ வன்பர்குழாங் கருவி யேங்கத்
தெண்கமலை யுறைந்திடுதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 3

பணியார்ந்த வரவினினங் கால்க ளாகப்
பார்மகளே சேருமொரு பலகை யாக
அணியார்ந்த கரைமரம்வா னாண்க ளாக
வழகுதரு பொய்கைமலர் பாய லாக
மணியார்ந்த சரவணமா மஞ்ச மேலா
மகிழ்மென்கா லசைப்பவுறை மைந்த கந்தா
திணியார்ந்த மரஞ்செறிதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 4

தாங்கரிய துன்பமெலாந் தேவர்க் காக்கித்
தகையநிலை போக்கிநிதஞ் சிறையில் வாட்டும்
ஓங்கசுர குலச்சூர னாவி போக்கி
யும்பரர சியலையிந்தி ரற்கு நாட்டிப்
பாங்கிலுறு வோர்துயரம் பலவு நீக்கிப்
பங்கமிலா நெறியன்பர் தமக்குக் காட்டித்
தேங்குநிரை பால்பொழிதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 5

வான்பூத்த பரங்குன்றிற் றெய்வ யானை
மணந்தாடி நின்றதிரு வூஞ்ச லாட்டும்
மான்பூத்த விழிவள்ளி தன்னை வேட்டு
வரையகத்துப் புரிந்ததிரு வூஞ்ச லாட்டுங்
கான்பூத்த திருவூஞ்ச லாட்டி லொன்றுங்
கண்டறியாப் பேதையரேங் களிக்கு மாறு
தேன்பூத்த கழைவளர்தென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 6

பூதமெடுத் தன்றுமலைக் குகையில் வைத்துப்
புனிதமுறு நீர்படியப் போக வன்பின்

ஓதுதலுங் கீரனுக்குச் சிறையை நீத்த
வொப்பிறிரு முருகாற்றுப் படைசொல் வாருங்
காதுகவ ரருணகிரி நாதர் சொன்ன
கனிந்ததிருப் புகழோது வாரு மேவச்
சீதமலர்த் தடநிறைதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 7

கன்னியராம் வள்ளியொடு தெய்வ யானை
காதலொடு மிரண்டுபுறத் தேயு மேவத்
துன்னசுர குலங்களைவேல் வலக்கை யோங்கச்
சுந்தரமார் மஞ்ஞையுனைத் தாங்கி நிற்ப
மன்னுவணத் தரியிரண்டு பெண்க ளோடும்
வலியாழி கொண்டிருத்தல் போல வைகிச்
சென்னிபணி தவர்செறிதென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 8

தஞ்சமெனும் பேர்க்களியீ ராடீ ரூஞ்சல்
சரணடையாப் பேர்க்களியீ ராடீ ரூஞ்சல்
கஞ்சவிதிக் குரைமொழியீ ராடீ ரூஞ்சல்
கமலமுகத் தருள்விழியீ ராடீ ரூஞ்சல்
விஞ்சுமயன் மாற்கரியீ ராடீ ரூஞ்சல்
விழுமியவன் பர்க்கெளியீ ராடீ ரூஞ்சல்
செஞ்சொலறி வோர்புகழ்தென் மயிலை வாழுஞ்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 9

பூவாழு மாந்தரெலாந் தழைத்து வாழப்
புயல்பசுக்கண் மகளிர்கற்புப் பொலிந்து வாழப்
பாவாழுஞ் செந்தமிழ்சித் தாந்தம் வாழப்
பயின்மறையோ ரரசரொடு பின்னோர் வாழ
நாவாழு நான்மறையா கமங்கள் வாழ
நவவீர ரஞ்செழுத்தா றெழுத்தும் வாழச்
சீர்வாழுந் தென்மயிலை செழித்து வாழச்
சிவசுப்ர மண்யரே யாடீ ரூஞ்சல். 10

**எச்சரிக்கை**

**இராகம்:** சாவேரி **தாளம்:** உரூபகம்

உலகோர்முதற் றொழுவாரண னுடனேபிறந் தவனே
புலவோர்துதி மயிலைப்பதிப் புலவாவெச் சரீக்கை. 1

வரைமாதர ணிருவார்விழி மணியேபெரு மணியே
நிரையார்தரு மயிலைப்பதி நிமலாவெச் சரீக்கை. 2

தொடுமாகட லலைநீர்நனி சுவறாவலி குறைய
விடுவேலவ மயிலைப்பதி விமலாவெச் சரீக்கை. 3

தொடியார்பிடி மடவாள்சுகந் தோயும்மணவாளா
கொடியார்மதின் மயிலைப்பதிக் குழகாவெச் சரீக்கை. 4

குறமாதெனு மொருபூங்கொடி குலவிப்படர் தாரு
அறனார்தரு மயிலைப்பதி யமலாவெச் சரீக்கை. 5

வானார்மலை யோடேகரி வதனன்றனை வாட்டுங்
கானார்மலர் மயிலைப்பதிக் கரியேயெச் சரீக்கை. 6

கடல்போற்றுயர் சுரர்மேற்செயுங் காலன்நிகர் சிங்கன்
திடனேயழி மயிலைப்பதிச் சிங்கேறெச் சரீக்கை. 7

கணியாவுல கழியாவுடற் கதியாவரு சூரற்
றுணியாவழி மயிலைப்பதிச் சூராவெச் சரீக்கை. 8

மயில்வாகன மொருவாரண மணிநீள்கொடி யுடையோய்
குயில்வாழ்பொழின் மயிலைப்பதிக் குமராவெச்
சரீக்கை. 9

கடம்பார்மலர்த் தடந்தோளெனுங் கவினார்மலைக்
குகனே
இடம்பாவிய மயிலைப்பதி யிறைவாவெச் சரீக்கை. 10

அணியார்மணி நவவீரர்க ளரசேசுரர் பரசிப்
பணிவோய்புகழ் மயிலைப்பதிப் பரமாவெச் சரீக்கை. 11

குணமாமலை யருண்மாமுகில் கொடியேன்வினை மருந்து
வணமேவிய மயிலைப்பதி வரதாவெச் சரீக்கை. 12

மணியேசுவைக் கனியேதெளி மதுவேபுனக் கணியே
பிணியேயொழி மயிலைப்பதிப் பெருமானெச்
சரீக்கை. 13

மயலைக்கெடுத் தருளைத்தர மருவித்தலம் வதியும்
மயிலைப்பதிச் சிவசுப்பிர மணியாவெச் சரீக்கை. 14

பராக்கு

இராகம்: புன்னாகவராளி தாளம்: ஜம்பை

தேவாதி தேவனரு டேவேப ராக்கு
சித்தியொடு முத்தியருள் செல்வாப ராக்கு
பாவாண ரேத்துமொரு பாலாப ராகசு
பத்தர்மன நித்தமுறை பண்போய்ப ராக்கு. 1

கும்பமுனி தேறவருள் குருவேப ராக்கு
கோலமலர் வெட்சியணி கோவேப ராக்கு
நம்பர்பெறு மந்த்ரகுரு நாதாப ராக்கு
நங்கையுமை தந்ததிரு நந்தாப ராக்கு. 2

தெள்ளுபுனல் வாவிவரு சேயேப ராக்கு
சேவன்மயில் வேலுடைய செவ்வேள்ப ராக்கு
வள்ளிசுர யானைமண வாளாப ராக்கு
மயிலைவதி சிவசுப்ர மண்யாப ராக்கு. 3

மங்களம்

இராகம்:சௌராட்டிரம் தாளம்:ஆதி

பல்லவி

சீராருங் கந்தனுக்குச் செயமங்களம் எங்கள்
சிவசுப்ர மண்யனுக்குச் சுபமங்களம்

அநுபல்லவி

ஆதிதரும் பாலனுக்கும் ஆறுமுக வேலனுக்கும்
நீதிநிறை சீலனுக்கும் நேரரிய கோலனுக்கும். (சீ)

சரணங்கள்

பத்தர்மனத் தையனுக்கும் மெய்யனுக்கும் மங்களம்
பங்கமிலாத் துய்யனுக்குஞ் செய்யனுக்கும் மங்களம்
அத்தியுடன் வந்தவற்கும் அசுரகுல வந்தகற்கும்
சத்தியுமை தந்தவற்கும் சரணார விந்தனுக்கும். (சீ)

புள்ளிமயில் வாகனுக்கும் ஏகனுக்கும் மங்களம்
பொங்குமுப வீதனுக்கும் நாதனுக்கும் மங்களம்

வள்ளிமண வாளனுக்கும் மன்னுகுண வாளனுக்கும்
துள்ளுதக ராளனுக்கும் தொங்குமலர்த்
தோளனுக்கும். (சீ)

நன்மைதரு சித்தனுக்கும் முத்தனுக்கும் மங்களம்
நாரசிங்கன் மருகனுக்கும் முருகனுக்கும் மங்களம்
தன்மமறை யீசனுக்கும் தங்கியொளிர் தேசனுக்கும்
தென்மயிலை வாசனுக்கும் தெய்வானை நேசனுக்கும்.
(சீ)

**மயிலைச் சிவசுப்பிரமண்யர்**

**ஊஞ்சல் முற்றிற்று**

உ

# வேலாயுதக்கண்ணி

## த.பொ. கார்த்திகேசு

சொற்கண்ட தொண்டைமான் ஆறதனில் தோற்றியே
விற்கொண்ட வள்ளியொடு விளங்கும்வே லாயுதனே

செல்வச் சந்நிதியே தீர்க்கும் வினைகளென்ற
கல்வியுளோர் தம்கருத்தே காக்கும்வே லாயுதனே

கதிர்காமக் காட்சிகளைக் காட்டுநற் சந்நிதியாய்
கதிர்வேலா என்னைநீ காப்பாய்வே லாயுதனே

வேண்டுவார் வேண்டியதை வேண்டியவா
றேகொடுக்கும்
ஆண்டிநீ ஐயா அருள்வாய்வே லாயுதனே

உன்றன் அருளாலே உரைத்தேனிப் பாடல்தனை
என்னிரு கண்ணே இறைவாவே லாயுதனே.

வேலாயுதக் கண்ணி முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதி முருகன் கண்ணிகள்

## ஞா.ம. செல்வராஜன்

சந்நிதியில் வந்துதித்த வெற்றிவேலா — ஒரு
சங்கதிநீ செய்ய வேண்டும் வெற்றிவேலா — ஒரு
தோகைமயில் மீதிலேறி வெற்றிவேலா — எம்முன்
தோன்றிவந்து நிற்கவேண்டும் வெற்றிவேலா
வள்ளி தெய்வானையினோடு வெற்றிவேலா — வந்து
வர்ணமுகங் காட்டவேண்டும் வெற்றிவேலா
பன்னிருகை வேலுடனே வெற்றிவேலா—வந்து
பாலர்முகம் பார்க்கவேண்டும் வெற்றிவேலா
ஆனைமுகன் தம்பியான வெற்றிவேலா—எம்மை
ஆதரித்து ஆளவேண்டும் வெற்றிவேலா
கண்ணனின் மருமகனான வெற்றிவேலா—எம்மைக்
கண்திறந்து பார்க்க வேண்டும் வெற்றிவேலா
ஆறுபடை வீடுடைய வெற்றிவேலா—நித்தம்
ஆறுதலளிக்க வேண்டும் வெற்றிவேலா
மாரிமழைபெய்ய வேண்டும் வெற்றிவேலா—இந்த
மானிலங்களுய்ய வேண்டும் வெற்றிவேலா
பஞ்சங்கள் ஒழியவேண்டும் வெற்றிவேலா—செல்வப்
பாக்கியம் வழியவேண்டும் வெற்றிவேலா
வஞ்சனைகள் வாடவேண்டும் வெற்றிவேலா—பகை
வன்மமெல்லாம் ஓடவேண்டும் வெற்றிவேலா
அன்புகள் சுரக்கவேண்டும் வெற்றிவேலா—உன்மேல்
ஆசையும் பிறக்கவேண்டும் வெற்றிவேலா
ஆவிநீங்கும் போதினிலும் வெற்றிவேலா—எம்முன்
அன்புடனே நிற்கவேண்டும் வெற்றிவேலா.

செல்வச் சந்நிதி முருகன் கண்ணிகள் முற்றிற்று

உ

# குறுக்குத்துறைக் கலம்பகம்

## தி.சு. ஆறுமுகம்

### பாயிரம்

#### கணபதி காப்பு

நேரிசை வெண்பா

சீரார் பதிநற் றிருவுரு மாமலைமேல்
ஏரார் கலம்பக மேபாட—ஓரானைக்
கன்றி னிருபதத்தைக் கானார் மலர்தூவி
நன்று மனத்தணிவம் நாம். 1

#### முருகன் காப்பு

கட்டளைக் கலித்துறை

நாக மடுத்திடு மேனி நமலனின் நன்னுதற்கண்
ஆக மெடுத்தவன் ஆறு முகத்தவன் அந்தரத்தார்
நாக மடுத்தவன் றானிக் கலம்பகம் நல்கிடுவான்
தோக மடுத்திடு பேதை யெனதுளம் தோன்றிநின்றே. 2

#### சிவபிரான் காப்பு

கட்டளைக் கலித்துறை

அருவுரு வானவன் அம்பலத் தாடிடும் அண்ணலவன்
வெருவறு மாறென் மனத்திடை யன்புடன் மேவிடலால்
வருமொரு தீதெது முண்டோ சிறியேன் வழியறிந்து
திருவுரு மாமலை மீது கலம்பகம் செப்பிடவே. 3

## சக்தி காப்பு

### அறுசீராசிரிய விருத்தம்

அண்ட மெல்லாம் பம்பரம்போல்
ஆட்டி வைப்பாள் அருட்சக்தி
சண்ட முடையே னெனினுமெனைத்
தள்ளா தருளைப் பொழிவளெனத்
தண்ட னிட்டே அவளடிகள்
சார்ந்தே நின்றிக் கலம்பகத்தைத்
தொண்ட னறையத் துணிந்தேனே
தொல்சீர்க் குறுக்குத் துறைமீதே. 4

## கலைமகள் காப்பு

### அறுசீராசிரியம்-வேறு

கவிபொழி வாணர்க் கெல்லாம்
கரங்கொடுத் துதவி செய்யும்
சவிபொழி மாது நல்லாள்
சதுர்முகன் தேவி தன்னின்
துவிபொலி பாதம் போற்றித்
திருவுரு மாம லைக்கே
கவிபொலி வாரு மிந்தக்
கலம்பகம் பகர்வன் மாதோ. 5

## அடியார் காப்பு

### எழுசீராசிரிய விருத்தம்

சங்கமு தல்வ னாயநக் கீரன்
சந்தமார் திருப்புகழ் தந்த
துங்கமு றுஞ்சீ ரருணகி ரியுடன்
துகளறு குமரகு ருபரன்
புங்கமு றுமிவர் போன்றமெய் யடியார்
பொற்பத மென்சிரங் கொண்டே
பொங்கமு றுங்க லம்பக மிதனைப்
புனைந்திட வேதுணிந் தேனே. 6

## அவையடக்கம்

### எண்சீராசிரிய விருத்தம்

புகழோங்கு பேரறிஞர் பலரும் முன்னர்ப்
புனைந்தளித்த கலம்பகங்கள் பலவற் றுள்ளும்
திகழோங்கு மொன்றிரண்டில் நுனிப்புல் மேய்ந்த
சிறியவனென் சிந்தையுறு மாவ லாலே
இகழோங்கு மென்பதறிந் திடினு மிந்த
எளிமைசேர் கலம்பகத்தை யிசைத்த லந்தோ
திகழோங்கு வான்சுடர்கள் தம்மைக் கண்டே
சிற்றுயிர்மின் மினியொளிரும் செய்கை யாமே. 7

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

### எட்டடித் தரவுகள் 2

கார்பூத்த உடலமுறுங் கரிமுகனின் பின்னவனே
நீர்பூத்த செஞ்சடையன் நுதல்விழிக்கண் வந்தவனே
பரணிதனக் கடுத்துளநற் பைங்கிளிமார் பேணிடவும்
சரவணமார் பொய்கையினில் தங்கிவளர்ந் தோங்கியவா
சக்தியருள் கொண்டுதிரு சண்முகமு மானவனே
பக்தியுடன் பணிவார்க்குப் பரிந்தருளைச் செய்பவனே
வடிவேலு மெடுத்தவனே வரைமுகட டுத்தவனே
கடிகடம்ப மாலையணி கந்தனெனுந் திருமுருகா

மண்ணகமும் விண்ணகமும் மருண்டுகுலை நடுங்கிடவே
எண்ணவொணா இன்னலெலாம் எத்தனையோ புரிந்தலைந்த
சூரபது மனையவனின் சுற்றமுடன் தொலைத்தழித்தும்
ஆரபரி வோடவனை அணிமயிலுஞ் சேவலுமாய்க்
கொண்டுமயி லேறியந்தக் குக்குடத்தைக் கொடியுயர்த்திக்
கண்டுமொழி மாதரிரு கவின்புறமும் நின்றிலங்க
அருள்வதனம் ஆறுடனே ஆறிரண்டு விழிகளுடன்
மருள்தவிர்த்து மாநிலத்தை வாழவைக்கும் மதலாய்கேள்

### ஈரடித் தாழிசைகள் 6

மூவருமாய் மூவருக்கும் முதல்வனுமாய் அண்டமெலாம்
யாவருமாய் யாவினுமாய் இலங்குசிவன் தனக்கிறைநீ

போதகுரு நாதனெனப் பொலிந்தவனே உன்றனிரு
பாதமல ரலதொருவர் பாலடையேன் தலைவணங்கேன்

விண்கொண்ட தேவதைகள் வேணவையுண் டாமெனினும்
கண்கண்ட தெய்வமுன்போல் கண்டதுண்டோ சுந்தரனே

அண்டமெலா மாக்கியரு ளளித்துபுரந் தழிப்பதுநீ
கண்டவிளை யாட்டெனின்யான் கழறுவதோ நின்பெருமை?

உலகுயிர்க ளனைத்தினுமே உள்ளவனாய் உள்நிறைந்தே
இலகிடுமுன் புகழ்தனையே எளியனெடுத் தோதுவதோ

அங்கிங்கென் னாதவிதம் எங்குமொளி வடிவினனாய்த்
தங்கியுள சண்முகநின் தாள்வணங்கி உய்ந்திடுவேன்.

ஈரடி அராகங்கள் 4

உளனென இலனென உரைத்திட நிறைந்தனை
அளவருந் திருமறை அறிந்திட அரியைநீ

எவரெவர் தமதுளம் இசைவுறத் தொழுதிட
அவரவர் உளப்படி அருளுவை யுருவுடன்

நிலமெனப் புனலென நெருப்பெனச் செறிந்தஅ
நிலமென விசும்பென நிறைந்தருள் புரிந்தனை

அனலளி கதிரவன் அமுதளி மதியவன்
அளவில வுடுக்கண மனைத்தினும் நிறைந்தனை;

பெயர்த்தும் ஈரடித் தாழிசைகள் 4

பிறந்திலைநீ யிறந்திலைநீ பெரியவன்நீ சிறியவன்நீ
துறந்திலையிவ் வுலகியல்நீ தொடருமொரு குணமிலைநீ

அண்டமெலாம் படைத்திடுவான் அயனென்பர் அவ்வயனோ
தண்டனையுன் பாலடைந்து தனிச்சிறையில் வாடியவன்

அழுகிவிழும் மாங்கனிக்காய் ஆண்டியெனச் சென்றையென்பர்
விழுக்கனியாம் ஞானமென மெய்யறிவர் அறியாரோ?

குன்றாத நித்தியனாம் குணக்கடலாம் நின்னையந்தோ
குன்றவனென் றோதுவதேன் குறைமதியர் காண்பாய்நீ.

நாற்சீர் ஈரடி அம்போதரங்கங்கள் 2

இச்சையுங் கிரியையும் இருசா ரணிந்தனை
விச்சையும் ஞானமும் விரும்பி யளிப்பைநீ

இருவினை யுருவமும் இன்பமுந் துன்பமும்
திருவொடு வறுமையும் சேருவ துன்னருள்

(முச்சீர் ஓரடி அம்போதரங்கங்கள் 6

அலைகடற் பதியி லமர்ந்தனை
அணிபரங் கிரியில் செறிந்தனை

ஆவிநன் குடியை அடைந்தனை
ஏரகம் நிறைந்து சிறந்தனை

பழமுதிர் சோலை படர்ந்தனை
குன்றுதோ றாடி மகிழ்ந்தனை

இருசீர் ஓரடி அம்போதரங்கங்கள் 8

விண்ணில் பிறந்தனை
ம்ண்ணில் உறைந்தனை

கண்ணில் நிறைந்தனை
பண்ணில் ஒளிர்ந்தனை

அசுரர் ஒழித்தனை
அமரர்க் கருளினை

அயிலும் எடுத்தனை
மயிலும் அடுத்தனை

தனிச் சொல்

அதுகண்டு

ஆசிரியச் சுரிதகம்

சரவண நின்னடி சரணம் அடைந்துள்ளேன்
தருணம் அறிந்துநீ தடுத்தெனை ஆளுவாய்
கதியுனை யல்லது காணிலேன் நின்னையே
துதிபுரி ஏழையென் துன்பம தவிர்த்திடு
திருவுரு மாமலைத் தேவனே
அருளொடு மெனையாள் அணிவடி வேலே. 1

நேரிசை வெண்பா

வேலனைச் சக்தி விமலையாம் பார்வதி
பாலனை மங்கையிரு பாங்கனைக்—கோலத்

திருவுரு மாமலைத் தேவனை நெஞ்சே
கருவற வாழ்த்தாய் கனிந்து. 2

### கட்டளைக் கலித்துறை

கனிந்தவன் பாத கமலம் வணங்கல் கடனுனக்கே
முனிந்துனைத் தள்ளா தருளுவ தன்னான் முழுக்கடனே
புனைந்திடு சீர்கொள் திருவுரு மாமலைப் புங்கவனை
நினைந்திடு வேறு நினையேல் எனதரும் நெஞ்சகமே. 3

### அறுசீராசிரிய விருத்தம்

அகமது கனிந்து நின்றே அங்கமும் புளக மார
முகமெலாங் கண்ணீர் சோர முருகனின் புகழைப் பாடின்
இகமதில் நல்வாழ் வாகும் எளிதிலே வீடும் வாய்க்கும்
சுகமுறச் சேர வாரீர் திருவுரு மாம லைக்கே. 4

### எண்சீராசிரிய விருத்தம்

மாமலைகள் நீர்சொரிந்து தாமவனைப் போற்றும்
மரங்களெலாம் மலர்தூவிச் சிரங்களசைத் தேற்றும்
காமலியும் புட்களெலாம் கரைந்துருகி யேத்தும்
கடலதுவோ முழக்கமுடன் கரம்தூக்கிப் போற்றும்
நீமலைத லேன்மனமே தாமதஞ்செய் யாதே
நீடுவடி வேலனையே நாடுபுகழ் பாடு
மாமலியுந் திருவுருமா மலைமுருகன் தன்னின்
மலரடிகள் நாடுபவர்க் கிலையிடரே கண்டாய். 5

### நேரிசையாசிரியப்பா—ககர வருக்க மோனை

கண்டவர் வைத்த கண்ணினை யெடாஅது
காணவே யீர்த்திடுங் கவின்பெறு வடிவினன்
கிட்டுவார் மீண்டும் எட்டியே காமல்தன்
கீழடிப் படுத்தும் கிருபை நிறைந்தவன்
கும்பிடும் அடியார் கொள்துய ரெல்லாம்
கூர்வடி வேலால் கொய்தருள் செய்பவன்
கெண்டை விழியாள் கிளிமொழி வள்ளியின்
கேள்வன் தேவ குஞ்சரி நாதன்
கைத்தல மோடு கண்களீ ராறன்
கொண்மூ சூழ்திரு வுருமா மலையன்
கோல மயிலவன் கோதிலாக்
கௌரியின் பாலனே கலியுகத் தேவே. 6

### நேரிசை வெண்பா

தேவர் குறைதீர் திருவுரு• மாமலையின்
தேவனே என்றுந் துணையாவான்—மேவுந்
திரிமூர்த்தி யென்பார் சிறிதருளார் சும்மா
திரிமூர்த்தி யென்றே தெரி. 7

### பஃறொடை வெண்பா

தெரிவையர் மீதும் சிறுவர்கள் மீதும்
உரிய பொருள்மீது முள்ள - பிரியமதில்
எள்ளள வேனும் இவன்பால் செலுத்துவையேல்
உள்ளதுயர் போமென் றுணராயோ - பள்ளமதைத்
தேடிவிரை நீராய்த் திருவுரு மாமலையை
நாடிவிரைந் தோடுவாய் நன்கு. 8

### புயவகுப்பு - இருபத்தெண் சீராசிரிய விருத்தம்

#### முதலடி

குடர்பசி யால்துடித் திடவுமை யார்நகிற்
குடங்களை யீர்த்திட உயர்ந்தன
கொடியிடைக் கார்த்திகை அரிவையர் மார்பிடைக்
குலவியன் னார்பிடர் அணைத்தன
குமுதமென் வாய்திறந் தழுதிடுங் கால்சர
வணமிசை காலுடன் அசைந்தன
குலநவ வீரரைக் குணமுடன் கூடியுங்
குலவிடுங் கால்துடி துடித்தன

#### இரண்டாமடி

இடர்பட நான்முகன் தனைச்சிறை யேவின்
எளிதினில் யாவையும் படைத்தன
எரிவிழி யான்விரும் பியவிதம் ஞானமுத்
திரைகுவித் தோதிட உயர்ந்தன
எதிருறு மாமலை பிளந்தன நீரற
எறிதிரை வாரியை வடித்தன
இகலிய சூரனைத் தடிந்தன யானையின்
எழிலுயர் பாவையை மணந்தன

#### மூன்றாமடி

படர்பசுந் தோகையை அணைத்துயர் கோழியுட
படுகொடி வானுற உயர்த்தின

பசுந்தினை யார்புன முறுமொரு பாவையம்
பிணைமகள் மார்பினைத் தழுவின
பலகலை யார்தமிழ் தனைக்குறு மாமுனி
பணிவுட னேற்றிடப் புகட்டின
பருவலி பூதம தொழித்திடக் கீரனும்
பகர்முரு காற்றினை அணிந்தன

நான்காமடி

தொடர்புற மாபுகழ் பரவிய சீரரு
ணகிரியின் பாடலும் அணிந்தன
துகளறு மூங்கையன் குருபர னோதிய
சுடர்கலிப் பாவையும் அணிந்தன
தொடைகமழ் தீந்தமிழ் மணமுடன் மாநறுங்
கடம்பணி மாலையும் சுமந்தன
திருவுரு மாமலை மருவிய வேலவன்
திறல்மிகும் ஆறிரு புயங்களே. 9

## குயிலை வேண்டுதல்

### நேரிசை வெண்பா

கள்ளிருக்கும் பூந்தார் கடம்பணி வேலனுமென்
உள்ளிருக்கும் காதல் உணரானோ - புள்ளிருக்கும்
மாவார் திருவுரு மாமலையான் இங்குவரக்
கூவாயோ நீகுயிலே கூவு. 10

## அம்மானை

### கலித்தாழிசை

கூவுகுயில் சோலைக் குறுக்குத் துறையானும்
மேவினான் வேடனென மொய்வனத்தே அம்மானை
மேவினான் வேடனென மொய்வனத்தே யாமாயின்
பாவித்தோர் கொக்கேனும் பற்றினனோ அம்மானை
தாவியுமோர் கொக்கவித்தான் சட்டியில்கா
ணம்மானை. 11

## மதங்கியார்

### பதினான்குசீ ராசிரிய விருத்தம்

மானை யொக்கு மாறு கண்கள்
மருள நோக்கி யுலகினை

மயங்க வைத்துக் காளை யர்தம்
மனங்க வர்ம தங்கியே
தேனை யொக்குந் தமிழி லேநீ
சீர்கு றுக்குத் துறையுறுந்
தேவைப் பாடி வாள்சு ழற்றிச்
சுற்றி யாடும் போதிலுன்
தானை யேகு லுங்க மாரன்
சேனை யேகு லுங்குமுன்
தாள்கு லுங்கு மாயி னென்றன்
பாழ்ம னங்கு லுங்குமே
கூனை யேய்த னங்கு லுங்க
குலைந டுங்கு மாவியே
கோல மாது நீய டங்கிக்
கொஞ்ச மிங்க ருள்வையே. 12

**கலிவிருத்தம்**

கொஞ்சுமட மாதரகல் நஞ்சுவிழி, தீயுள்
பஞ்சுநிக ராகவுனை யுஞ்சுடுமென் நெஞ்சே
மஞ்சுசரி திருவுருவ மாமலையின் வேலன்
தஞ்சமென வந்தவனின் கஞ்சவடி சேரே. 13

## இரங்கல்

**கட்டளைக் கலிப்பா-இறுதி மடக்கு**

சேர வந்தில ரேஉரு மாமலை
நாத ரும்நிசி யோஒரு மாமலை
கூர யில்தரி கோலம யூரவர்
கூடி லாரலர் கூறினர் ஊரவர்
ஆர அன்புட னேகுற மாதரை
அண்மி னார்வெறுப் பானது மாதரை
ஈர மில்மனத் தார்தமை நாடியே
இவ்வ ணந்தளர்ந் தேனுயிர் நாடியே. 14

## தவம்

**அறுசீராசிரிய விருத்தம்**

நாடி யடவி நலித்தலைந்து
நாளுங் கனிகா யிலையருந்தித்

தேடிக் கதியைத் தவம்புரிந்து
　　தேய மெங்கும் திரிவீர்காள்
ஓடிக் குறுக்குத் துறையடைந்தே
　　ஒருகா லுருகிக் குகன்புகழைப்
பாடிப் பணிந்து நீர்விரும்பும்
　　பான்மை யாவும் பெறுவீரே. 15

### கட்டளைக் கலித்துறை

வீரமு டன்தவ மாண்பின னாயும் விவேகமின்றிக்
கோரமு டன்புவி யாண்டவச் சூராம் கொடியனையே
மாரகம் மேவ அருள்செய் திருவுரு மாமலையன்
சீரடி தான்மன மாயை அவித்துநற் சீர்தருமே. 16

### கைக்கிளை - மருட்பா

மேதினி மேலடி மேவின மொய்குழல்
மீதினி லார்மலர் வாடின - மாதினியாள்
கண்க ளிமைத்தன காண்பா யெனவேதான்
பெண்ணிவள் திருவுரு மாமலை
மண்ணகத் தாளிது திண்ணமென் நெஞ்சே. 17

## மதங்கியார்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

நெஞ்சுகவர் திருவுருமா மலையின் வீதி
　　நின்றாடும் மதங்கியரே கொண்டோர் கும்பம்
நஞ்சுமிழும் ஓரரவை நலமோ டாட்ட
　　நானிலத்தே கண்டவருண் டாயின் நீரோ
கொஞ்சுமிரு கும்பமதைக் கொண்டே யிங்கண்
　　கோலமுறும் அரைப்பாம்பைக் குலைய ஆட்டும்
மிஞ்சுதிறம் யாமென்றும் அறியோம் போதும்
　　மெல்லியலீர் எம்ஆவி மெலியு மாமே. 18

## மேகவிடு தூது

### கலிவெண்பா

மாமேகங் காளும் மனமிரங்கு வீரேநீர்
தாமேயென் இன்னல் தணிக்கவலீர் - காமேவும்

மாண்பார் திருவுரு மாமலையில் வேலவரைக்
காண்பீரேல் யான்கொண்ட காதலெலாங் -
கேண்மையுறச்
சாற்றுவீர் நல்ல சமய மறிந்திடுவீர்
போற்றுவார் கூடிடுங்கால் போகாதீர் - சாற்றுந்
திருவா வடுதுறையர் செய்வழி பாட்டில்
பெருமாவல் கொண்டவரப் பெம்மான் - ஒருபோதும்
அவ்வேளை தன்னில் அணுகாதீர் நும்மிடத்தே
செவ்வேள் செவிகள் திருப்பாரே - எவ்வனமார்
தோகைய ராமிருவர் சூழ்வர் இரவினிலே
ஆகையா லப்போதும் அண்டாதீர் - மாகைலை
நாதனருள் நாதர் நலிவுறா வேளையினில்
மாதென் மயக்கமெலாம் மாண்பாக - ஓதிநீர்
இங்கண் வரச்செய்வீர் இன்றேல் அணிகடம்பத்
தொங்கல் தரச்சொல்வீர் தூது. 19

## நற்றாய் இரங்கல்

### கொச்சகக் கலிப்பா

தூதடருங் கான்தனிலும் துகளடரும் மாலையினும்
ஆதவனின் கடுமையிலே அஞ்சாமல் தான்துணிந்து
மாதலமாந் திருவுருமா மலைவேடன் பின்னாலே
போதயரும் மெல்லடியாள் போயதுதான் எவ்வாறே? 20

## தழை - தோழி கூற்று

### கட்டளைக் கலித்துறை

வாரார் திருவுரு மாமலை மேவிய வள்ளியனே
காரார் குழலி விரும்புந் தழையோ கரமளித்தாய்
நேரா துறக்கமே நின்றும் புரண்டும் நிலைகுலையும்
பேரான் உயிர்தனை யன்றோ கொடுத்தனை
பேரளியே. 21

## வண்டு

### வெளிவிருத்தம்

அளியே திருவுரு மாமலைதான் அண்டுவையோ
- யானுந்தோணேன்
எளியேன் படுதுயர மெல்லாம் இயம்புவையோ
-யானுந்தோணேன்

துளியே னுமருள் புரிந்தே திரும்புவையோ
-யானுந்தோணேன்
ஒளியேர் மலருள்தே• னுண்டே உறங்குவையோ
-யானுந்தோணேன் 22

### நேரிசை வெண்பா

தோணாத மந்திரங்கள் சொல்லுவ தேனெளியீர்
காணாத ஊரெலாங் காணுவதேன்—கோணாமல்
மாண்பார் திருவுரு மாமலையைச் சேர்ந்தங்கே
காண்பீர் திருமுருகன் கால். 23

### இன்னிசை வெண்பா

கால்சேர்ந்தார்க் கென்றும் கனிந்தருள் வேலவனின்
வேல்சேர்ந்தால் தீரா வினையுண்டோ ஓர்கால்
திருவுரு மாமலையைச் சேர்ந்தா லதுவே
மறுபிறவி நோய்தீர் மருந்து. 24

## வலைச்சியார்

### பதினான்கு சீராசிரிய விருத்தம்

மருந்து போல்வடித் தெடுத்த இன்சொலை
அளந்து பேசிடும் வலைச்சியீர்
மகிமை சேர்ந்ததி ருவுரு மாமலை
மறுகில் மீன்களோ விலைசொனீர்
திருந்து நும்மதி தனிலே தானிரு
செங்க யல்களும் புரளுதே
தோகை யீரிரு தடிவ ரால்களும்
துணியி னுட்புறம் தெரியுதே
இருந்து கொஞ்சமத் துணியை நீக்கிடும்
இன்னும் ஆவியுந் துடிக்குதே
யாது வேண்டுமச் சள்ளை மீன்தனக்
கென்ம னத்தினுக் கிசைந்ததே
பொருந்து மாறிவண் நீர்ம திச்சுற
வினையு மென்றனுக் கருளுவீர்
புரளும் அஞ்சனக் கண்க ளார்வலை
போட வோஇது போதுமே. 25

## இரங்கல்

### பன்னிரு சீராசிரியம் - இறுதி மடக்கு

போதார் சோலை வருந்தேனே
பிரியர் அணைந்தால் வருந்தேனே
பிணைந்தே குலவும் அஞ்சுகமே
பேதைக் கிரவும் அஞ்சுகமே
தீதார்ந் தேனைங் கணையாலே
தெளியே னவரிங் கணையாலே
தேனார்ந் திடுமென் மருவலரே
தேம்பு மெனையேன் மருவலரே
மாதார் பங்கன் விழியாரும்
மகரால் நீரென் விழியாரும்
மாண்பார் பொருநைத் திருவுருமா
மலைய ரன்புத் திருவுறுமா
காதா றிரண்டு முடையாரே
கனிந்தென் துயரு முடையாரே
கரிமான் மீதன் புள்ளாரே
கலங்கு மென்னன் புள்ளாரே. 26

## சித்திரகவி-அட்டநாகபந்தம்

### இன்னிசை வெண்பா

ஆரார் சடைய னனற்க ணுறுசேயை
மாறா துறுவான மாமலை யாண்டியை
நாடிநினை யாமோச நாசரை யம்மசனி
கூடி யிடுமே குறை. 27

### வேற்றொலி வெண்டுறை

குறையுடலா யங்கமெலாம் கொடுநோயே
கொண்டலையுங் கொடிய ரேனும்
இரையெனவே தசையுண்டும் எத்தனையோ
இழிதொழில்செய் ஈன ரேனும்
இறையெனவே திருவுருமா மலையானை
என்றுமவ ரேற்றி வாழின்
அவர்தாமே யாம்வணங்கும் ஆண்டவரும் ஆவாரே
அல்லாதா ரெவரேனும் அவர்திரும்பிப் பாரோமால். 28

## கார்

### பதினான்கு சீராசிரிய விருத்தம்

ஆல முண்ட கண்ட மென்ன
அம்க ருக்கும் காலமே
அம்பு தம்சி லம்பி னுச்சி
அணி வகுக்கும் காலமே
தாலம் விண்ட அரவொ டுங்க
இடியி டிக்கும் காலமே
தண்ண மருவி கல்லு ருட்டி
நீர்கொ ழிக்கும் காலமே
மேல டர்ந்த வாடைக் காற்று
மேனி வாட்டும் காலமே
மேவு மாரன் அம்பெ றிந்து
மெய்து ளைக்கும் காலமே
நீல மண்டு வானில் வான
வில்மு ளைக்கும் காலமே
நீள்கு றுக்குத் துறைய ரின்றி
நோமி குங்கார் காலமே. 29

## இதுவுங் கார்

### பஃறொடை வெண்பா

காலன் அணுகாமல் காக்கும் ஒளிவடி
வேலர் திருவுரு மாமலையில் - சால
இடியும் புலம்பும் இரும்பை புலம்பும்
நொடியும் புலம்பும் ஞிமிறும் - வடியருவி
நீரும் புலம்பும் நெஞ்சும் புலம்புமே
காரும் புலம்பிடுங் கால். 30

## குறம்

### எண்சீராசிரிய விருத்தம்

காலமெனும் மூன்றினையுங் கண்டுரைப்பே னம்மே
கணித்தகுறி தவறாது கண்டிடுவா யம்மே
பாலமுதம் வேண்டுகிலேன் பழையதுதா அம்மே
பழந்துணியா தாயினும்நீ புரிவுடன்தா அம்மே

வேலமுதுன் கண்ணாழி வெளிப்படுதே யம்மே
விசனமொழி வரைந்திடுவான் விரைவுடனே யம்மே
சீலமுறும் ஆவடுதண் துறையருமே போற்றுந்
திருவுருமா மலைக்குறத்தி திறமறிவா யம்மே. 31

### எண்சீராசிரிய விருத்தம்

மேனி சிவந்தானும் ஞானி யவன்தானும்
மூவர் சிறந்தானும் தேவர் புரந்தானும்
ஏனல் மிடைந்தானும் மானை யடைந்தானும்
ஏறு மயிலானும் கூறு மயிலானும்
ஆனி யிலன்தானும் ஈனில் குலன்தானும்
ஆறு முகத்தானும் ஆவல் மிகத்தானும்
கூனி நடித்தானும் ஊனம் விடுத்தானும்
குறுக்குத் துறையானும் குமர இறைதானே. 32

## காலம்-இரவுக்குறிவிலக்கல்

### கட்டளைக் கலித்துறை

தானத் திருவுரு மாமலை வீரா தடமறிந்து
கானத் திருவுரு மாநதி தன்னைக் கடப்பதனால்
மானத் திருவுரு மாது மனமே மயங்கிடுமால்
வானத் திருவுரு வேநீ யினியும் வரலொழியே. 33

## சம்பிரதம்

### பதினான்கு சீராசிரிய விருத்தம்

ஒழித்தசுரக் குலந்தனை யும்பர்பா லருள்புரிந்த
உன்னதன்கு மார வேலன்
உறைந்தருளுந் திருவுரு மாமலையை வணங்கியான்
உற்றிடுசம் பிரதம் சொல்வேன்
அழித்திந்தப் பிரமனை யவன்மனைவி யறுதலியை
அம்பட்டன் அணையச் செய்வேன்
அரிதன்னைப் பயமடையச் செய்குவேன் பெண்ணாக்கி
அழகுமகன் பெறவுஞ் செய்வேன்
பழித்திடுமா றவன்றனை மீனாமை சிங்கமாய்ப்

பன்றியாய்ப் படைத்தும் விடுவேன்
பாரிலலை விண்டுவுக் குருவமிலா தாக்குவேன்
படருருவம் அரியுங் கொண்டு
செழித்துயர்ந் தாலுமொரு செப்பினி லடைத்தவனின்
தேகமதைக் கருப்பு மாக்கித்
தேவாதி தேவனத் திருமாலே எனஅலையும்
தாதர்பால் தந்தி டுவனே. 34

### இதுவுமது

தந்தமா தங்கமதைத் தழையருந்தச் செய்குவேன்
தழைத்துவரும் நெற்க திரிலே
தரமாக நவமணிகள் தமைவரப் பண்ணுவேன்
தாமரையில் குவளை தருவேன்
சந்தனமும் பால்குடிக்கச் செய்குவேன் காற்றுக்குச்
சரியான காலும் அளிப்பேன்
சலியாமல் எலிமீது யானைவரப் பண்ணுவேன்
வானத்தை ஓட்டை யிடுவேன்
கந்தனுறை திருவுரு மாமலையில் வாழ்பவர்க்
கரியசெய லேது முளதோ
கரும்போடும் எறும்பிதனைக் களிறாக்கு வேனெழில்
கண்ணைவா யாக்கி விடுவேன்
சந்தமுறெம் மாதரையும் சதுராகக் கதிரவனைச்
சுற்றியுருண் டாடச் செய்வேன்
சங்கரனுக் குபதேசம் செய்குகனே தலைவனெனச்
சரணமடைந் துய்கு வேனே. 35

## சந்திரனைப் பழித்தல்

### வெண்கலிப்பா

வேனலுறும் வெயிலெனவே நிலவெரிக்கும் விண்மதியே
ஏனுனக்கிப் புன்மதியே இரவினுள்செல் வெண்மதியே
தண்ணெனுஞ்சீர்ப் பாற்கடலில் தழைத்தெழுந்தா யெனினுமந்தத்
தண்ணளியை ஏன்மறந்தாய் தரங்குலைந்த வெண்மதியே
பெண்ணுடனே நீபிறந்தும் பிரிவடைந்து துயரமுறும்
பெண்ணெனையே வாட்டுவதும் பெறுந்திறமோ வெண்மதியே
சிவன் தலையில் நின்றதனால் செருக்கடைந்து நின்றேநீ
தவனனென மனத்திடையே தருக்கினையோ வெண்மதியே

மகிமையுறு திருவுருமா மலைமுருகன் சிவனருளும்
மகனெனநீ கண்டிலையோ மதிகுலைந்த வெண்மதியே
என்னகமே கவர்முருகன் எடுத்துணையே சிவனணியும்
பன்னகத்தின் வாயிலிட்டுப் பதங்குலைப்பார் வெண்மதியே
பெண்ணென்றால் பேயெனினும் பரிந்திடுமே வெண்மதியே
வண்ணமழி வாய்விடு வாது. 36

### சித்திரகவி-காதைகரப்பு

#### இன்னிசை வெண்பா

#### நற்றாய் இரங்கல்

வாது நனியாயின் வாழாள் வருநய
மேதாகுந் தீயென்றை யேலுறுதி யந்தோ
செயலாமே வேடர் திதியாகப் பாயம்
படர்கந்தா வந்துகளி பார்த்து.* 37

#### குறள் வெண்பா

கந்தா கடம்பா கதிர்வேலா செந்திலுறை
யெந்தா யருள்வா யினிது.

### மறம்

#### எண்சீராசிரிய விருத்தம்

பாராளும் நும்மரசன் திருமு கத்தைப்
பாவைதனை வேண்டியிவண் விடுத்த தாலே
சீராகத் தலையெடுத்து விட்டான் என்றும்
சிரஞ்சீவி யாகவேதான் இருப்பான் தூதா
பேரான திருவுருமா மலையில் வாழும்
பெம்மானின் அருளடைந்த வேங்கை நாங்கள்
நேரான இளவரசுக் கேற்ற வாறு
நீசென்றவ் இளவாலைப் பெண்கேட் பாயே. 38

### மறம்

#### பதினான்கு சீராசிரிய விருத்தம்

கேட்டு நீயுன் காவ லன்சொல்
ஏற்றுச் சிந்தி யாமலே

---

* இக்கவியில் ஈற்றுச்சீர் நீக்கி இறுதியிலிருந்து ஒன்று விட்டு ஒன்று எழுத்தெடுத்துச் சேர்ப்பதாலாகியது குறள்வெண்பா

கிறுக்கல் ஓலை யோடு நாடிக்
கேடு தேடும் தூத!நீ
வேட்டு வந்த மறவர் வஞ்சி
வியன்கு றுக்குத் துறையிலார்
வேலின் மீது படரு மன்றி
அரசின் மீது படருமோ
நாட்டு மன்னர் கோடி முன்னர்
நாடி வந்து பட்டதை
நானெ டுத்துச் சொல்வ தோஇந்
நாடு னக்குச் சொல்லுமே
ஓட்டு வாருன் தலைய றுத்துக்
காட்டு வாருன் அரசிடம்
ஓங்கும் எம்சி றார்கள் கண்ணி
லுறுமுன் ஓடிப் பிழையடா. 39

வஞ்சித் தாழிசை

அடாதனவுஞ் செய்தேநீ
அடம்பிடிப்ப தேனோதான்
படரொளிவேல் பரம்பொருளும்
பரிவுடையார் மடமனமே

கண்டவர்கள் விண்டதெலாம்
கண்டிருந்தும் அவர்மிசைநீ
கொண்டதெவன் ஐயமிதே
அண்டிடுவார் மடமனமே

திருமுருகர் வருமளவும்
ஒருகுறையும் எண்ணாமல்
திருவுருமா மலைநினைந்தே
வெருவறவாழ் மடமனமே. 40

தவம்-கொச்சகக்கலிப்பா-மடக்கு

மனங்கனிந்து திருவுருமா மலையடைந்து திருவுருமா
கனங்குறைந்து வணங்கிடவே கண்டகுறை வணங்கிடவே
தினங்கனிந்து மருள்வானே தொடரயமன் மருள்வானே
வனங்களுறைந் திருப்பீரே வந்துமனந் திருப்பீரே. 41

### இன்னிசை வெண்பா

பீர்கொள்ள வேண்டாங்காண் போய்க்குறுக் குத்துறையில்
நீர்கொள்ளா வாறருளும் நீர்கொண்ட தண்பொருநை
முங்கி யொருக்கால் முருகா எனவுரைப்பின்
தங்கிடு மோபிறவி தான்? 42

### கட்டளைக் கலித்துறை

தானவ ரின்படை யுட்சென் றவரைத் தடிந்துமனம்
வான ரின்படை யும்படிச் செய்தோய் வனிதையிரு
மானவ ரின்படை யுட்சேர் திருவுரு மாமலையாய்
நானவ ரின்படை யுட்புகா தேக நயந்தருளே. 43

### குறள் வெண்பா

அருள்வாய் திருவுரு மாமலையா யுன்றன்
சரண்களே என்றுந்தஞ் சம். 44

## களி

### அறுசீராசிரிய விருத்தம்

தஞ்சமடை வார்க்கருளுந் திருவுருமா
மலைவணங்குங் களிய ரேயாம்
எஞ்சலிலா மதுவுண்டும் மதிமயங்கோம்
என்னெனிலோ இராம காதை
கஞ்சனையே பெற்றெடுத்த வீமனணை
காதலியாம் இராமன் தங்கை
மஞ்சணிந்த சீதையிடம் நாலுமுகத்
தாறுமுகம் மதத்தல் தானே. 45

## இதுவுமது

### பதினான்கு சீராசிரிய விருத்தம்

மதத்தனம் குடியாலே யாம்மட்டு மெனக்கூறி
மயங்கிடீர் மகித லத்தீர்
மயிலேறும் முருகனும் மட்டாருந் திருவுரு
மாமலையில் குடியுங் கொண்டான்

கதத்தலும் விடுங்கேளீர் கடவுளர் யாவருளும்
குடிகொள்ளார் எவரு முளரோ
கவ்வையுரை யீர்நீரும் கவ்வைகொள் வீர்தேவர்
கனிந்துசுரை பானங் கொண்டார்
விதத்தலும் அல்லவே வியனுலகில் யாவர்தாம்
வெறியேறும் சாதி விடுத்தார்
விரைமலர்கள் தோறுமளி வயல்களிலெல் லாஞ்சேறு
விரும்புகனி தோறுஞ் சாறே
மிதத்தலும் செய்மாலின் பெயர்மாலி மாதவன்
மேலுமவன் மௌலி கொண்டான்
மேதினியெ லாமொரு வகைநாற்றப் பொருள்களால்
மிளிருவதும் காண்கி லீரோ. 46

## இதுவுமது

### எண் சீராசிரிய விருத்தம்

கண்டடருந் திருவுருமா மலையே சென்றேன்
களியனேநீ வேண்டுவதென் என்றார் கந்தர்
மண்டிடவே சாலியருள் செய்யு மென்றேன்
மாடுகட்டி யுழுதுபயிர் செய்யென் றாரே
வண்டயருங் கொங்கென்றேன் வடபா லென்றார்
வயிறாருங் குந்தியென்றேன் மாண்டா ளென்றார்
தொண்டியென்றேன் கிழக்கேகாண் என்றி யம்பிச்
சுடர்முருகர் மௌலிதனைச் சூட்டி னாரே. 47

## கையுறை-தோழி கூற்று

### எழுசீராசிரியம்

நார்மிகுந் தார்பதி திருவுரு மாமலை
நாடனே நீதரு நீலமணி
சீர்மிகுங் காவிரி மேட்டிடைக் கண்டதேல்
சேவிடை யாய்ச்சிவ னைத்தாங்கும்
ஏர்மிகு சீரடி காணவே ஏனமாய்
ஏகிடு மன்றியும் வேலனிடம்
பேர்மிகு சூரனைக் கொல்லெனத் தன்னிரு
பெண்களைக் காட்டிப்ப ணிந்திடுமே. 48

### ஊசல்

#### எண்சீராசிரிய விருத்தம்

பணிவாருங் கொம்பினிலே அணியூசல் மாட்டிப்
பாடலென எதையெதையோ பாடிமனம் போலே
துணிவாக ஊசலிலே துள்ளியசைந் தாடும்
தோகையரே எனதுள்ள வூசலசைத் தீரே
தணியாது நீர்பெருகுந் தண்பொருநை யோரம்
தரந்தரமாய் வெண்ணொளிசேர் தரளங்கள் சேரும்
அணியாருந் திருவுருமா மலைவாழும் வேலன்
அவன்புகழைத் தான்பாடி ஆடீர்பொன் னூசல். 49

#### நேரிசை வெண்பா

ஊசலென ஆடவுயிர் உற்றவரும் வாடியழ
வாசலிலே ஊராரும் வந்தடைய - பேசுவதுந்
தீர்ந்திடு முன்னே திருவுரு மாமலையைத்
தேர்ந்திடு முன்னித் துணிந்து. 50

#### கட்டளைக் கலித்துறை

துணிந்தவர்க் குண்டோ துயரும் குறுக்குத் துறைதனையே
பணிந்தவர்க் குண்டோ பயமும் முருகனின் பாதமலர்
அணிந்தவர்க் குண்டோ அழிவே அவனரு ளன்பினிலே
பிணிந்தவர்க் குண்டே அழிவிலா வீடெனும் பேரிடமே. 51

### வண்டு

#### வஞ்சி விருத்தம்

பேரிடருங் கண்டுசென்று பேதமில்
சீரிடமாந் திருவுருவ மாமலை
யாரிடமென் பாடுரைத்து மீளுவீர்
வாரிடறிப் போயிடாதீர் வண்டரே. 52

### இயலிடங் கூறல்

#### பதினான்கு சீராசிரியம்

வண்டு காட்டிடும் மாத ரார்விழி
மாரி காட்டிடும் பூங்குழல்

வாணு தல்பிறை காட்டும் காட்டிடும்
முல்லை யேயவர் புன்னகை
செண்டு காட்டிடும் கொங்கை யேமுகச்
சோதி காட்டிடும் தாமரை
தேனெ னும்மொழி கிள்ளை காட்டிடும்
செந்து வர்துடி காட்டுமே
விண்டு காட்டிடும் தோளை அம்பணத்
தண்டு காட்டிடு மேதொடை
வேக மான்குளம் பல்குல் காட்டிடும்
மெல்லி டைத்துடி காட்டுமே
மண்டு சீர்குறுக் குத்து றைவரை
கண்ட மாதரின் மெய்ந்நலம்
வாயி னாற்சொலப் போகு மோவுயிர்
வாடி நோகுதென் பாங்கனே. 53

## சித்து

### பதினான்கு சீராசிரியம்

பாங்கடருந் திருவுரு மாமலையின் சித்தரேம்
பாலமுரு கனைவ ணங்கப்
பரிவுடனே சித்துபல பாலித்தான் எம்திறம்
பகரஎளி தாகு மாமோ
ஓங்கரனுக் கங்ஙனே உடனேரும் மாதங்கம்
உண்டுபணி காட்டி வந்தோம்
உண்மையுட னிருப்பையே ஒளிர்பொனா யாக்கியவன்
உளமகிழு மாறு தந்தோம்
நாங்களினுங் கரியைமா தங்கமெனக் காட்டுவோம்
நற்கஞ்ச மதனில் பொன்னை
நலமாகக் காட்டுவோம் நம்புநீ இரும்பைமே
லாம்பொன்னுங் காட்டி விடுவோம்
வீங்கடலுங் கொண்டயாம் வெண்கலைக்கொண் டாளிடம்
பொன்கலை வழங்கப் புரிவோம்
வல்லிரும்பு தனைப்பொனும் வெள்ளியுமா யாக்குவோம்
வலிகண்டு பதந்த ருவையே. 54

## மன்மதனைப் பழித்தல்

### சிந்தடி வஞ்சிப்பா

பதங்குலைந்திடு மாரமன்மத பரமசிவனின்
கதம்பொறுத்திட வலியிலாதவ கணைதொடுத்தெனை

வாட்டியேயுயிர் வம்புசெய்தனை சிவபிரான்றனின்
நாட்டமேவரு வடிவேலனை நாவலர்புகழ்
தேட்டமேவிய குறுக்குத்துறைத் தேவதேவனை
என்மனங்கவர் கூரயிலனை ஏறுமயிலனை
நன்கறிந்திலை
மன்மத னென்னும் பெயரால்
மன்னும் மதமே கொண்டனை நீயே. 55

## நாரைவிடு தூது

### இணைக்குற ளாசிரியப்பா

மன்னும் மதமே கொண்டலை மாரன்
என்னை வருத்தினன்
தென்றலும் வந்தென் தேகம் துளைத்தது
வானில் வெண்ணிலா வந்தென்
மேனியைச் சுட்டது
ஏனிவர் வேலவர் இன்னும் வந்திலர்
நீயோ பேடினை நீங்கா தேகுவை
பேடும் நின்னைப் பிரிந்தன் றிலதே
அவரோ இஃதும் அறிந்திலர்
கான்படு கண்ணியில் மான்படு வதுபோல்
யான்படும் பாடே எல்லாம் அறிகுவை
எனவே நீயுந்
திருவுரு மாமலை செல்குவை யாயின்
பொருநைத் துறையர் கண்டு
என்பா டனைத்தும்
அன்னவர் நெஞ்சில் அழுந்திடக் கூறி
என்னிடம் விடுப்பாய்
வாரா திருப்பின்
தாரா யினுமே தந்திடக் கூறு
மங்கை யென்துயர் கண்டனை
செங்கால் நாராம் சிறிதருள் வாயே. 56

### நிலைமண்டில ஆசிரியப்பா

வாயவன் புகழவே வலம்வரக் கால்களே
ஏயுமிக் கண்ணவன் எழிலுரு காணவே

கரமோ குவிந்திடச் சிரமோ வணங்கிடக்
காதோ குகன்புகழ் கேட்டு மகிழ்ந்திட
அல்லா லவைபெறும் நல்லா றெதுவே
எல்லாம் வல்ல இறைவன் முருகன்
மகிழும் திருவுரு மாமலை நாடி
அகிலத் தீரே அனைவரும் வருவீர்
திருவா வடுதுறை யார்தினந் தோறும்
அருமா மறையுடன் அவண்புரி பூசையும்
சிறப்பாய் நடாத்தும் திருச்சா றனைத்தும்
விருப்பாய்க் கண்டே விமலனைப் போற்றி
உறுப்பே கொண்ட உறுபய னடைவீர்
பிறப்பறுத் தாள்வான் பேணியத் தேவே. 57

## சித்திரகவி-மாலைமாற்று

### குறள் வெண்பா

வேதாமா காநாதா வேலாவா நீவாலா
வேதாநா காமாதா வே. 58

## சித்திரகவி - இரதபந்தம்

### நேரிசை வெண்பா

மாதுறையைத் தேடிவாழ்வாய் மாசிலாவா றென்மனமே
தீதுனைத்தான் சேர்வதிலை யாலறிவாய்—போதணிந்தாள்
வேலெனுமக் கண்பிடியாள் வள்ளிவடி வாளிலகு
வாலவடி வேலனை வாழ்த்து. 59

## கிள்ளைவிடு தூது

### பன்னிரு சீராசிரியம்

வாழ்த்திக் குகனை வாதத்தாய்
வறிதே கடிந்தாள் வாதத்தாய்
வாரா மலிருந் தாரேனோ
வந்தா லென்னைத் தாரேனோ
ஆழ்த்தித் துயருள் விடுத்தார்வாய்
அல்லல் கூறி விடுத்தார்வாய்

அணிசேர் குறுக்குத் துறையாரே
அன்போ டிவண்வந் துறையாரே
பாழ்த்த மனமும் துணிந்தாலும்
பலனுண் டிலையே துணிந்தாலும்
பருகி மடிவேன் இனியாரே
பாரி லென்பால் இனியாரே
காழ்த்த மனமுந் திரிவாரோ
கான மயின்மேல் திரிவாரோ
கனிந்தென் னுள்ளத் திருப்பாயே
கடிதே அவரைத் திருப்பாயே. 60

## சுரும்பு

### கட்டளைக் கலித்துறை-முதன்மடக்கு

பாயுந் தலையணை யும்பொரு நைத்துறைப் பாலகரால்
பாயுந் தலையணை யும்பெருந் தீயாய்ப் படுகிறதே
பாயுந் தலையணை யும்விருப் பில்லேன் படுத்துழன்றேன்
பாயுந் தலையணை யும்போது நீங்கிப் பகர்சுரும்பே. 61

## இடமணித் தென்றல்

### அறுசீராசிரியம்

பகரமிகு பேதாய்நீ பதறுவது
மேனோதான் பரிந்த ருள்செய்
குகரமரும் திருவுருமா மலைநாட்டில்
நம்மிருவர் குடியா யுள்ள
சிகரமவை யிரண்டுமிகச் சேர்ந்தொன்றி
யுன்றனது சீர்ந கில்கள்
நிகரமையும் என்றுணர்வாய் நீள்பகலுந்
தங்குவனோ நிற்பி ரிந்தே? 62

## சித்திரகவி - கோமூத்திரிபந்தம்

### கலிவிருத்தம்

தேவ ருந்துதி சீருரு மாமலை
ஆவ லுங்கொடு சேரணி வேலனே

நீவ ருந்ததி சூருறு மாறிலை
பாவ முங்கெடு மேரணி வேடனே. 63

## தலைவி இடங்கூறல் - வினாவுத்தரம்

### நேரிசை வெண்பா

ஏற்றமுறு மால்மனையார்? இக்குவிலான் மன்மதனும்
ஏற்றிடாத தென்னே? இவுளிதனைச்—சாற்ற
வருவதெது? மஞ்சை வழிமறிப்ப தென்னே?
உறுவிடையே நம்தலைவர் ஊர். 64

## பாண்மறுத்தல்

### நேரிசை யாசிரியப்பா

ஊர்திரு வுருமா மலையர் என்பால்
மார்பங் குனியார் மாசிலா என்மனை
யறத்தைக் குலைத்தும் அனைமார் கழிமன
விருத்தங் கொளவும் வருங்கார் திகைப்பிடப்
பசியைப் பசியெனப் பாரா தயரவும்
பிரிந்தெனை நீங்கிப் பிறர்மனை யேகிக்
கருமனக் காமக் கடல்புரட் டாசியர்
காசிலா வணிகம் கவினுறச் செய்து
காசினுக் கேற்பக் கலந்துற வாடி
வருவார்க் கின்பம் வழங்குவே னென்று
பெரிதும் ஆனி புரிந்தவர் பாலே
வைகா சிங்கென வழிப்பறி செய்யும்
வஞ்சகத் தார்பால் வாழ்ந்தவர்க் காகத்
துணிவுட னென்பால் தூதுசொல் பாண!
இனியான் யாசித் திரையே
தேடினு மவரைச் சேர்வதெந் நாளே? 65

## இரங்கல்

### கலித்தாழிசை

நாளை வருவேன் என்றவர் வந்திலர்
நாளை யென்பதும் நானறி யேனே
வேளை யறியா மனனே
நாளை வருவார் திருவுரு மாமலைக் கொழுநர் தாமே. 66

## முல்லை கண்டிரங்கல்

### பஃறொடை இன்னிசை வெண்பா

கொழுநனை விடடலர் கொண்டளியை நோக்கித்
தழைகணீர் சிந்தியருந் தாதுகைத்து நிற்றலால்
வெண்டளவே என்போல் விசனமுற்றாய் உன்னையான்
கண்டளவே தேறினேன் காண்பாய்நீ யாவும்
திருவுரு மாமலைவாழ் செல்வர்போ லென்னைப்
பொருபவர் யாரேயிப் போது? 67

## சித்திரகவி - முரசபந்தம்

### வஞ்சிவிருத்தம்

போது மேதிட மேதுவா
வாது மேயவ மேதுயா
யாது மேவய மேதுதி
கோது மேதிட மேதுகா. 68

## அம்மானை

### கலித்தாழிசை

கான்மான் மகளைக் கலந்ததல்லால் மாமலையர்
வான்யானை யோடும் மகிழ்ந்தனர்கா ணம்மானை
வான்யானை யோடும் மகிழ்ந்தனரே யாமாயின்
கான்விலங்கோ கந்தர் கழறுவா யம்மானை
ஆனையு டன்பிறந்தா லாகாரோ அம்மானை. 69

## சித்திரகவி - எட்டாரைச்சக்கரம்

### நிலைமண்டில ஆசிரியப்பா

மானைத் தொடர்ந்தே தினைப்புனம் நாடியே
போனவர் தேடிவா டுதிமனந் துடித்தும்
வள்ளி தன்னுற வேதினம் விரும்பியும்
துள்ளுபொன் மயிலதி னேறியங் கோடிடும்
மாதலம் போற்றிடு வளமார் துறையரை
யேன்தினம் நனியும் நீவிரும் பினையே. 70

### குறள்வெண் செந்துறை

விரும்பித் திருவுரு மாமலை யான்பால்
நெருங்கிச் சேர்ந்திடு நீசவெண் ணகமே. 71

### சித்திரகவி - சுழிகுளம்

#### வஞ்சிவிருத்தம்

அகமதி லாமா மோடி
கடிதுற வேபூ ணேமா
மதுமலி தாமா பூமா
திறலிலை யேதா வேலா 72

### இடைச்சியார்

#### எண்சீராசிரிய விருத்தம்

வேலாரு மிருகரிய விழியால் பேசி
வித்தார மாகவிரு கரங்கள் வீசி
பாலாரு மொழிகாட்டிப் பசப்புங் காட்டிப்
பருத்தவிரு குடப்பாலை பகரும் நீங்கள்
சேலாருந் தண்பொருநை சேருந் துய்ய
திருவுருமா மலையெங்குந் திரிந்தா லுந்தான்
ஏலாதும் பாலினையே எவர்க்கும் விற்க
இவண்நீங்கி யேகிடுவீர் இடைச்சி யாரே. 73

### பிச்சியார்

#### பன்னிரு சீராசிரிய விருத்தம்

யாரே நும்மைப் பெருமையுடன்
இனிதே காண்பர் பிச்சியரே
ஏனோ இந்தத் தவவேடம்
யாவும் விடுத்தே துறந்தீரோ
காரே யனைய கூந்தலினைக்
கலைத்தும் கண்ணால் பிணிக்கின்றீர்
கனமார் பணிகள் விடுத்தாலும்
கவினார் முகத்தால் வெட்டுகின்றீர்
சீரே குறிக்கும் செங்கலையே
தரித்து மொயிலாய் நடைபோட்டுத்

திரளுங் கும்பம் வெளிக்காட்டிச்
சிறுவ ரெம்மை யிழுக்கின்றீர்
பாரே துதிக்குந் திருவுருமா
மலைசேர் வீதி மருங்கெல்லாம்
பதுங்கிப் பதுங்கி நடக்கின்றீர்
பரிந்தெம் ஆவி தருவீரே. 74

### நேரிசை வெண்பா

வீரவடி வேலா வியனா வடுதுறைசெய்
சீரதிகங் கொண்ட திருக்குமரா-மாரன்
வருவழியுன் கூர்வேலை வைத்தெனைக் காப்பாய்
திருவுரு மாமலையாய் தேர்ந்து. 75

## தலைவன் கூற்று

### கட்டளைக் கலித்துறை

தேர்ந்தருள் செய்வார் திருவுரு மாமலைச் சீர்மறுகில்
கூர்ந்ததி வேக முடன்பரி தூண்டுங் குலவலவா
ஆர்ந்ததி யோசை யுடன்செல் பொருநை யடர்பெருக்கே
நேர்ந்தவி சார முறுகணீர் காட்டிடும் நேரிழைக்கே. 76

## கிள்ளை விடுதூது

### தரவு கொச்சகக் கலிப்பா

நேரிலவர் பாலடைந்து கூறிடற்கே கூசிடினும்
யாரிடத்து மூலமாயும் எடுத்துரைத்தா லாகாதோ
சந்தமுறு திருப்புகழைச் சாற்றியருள் அருணகிரி
அந்தமுறுங் கிளியாக அவர்புயத்தே யமர்ந்திருப்பார்
அவர்கண்டு
திருவுரு மாமலைச் செல்வரால் யானே
உறுதுயர் தன்னை யுரைத்தருள் கிளியே. 77

## ஊசல்

### எண்சீராசிரிய விருத்தம்

கிளியுமொரு கொம்பினிலே கின்னரம்போல் பாடக்
கிளரொளிசேர் ஊசலிலே கிருபையுடன் நாடிக்

களியுடன்நின் னிருமருங்கும் காரிகையர் மிளிரக்
கவினடரும் ஈராறு கருணைவிழி யொளிர
நளினமல ரிருபாதம் நான்றழகோ டாட
நான்மறையும் அவைதொடர்ந்து நலிந்தலறி வாட
துளியருளைச் சிதறியிந்தத் தொல்லுலகை யாட்டுந்
திருவுருமா மலைவேலா திகழ்ந்தூச லாடே. 78

## காலமயக்கு - தோழிதேற்றல்

### பன்னிரு சீராசிரியம்

ஆடிடு மாமயி லாருறை திருவுரு
மாமலை நாட்டினிலே
ஆரிருள் கூடிடுங் காரது நாடியும்
ஆளனும் வந்திலரே
ஏடியி தேயவர்க் கேயற மாவென
ஏங்கிடு மேந்திழையே
ஈதிலை யேகொடுங் காரென நீயினும்
ஏனுணர்ந் தாயிலையே
மூடிக மேறுவி நாயகர் மேவியவ்
வானிலு லாவிடலால்
மேனியை மேகமென் றேமத நீரினை
மாரியென் றெண்ணினையே
கூடிய பேரிடி யேயவர் தாமிடும்
ஓலமென் றேயறிவாய்
கூறிய வாறிவண் நாயகர் மேவிடு
வார்துய ரேதணியே. 79

## இரங்கல்

### எண்சீராசிரிய விருத்தம்

தணியாத மயலானேன் திருவுருமா மலையர்
தயவோடு வந்தெனது தாபமழித் திலரே
பணியாக அவராகம் படர்ந்தாலும் சுகமே
பாதையுறுங் கல்லாகப் படுத்தாலும் நலமே
குணியாத வடிவேலாய்க் கரமேவின் குணமே
கோலமயி லாய்வடிவங் கொண்டாலும் சுகமே

துணியாதவ் வாறெதுவுந் தீயவுரு பெறலால்
தீராத துயரால்கண் ஆறானேன் சகியே. 80

## தலைவன் கூற்று

### நேரிசை வெண்பா

ஆறாச் சுகந்தருமிவ் வாயிழையாள் வாய்மலரின்
மாறா நறுமணம்போல் மாந்ததுண்டோ - சீரார்
திருவுரு மாமலையர் தேயமெங்குஞ் சுற்றி
மருவலர்மொய் வண்டே வழுத்து. 81

### கட்டளைக் கலித்துறை

வழுவா வகையில் திருவுரு மாமலை வடிவழகைத்
தொழுவா ரெவருந் துயரடை வாரோ தொடர்வினைக்குக்
கழுவா யவனடி யல்லது வேறு கதியிலையே
புழுவா யுறினும் மறவேல் அவனிரு பொற்பதமே. 82

## வெறிவிலக்கல்

### எழுசீராசிரிய விருத்தம்

பொற்கொடி தனையே வருத்திடுங் கொடிய
பெருஞ்சுர மாமிதை யுணரா
மற்கொடி தினியும் பாயச மளித்தே
மருகிடச் செய்வதும் நலமோ
நற்குணர் குறுக்குத் துறையுறை யமலர்
நாடுறு மருத்துவர் வரினே
நிற்குமோ சிறிதும் நேரிழை யிவள்கொள்
நெடுஞ்சுர மேமறைந் திடுமே. 83

## தழை - தோழிக்கூற்று

### அறுசீராசிரிய விருத்தம்

திடுமெனப் புனத்தி னுள்ளே தழையுடன் நுழைந்து யானே
விடுமொரு கணைப்புண்ணோடு மானிவண் வந்த தோசொல்

லிடுமென வினவும் வீர! எழில்குறுக் குத்து றைமான்
படுமொரு புண்ணை யாற்றும் பண்புறு தழையீ தாமோ? 84

## கைக்கிளை

### கட்டளைக் கலித்துறை

தழைக்கும் வளஞ்சேர் திருவுரு மாமலைச் சாரலிலே
குழைக்குங் கொடியொன் றிருதளி ரோரிலை கொண்டதலால்
மழைக்கும் பலுமீர் குவளையுங் காந்தளும் மாணரும்பும்
அழைக்குங் குமுதமுங் கொண்டே கியதென் அகம்பிணித்தே. 85

## எழுத அரிதென்றல்

### பன்னிரு சீராசிரியம்

பிணிக்குக் கண்ணா ரருள்நோக்கும்
புயமார் கடம்பின் நறுமணமும்
புனையும் முடிகள் விடுசுடரும்
புனிதத் திருவாய் தருமொழியும்
பணிக்கை யணையும் வேலொளியும்
பணிசேர் மார்பின் திருவொளியும்
பாதத் தடிசேர் அனைத்துலகும்
படத்திற் சிறிதுங் காணேனே
கணிக்கு மளவில் லாவளஞ்சேர்
கவினார் குறுக்குத் துறைவாழும்
கந்தர் வடிவந் தனைமுழுதும்
காட்ட வொணுமோ படமெழுதி?
திணிக்கும் பிறவி தனையென்றுந்
தொண்டர்க் கெழுதா வேலவரைத்
தீட்ட முனைந்த எளியேனின்
சிறுபுன் மதியைப் புகல்வேனோ? 86

### நேரிசை யாசிரியப்பா

சிறுபுன் மதியேன் செய்வதும் அறியேன்
திருவார் குறுக்குத் துறைவே லாநின்
திருவடிப் புணையால் பிறவிக் கடலினைக்
கடக்கத் துணிந்தேன் காப்பதுன் கடனே

வாழ்வாம் கடலுள் வழியறி யாமல்
பாழ்போ கவெனைப் பணித்துவி டாதே
வாழ்வினுந் தாழ்வினும் வருமெந்
நாளினு முனைமற வாநெஞ் சருளே. 87

### நேரிசை வெண்பா

அருளாங் கனிபழுத்தால் ஆங்கெறியா ரோகல்
மருள்வார் கலிதீர்க்கும் மாண்பார் - பொருளே
குறுக்குத் துறைவாழ் குமரனே யென்னை
நெருக்கும் பிறவிதனை நீக்கு. 88

### கட்டளைக் கலித்துறை

நீக்க மறவே நெருங்கி யுனதடியில் நின்றுயரும்
ஆக்க முறவே அடியேன் தனக்கருள் ஆறுமுகா
நோக்க முடனுனை நாடும் அடியரின் நோவழித்துத்
தேக்க முறுசீர் திருவுரு மாமலைச் சேவகனே. 89

## தூது

### கலிவெண்பா

சேவலே யான்படுந் துன்பமெலாங் காணாயோ
ஆவலே கொண்டேன் அவரணைய - மேவிய
நின்புகழ் தன்னை நிகழ்த்திடவு மாகுமோ
என்புகழ்வ தென்றே அறியேனே - அன்புடையாய்
கொண்டை யசைத்துநீ கூவிக் குரலெழுப்பின்
அண்டமெலாந் துள்ளி யதிராவோ - மண்டொளிரும்
செங்கதிரோன் தன்னைச் சிறகடித்து நீகூவின்
இங்கெழுந்தே நாட இசையானோ - புங்கமுறும்
நீகூவக் கேட்கின் நெருங்கும் வினைகளெலா
மேகூவி யோடி மறையாவோ - மாகூரார்
வேலைப் பிடித்தார்நீ வாய்திறந்தே கூறிடும்
பாலைப் பழிக்குமொழி பாராரோ - சேலாருந்
திண்பொருநை மேவுந் திருவுரு மாமலையர்
கண்பொறாஅ வேளையே கண்டறிந்து - பெண்பிறந்த
என்பாடு கூறியென் இன்னல் தவிர்த்திடவே
அன்போ டவரை யனுப்பு. 90

## இரங்கல்

### பதினான்கு சீராசிரியம்

புங்கமு றுங்குக ரன்பினை நம்பியென்
புந்திய ழிந்துடல் மெலிந்தேனே
பெண்ணெனக் கொஞ்சமும் எண்ணில ரன்னவர்
கன்மனந் தன்னையென் புகல்வேனே
துங்கமு றுங்குறுக் குத்துறை தங்கிய
சுந்தர ரன்றொரு புனம்நாடி
சுந்தரி யென்றுகு றத்தியொ ருத்தியைச்
சொந்தமு டன்சுகித் திருந்தாரே
இங்கவர் வந்தெனைக் கொஞ்சிய ணைத்திட
இன்னமு மென்னம வுனந்தானோ
என்னிலு மன்னவள் எந்தவி தந்தனில்
இன்னலங் கொண்டவ ளதுகாணேன்
பங்கமு றும்படி என்னைம றந்தது
பண்பல என்பதும் அறியாரோ
பந்தமி கழ்ந்திடு கந்தரை யெண்ணுவ
தின்னமும் நன்றல சகிமாதே. 91

## சித்திரகவி - சதுர்நாகபந்தம்

### நேரிசை வெண்பா

தேவனே சேந்தா திருமுருகா தாட்சேர்பு
மேவடியேன் நோவதா மாதாவே - நோவையே
தீராயோ ராதியே தேசேறு சேயையே
ஓராயோ நீயே யுரை. 92

## தூது

### சிந்தியல் வெண்பா

உரைசேர் திருவுரு மாமலையில் வாழும்
பரைசேய் திருமுருகர் பால்நீ - வரைமயிலே
சொல்லியே வாராயோ தூது. 93

## நற்றாய் இரங்கல்

### தகரவர்க்க நேரிசை வெண்பா

தூதோது தத்தைத்தீ தோதூதித் தீதேதோ
தேதாதைத் தீதேதோ தூதத்தை - தீதேதோ
தொத்தித் ததைத்ததே தித்தி ததிதுதித்துத்
தத்தைத் துதைத்தே தா. 94

## குறம்

### எண்சீராசிரிய விருத்தம்

தாவியலை கள்திரண்டு தடங்கரையில் மோதுந்
தண்பொருநை தாரெனவே வண்பெருக்கோ டோடும்
காவியடர் நீர்ச்சுனைகள் மேவிவனப் போங்கும்
காக்களிலே தீங்குயில்கள் பாக்களிசைத் தாடும்
மேவியசீர் ஆவடுதண் துறையருமன் றாடம்
விருப்புடனே புரிவிழவுஞ் சிறப்புகளும் ஓங்கும்
தேவியென எம்குலத்து வள்ளிதனைக் கொண்ட
சீர்முருகர் சேருருமா மலைக்குறத்தி யம்மே. 95

## இதுவுமது

### எண்சீராசிரிய விருத்தம்-வேறு

சீர்முருகர் சேருமுரு மாம லைதனில்
செல்வியேநீ கொண்டதுண்மைக் காய்ச்ச லல்லடி
கார்முருகுக் கூந்தலேநீ கந்த ரைமுனம்
கண்டதனால் கொண்டதொரு காமக் காய்ச்சலே
நீர்பெருகு மாறுகண்ணில் நீவ ருந்திடேல்
நிச்சயமாய் நாளையவர் நாடி வருவார்
தார்பெறுவாய் பாரவருந் தாம தஞ்செயார்
தாட்டிகமாம் என்குறிநீ கேட்டி டாயமே. 96

### நேரிசை வெண்பா

கேட்டினை விட்டே கிருபைசேர் வேலவன்
மாட்டினி யேனும் வருவீரே - பாட்டில்
திருவுரு மாமலையின் சீர்கூறு வீரேல்
வெருவினை யேதுபுல வீர். 97

### கட்டளைக் கலித்துறை

புலவீர் திருவுரு மாமலை தன்னைப் புகழ்ந்திடுவீர்
வலவே லவனின் பெயர்களைப் பாடி வழுத்திடுவீர்
இலவே றுதுணை இவனல் லதினி யெனவுணர்வீர்
கலவீ ரொருவே றுதெய்வ முமது கனவிலுமே. 98

### எண்சீராசிரிய விருத்தம்

கனவினிலு முனைமறவேன் கந்தா என்றன்
காதலினை யினுமுணர விலையோ சொல்வாய்
மனதிலுனை வரித்ததன்பின் மகிழ்ந்து நீதான்
வந்தெனையாட் கொளவிலையேல் மதிப்பார் யாரே
தினமினிய சாறுபொலி நெல்லை தன்னுள்
திருவுருமா மலையுறையுந் தேவ தேவா
நினதினிய நிழலதிலே நிலைத்து வாழும்
நேரமதே எனக்கினிய நேரங் கண்டாய். 99

### பன்னிரு சீராசிரிய விருத்தம்

காண்பேன் நினது வடிவமொன்றே
காணேன் பிறிதே கதிர்வேலா
கலங்க எனையே நீவிடுத்தால்
கண்டார் பழித்தே நகையாரோ
பூண்பே னுனது கடம்பினையே
பூணேன் பொன்னும் மணியேனும்
பொழிலார் குறுக்குத் துறைநாதா
பிழையென் புரிந்தேன் பெருமானே
மாண்பார் நினது மலரடிக்கே
மறுவில் தொண்டு புரிவதலால்
மறந்தே பிறவும் நினையேனே
மனம்நீ யிரங்கி யருளாயோ
வீண்பார் மவுன மினுமேனோ
வியனா ருலகந் தூற்றவெனை
விடுப்பா யோகொண் டணைப்பாயோ
வேறே கதியும் அறியேனே. 100

### நேரிசை வெண்பா

அறியாமல் யாதும் அடிமையான் தீது
புரியாநின் றாலும் பொறுத்துச் - சிறியேனை
வந்தாள் திருவுரு மாமலை மன்னும்வேற்
கந்தா திருமுரு கா. 101

**குறுக்குத்துறைக் கலம்பகம் முற்றிற்று**

உ

# குன்றக்குடியிற்கோயில் கொண்டுள்ள முருகப்பெருமான் கலம்பகம்

## தண்டபாணி சுவாமிகள்

### பாயிரம்

காப்பு-வெண்பா

நன்றான செந்தமிழ்தேர் நாவலர்போற் றும்வண்மை
குன்றாத குன்றக் குடித்தலத்தில்-நின்றாடும்
காலான் அணியும் கலம்பகத்தைக் காப்பதவன்
வேலா னது(ம்)மயிலு மே. 1

கட்டளைக் கலித்துறை

மயிலாடு சோலையங் குன்றக் குடியில் வலியவந்து
கயிலாய நாதனும் கைதொழும் கந்தன் கலம்பகத்தைக்
குயிலாகத் தோன்றும் குறத்தியும் கோமளக் குஞ்சரியும்
அயிலான பேரருட் கண்கொண்டு காப்பதுண் டம்புவியே. 2

அறுசீர்க் கழிநெடில்

சீலமிகும் உடலாதி மூன்றினையும் குருபரன்பாற்
செலுத்து மேலோர்,
பாலணுகித் திருவருட்சீர் உணர்ந்துசெழுந்
தமிழ்மதுரம் பருகு வோரே
காலமழை யனையசெங்கை யுடையகுன்றக்
குடிக்குகவேள் கலம்ப கத்தாற்
சாலமகிழ் வுறுவரன்றோ தவளமலர்ப்
பொருட்டுறையும் தைய லாளே. 3

### கலித்தாழிசை

குன்றுதொ றாடலின் முந்திய குன்றக் குடிவேள்மேல்
நன்றுத வுந்தமிழ் கொண்டுக லம்பகம் நவில்கின்றேன்
மன்றுள்ந டம்புரி வோனும்ந றுந்தமிழ் மலையானும்
அன்றுபெ றும்பொருள் கண்(டு)!உய ரும்பதம் அடைதற்கே. 4

### சந்தக்கவி-எண்சீர்

*தந்தத் தனத்தன தனதான தந்ததன*

வஞ்சப் புலப்பகைவர் கெட,மாறில் அன்புதவும்,
வந்தித்து முத்திபெறும் அநுபூதி மிஞ்சவிடும்,
நெஞ்சத் திரக்கமுறு கவுமாரர் நண்பருளும்
நிந்தித் திடத்துணியும் அவர்வேர் களைந்தொளிரும்
அஞ்சக் கரத்தில்நிதம் விளையாடு கின்றபரன்
அங்கைத் தலத்தில்உறு பிணைநாணு றுங்கண்உமை
கொஞ்சக் களிக்கும்ஒரு சிறுபாலன் என்றும்வரு
குன்றக் குடிக்குள்வரு புகழ்தோய் கலம்பகமே. 5

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா

### இவை ஆறும் தரவு

நீர்கொண்ட சடையானும் நெடியோனும் நான்முகனும்
சீர்கொண்ட கனகநகர்த் தேவர்களும் முனிவோரும்
காதலித்துப் புகழ்கூறிக் கரங்குவித்துப் பணிவதுகண்(டு)
ஆதரவின் அளவுதெரிந்(து) அருள்புரியச் சலியாமல்
கோகனக மலர்முகத்திற் குறுநகைபூத் திருமடவார்
பாகமுறச் செழுங்கலபப் பரிமீது பரிதிநிகர்
திருமுடிகள் ஓராறும், செவியணிகள் ஈராறும்,
மருமலியும் கடம்பணியும் மார்பிடத்துப் பணிபலவும்,
கொற்றமிகும் தனிவேலும், குலிசமுதற் படைபிறவும்,
சுற்றரைஞாண் முதலியவும், துணைமலர்த்தாள் அணிக்குவையும்,
மிக்கொளிரப் பெருங்கருணை விழிபரப்பித் தவளநிறக்
குக்குடப்புட் கொடிஓங்கக் குலவுகுன்றக் குடிவேளே.

### இவை ஆறும் தாழிசைகள்

உன்னருளால் உன்னருமை உணர்ந்(து) உனக்கே
தொழும்புசெய்யும்
என்னருமை அறியாதார் இடத்திலும்போய் நயக்கின்றேன்
ஓராறு நுதல்விழியுண்(டு) உனக்கெனவும் தெரியார்பால்
சீராருந் தமிழ்க்கவிதைத் திறலுரைத்துத் தளர்கின்றேன்,
இகபரசா தனப்பேறே ஏற்றமெனத் துணியார்பால்
பகலிரவா யலைந்துநயம் பகர்ந்துபொருள் விழைகின்றேன்,
நீபமா லிகைப்பெயர்நூல் நியமத்தே நில்லாமல்
கோபமா தியபொருந்தக் குவலயத்திற் சுழல்கின்றேன்
திசைகள்தொறும் வெண்ணீற்றுச் சிறப்புடையார் மிகுக்காமல்
தசையருந்தி உடல்வளர்ப்போற் சமயம்உறல் சகிக்கின்றேன்,
பேராசை யெனும்பிணியாற் பெருமையுடன்
அருமையும்போய்
ஊராருக் காளாகி உனைமறந்து திரிகின்றேன்.

### இவை நான்கும் அராகங்கள்

இயமனும் வசம்அற இடிநிகர் மொழிபகர்
கயமுகன் மலையொடு கருகிட முடுகினை,
புயமிகும் அரிமுகன் வரையுறழ் பலபல
புயமொடு தலை,அகல் புவியுற ஒருவினை
அடலுறும் அவுணர்கள் அதிபதி யுடல்,மயில்
உடன்ஒரு குருகென ஒளிர்தர அருளினை
கடவுளர் உறுதளை கவலையொ(டு) அறமுனம்
இடமிகு பொலநக ரினையினி துதவினை.

### இவை நான்கும் தாழிசை

ஈசனுக்கும் குறுமுனிக்கும் எழிலருணைப் புலவனுக்கும்
பேசரிய பிரணவத்தின் பெரும்பொருளை அறிவித்தாய்!
கீரனுக்கும் குருகைநகர்க் கிழவனுக்கும் தளைநீக்கிச்
சாரமுறும் தமிழ்மாலை தரித்துமன மகிழ்வித்தாய்!
கச்சிநகர்ப் புலவனுக்கும் கவிப்பகழிக் கூத்தனுக்கும்
பச்சிலையின் திருநீறு பாலித்து முன்னின்றாய்!
பாலையன் முதலாய பலகோடி பத்தருக்கும்
மாலையம் அறக்களைந்துன் மலரடிக்கீழ் அமர்வித்தாய்!

இவை இரண்டும் நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்

ஆறெழுத்(து) உரைப்பவர்க்(கு) அனைத்தும் ஆகிநின்(று)
ஊறெழுத்(து) அழிக்குமோர் உருவும் ஆயினை!
போதமே உயர்வெனப் புகலும் மாதவர்
ஆதரத் தொளிவிடும் அருவும் ஆயினை.

இவையிரண்டும் முச்சீர் ஓரடி அம்போதரங்கம்

பலபல மலையினும் நின்றனை
படிறுறும் அமணரை வென்றனை
இலகிய புனமிசை சென்றனை
எயினர்கள் தமதுயிர் கொன்றனை.

இவை நான்கும் இருசீர் ஓரடி அம்போதரங்கம்

விதியை ஒறுத்தனை வினையை அறுத்தனை
சதியை வெறுத்தனை தருவை இறுத்தனை
கடலை வடித்தனை கவிகள் படித்தனை
நடலை முடித்தனை நடன நடித்தனை.

இது தனிச்சொல்

என ஆங்கு



இஃது ஆசிரியச் சுரிதகம்

அணிமா முதலிய ஆய சித்தியும்,
பிணிதீர் உடம்பிற் பெருக்கநீ றணியும்
தொண்டர் கூட்டமும், துகளறு புலமை
அண்டர்போற் றிசைப்ப அணைதரும் வாழ்வும்,
மூவகைத் தாய முகிழ்மலர்ப் பூசனை
யாவரும் போற்ற இயற்று மாண்பும்,
பொதிய மால்வரைப் புனிதர்தம் அவைப்பால்
விதிவழிச் சென்று மீளுந் திறலும்,
புணரி ஆதிய புனலொடு கனற்பால்
தணவரும் சுவைதோய் தமிழ்க்கவி யனைத்தும்
பழுதற வாங்கிப் படியினர்க் குதவும்
விழுமிய புகழும், விரும்புவ பிறவும்
சிறியேன் பெற,நீ திருவுருக் காட்டி
வெறிதோய் மலர்நேர் மென்பதம் புனைந்து

சமரச போதத் தன்மைமுற் றுணர்த்தி
அமல நெஞ்சகத்(து) அடியருட் கூட்டி
இறப்பொடு பிறப்பற இயங்கும்
சிறப்புறுங் கதியிற் சேர்த்தளித் தருளே. 1

### வெண்பா

அருட்பேறு வேண்டுமனத்(து) அன்பர் கவியின்
பொருட்பேறு நாடும் புனிதா — தெருட்பேறும்
என்றற் குதவி எடுத்தணைத்துக் காத்தருள்வாய்
குன்றக் குடியிற் குகா. 2

### கட்டளைக் கலித்துறை

குகனே பரமெனச் சொல்வோர்க்கும் சிற்சபைக் கூத்துடையான்
மகனேயென் றோதி மறுப்போர்க்கும் தக்க வரங்கொடுக்கும்
அகனே! வளம்பெறும் குன்றக் குடியில் அமரும்அறு
முகனே! உனைநம்பி னேன்சிறி யேன்தவம் முற்றுதற்கே. 3

### கலிநிலைத்துறை

முற்றும்உ ணர்ந்தருள் குகனைக் கதிர்வேல் முருகோனைப்
பற்றுந ரேவளர் குன்றக் குடியைப் பரவாதார்
கற்றுயர் கின்றவ ரெனினும் குறைதீர் கனகப்பே(று)
உற்றுணர் கின்றவ ரெனினும் தமியேன் உறவன்றே. 4

### அறுசீர்க் கழிநெடில்

அன்றுநலம் இன்றுகொடி(து) எனக்கால
விகற்பமிக அறைந்து வாழ்நாள்
சென்றுவயோ திகம்பெருத்துத் திண்டாடும்
அவர்குழுவிற் சேர லாமோ?
குன்றுதொறா டலில்உயர்ந்த தெனப்பெரியோர்
விளம்புகுன்றக் குடியில் மேவி
என்றும்ஒரு படித்தாகித் திகழ்வடிவேற்
பெருமானே எனைக்காப் பாயே. 5

### எழுசீர்க் கழிநெடில்

காப்பணிந் திலகும் வடிவும்ஓ ராறு
கவின்முகக் கண்டிகைக் கழுத்தும்

பாப்பகர் நாவும் சிவந்தவான் கலையும்
பழுதில்கோ வணத்தொடு கீளும்
நீப்பரி தாய நிலையும்உற் றவரே
நிகரில்குன் றக்குடிக் குகவேள்
மாப்படப் பொரும்வேற் படைப்பெரும் பூசை
வகையெனக் குரைத்தனர் மன்னோ. 6

எண்சீர்க் கழிநெடில்

மன்னர்முதற் பொருளுடையார் தமையும், உன்றன்
வடிவுணர்ந்(து)ஆ றெழுத்தோதி வழுத்தி டாமல்
கன்னல்வில்வேட்(கு)உருகுமவர் தமையும், செஞ்சொற்
கவிமதுரம் அறியாதார் தமையும், நாடி
இன்னல்உறா(து) உனதடியார்க் கடிமை யாகி
எழுபிறவிக் கடல்கடக்கும் எழிற்சீர் ஈந்(து)ஆள்!
கொன்னகுவேற் பெருமானே! இணைதீர் குன்றக்
குடித்தலத்தில் விளையாடும் கொற்ற வேளே. 7

பதினான்குசீர்க் கழிநெடில்

வேளுக்கு மனநாணும் எழில்கொண்ட குமரனை,
வினைப்பிணி தவிர்த்து மருளாம்
மெய்ஞ்ஞான வாழ்வினில் விடுக்கும்ஒரு குருபரனை,
வேதா கமந்து திக்கும்
தாளுக் கிசைந்ததல மாமெனஎன் நெஞ்சம்
தனைக்கொண்ட முருகே சனைச்,
சந்தத் தமிழ்க்குரிய குன்றக் குடிக்குள்வளர்
சரவணோற் பவனை, நினைவோர்
வாளுக்கு நிகர்விழிக் குறமகளும் இந்திரன்
வளர்த்தபே தையும்எ டுத்து
மார்போ டணைத்துச்சி மோந்துமே கலைபுனையும்
மடிமீ திருத்து வதனால்
கோளுக்கும் அஞ்சாத வலியுறும் கவுமாரர்
குலதிலக ராகி அப்பால்
குறுமுனியும் ஈசனும் பெற்றதைப் பெற்றுக்
குணாதீதர் ஆவர் அன்றே.

எண்சீர்த் தாழிசை

ஆவலென்ற பேய்பிடித்துள் அறிவுகெட்டு மங்கையர்க்(கு
அநுதினம் தொழும்புசெய்யும் அவர்களோடும்,
வெண்ணிற

சேவலைப் புகழ்ந்திடாத கவிஞரோடும், நிலையிலாத்
தெய்வம்நாடும் முனிவரோடும், நைவதைத் தவிர்த்திடாய்
மூவலற்றி லங்குகுன்றக் குடியுள்நின்ற முதல்வனே
முச்சுடர்க்கும் மூலமா முளைத்தெழுந்த சோதியே
பாவகத்த டங்கிடாத பன்னிரண்டு கையனே
பத்தர் சித்தர் நித்தர் முத்தர் பரவுதுங்க வேலனே. 9

**பதினான்குசீர்ச் சந்தக்கவி**

***தானன தந்தத் தனத்த தானன-தந்ததானா***

வேலணி யுங்கைச் சிறப்பும் ஆறிரு
தோள்களும், அன்பிற் சிரிக்கும் வாய்களும்,
வேறிணை யின்றிச் சொலிக்கும் மாமகு டங்கள் ஆறும்,

கோலமு றும்பத் தருக்குள் ஆடிய
தாள்களும், அங்கைப் பிடிக்கு நேரிரு
கோதைய ருஞ்,சற் றுளத்தி லேனும்இ ரங்கொ ணாதோ.

மாலயன் அஞ்சித் தொழக்கு லாவிய
சூலமு டன்சிற் சபைக்குள் ஆடிய
வானவன் அன்புற் றணைக்கும் ஆர்வமி குங்கு மாரா

சீலமி குஞ்சொற் றமிழ்க்கு நாயகன்
ஆகவி ளங்கிப் பொழிற்கு லாவிய
சீர்பெறு குன்றக் குடிக்குள் மேவிய கந்த வேளே. 10

## புயவகுப்பு. 64 கலை சந்தக்கவி

**முருகப்பெருமான் தோள்களின் சிறப்புகளைக் கூறுவது**

***தானதன தானதன தனதனந் தத்தனத் தனதான தந்ததன***

வேளினது சேனையெனும் மாதரனை வோருமிக
விரகமிஞ் சித்துதித் திடநீடி நின்றன
மேருகிரி ஆதியஎ லாமலையும் நாணமுற
மிகநெருங் கிக்கதிப் புடனேவ ளர்ந்தன
வேரிமது ஓடவல நீபமுதல் மாலிகைகள்
விகசிதம் பெற்றிடத் தினமேய ணிந்தன
வேயனைய தோளியர்(கண்) ணோடிணைய தாகுமென
மிளிரும்வண் டுற்றிசைத் திடுசீர்பொ ருந்தின

வேறிணையி லாதமணம் நாறுமதம் ஆதியவை
விரவுசந் தத்தைவெப் பறவேது தைந்தன
மீறுமொளி சேர்பரிதி யாவும்நிகர் தோளணிகள்
விலையறும் பொற்குவைப் பணியோடி யைந்தன
வேல்குலிசம் வாள்பலகை சூலமுத லாயபல
விபுதர்தங் கட்குவப் புறவேசு மந்தன
மேலுலகி னோரும்வசம் மாறஇடி நாணமுற
வெகுதரஞ் சத்தமிட் டிடுகோழி கொண்டன. ⅛

வேதம்ஒரு நாலுமுணர் வான்அலற மோதியபின்
விதனமிஞ் சச்சிறைக் கிடைபோடும் வம்பின
மேகம்நிகர் தாருகன்முன் ஆழிபறி போனதனை
விறல்முகுந் தற்களித் திடும்ஆண்மை துன்றின
வீரைதரும் ஆலம்அமு தாகநுகர் வான்முடியில்
வினவும்விஞ் சைப்பொருட் சொலும்நா ளிவர்ந்தன
மேடவடி வானவனை நீறுசெயு மாமுனிவன்
வினையொழிந் திட்டமிக் குறநீறு தந்தன
வீடுகரு தாதடிமை யாவதனை யேகருதும்
விரதர்தஞ் சொற்றிருத் தொடைகோடி ஒன்றின
வேள்விமுனி வோர்பதறி ஓடவரு சேயதகர்
வெகுளிமங் கக்கசைப் படையால றைந்தன
வேழமக ளாமவள்த னாசலம தால்உழுது
விடுதமும்(பு) உற்றிடத் தணியாதெ ழுந்தன
வேடர்இதண் மீதுவளர் பேதைகொளும் ஊடலிடை
மிதிபடுஞ் சிற்றடித் தடமோடி லங்கின. ¼

காளியெறி சூலம்இரு கூறுபடு மாறுபொரு
கரம்இரண் டுற்றவற்(கு) ஒருநாள்இ ரங்கின
காசுதவிர் வீரம்உறும் ஓர்விசைய னார்மனது
களிபொருந் தச்சரப் படையீய வந்தன
காதுபுரி யாதுசிவ யோகநிலை நாடுபவர்
கனவில்அஞ் சற்கரத் தொடுதோணும் நண்பின
காதல்வினை தீரஅருள் கூர்வரத மேவிஒளிர்
கவினுறுங் கைப்புகழ்ச் சியெலாம்அ டைந்தன
காரிமுத லானபல வீரர்களும் ஆவலொடு
கழறிடுஞ் சித்திரத் திறலால்உ யர்ந்தன
காணரிய வான்முகடு சேர்இரதம் வீரரொடு
கடிதுவந் துற்றிடப் பொருதார்வ மிஞ்சின

காரிருளை நேரும்ஒரு மாயமலை யோடுசில
கயவர்அன்(று) இற்றிடப் பொருதார்வம் மிஞ்சின
கானவய மாமுகம்ஓ ராயிரம்உ ளான்உரைசெய்
கபடவெஞ் சொற்படிக்(கு) அவன்ஆவி யுண்டன ⅜

காலனிகர் சூரன்விதிர் வாளொடெதிர் ஓடிவரு
கணம்நெடுஞ் சத்திவிட் டிருகூறு கண்டன
காவிரியில் ஓர்நெடிய வேயின்உரு வாகிவளர்
கடவுள்தன் துக்கமுற் றறவேபு ரிந்தன
காய்பரிதி ஏகும்வழி மூடியப ராரையொடு
கடலுறுங் கொக்கினைப் பிளவாவ கிர்ந்தன
காமம்அறி யாதமுனி வோருமன மானமடல்
களில்வரைந் துட்சலிப் புறவேதி கழ்ந்தன
காமருவு லோகமதில் மாதரணி தாலியொடு
கனகமஞ் சத்தில்உற் றிடநூல்பு ரந்தன
காவிமலர் போலும்விழி சேரும்ஒரு நாரியவள்
கணவன்வம் புக்கிளைத் திடும்நாள்ள திர்ந்தன
காரணநி ராமயம னோலயசு கோதயமெய்
கருதுமன் பற்றபொய்ச் சமண்வேர்க ளைந்தன
காசினியின் வாழ்வுபெரி தாகுமென நாடுமவர்
கவலைநெஞ் சத்தினுட் புகுதாதி ருந்தன ½

பாளிதமும் மோதகமும் மீறநுகர் வானுடைய
பகைவிளைந் திட்டதற்(கு) அயராமல் உந்தின
பாரதன மேருவொடு வீழஒரு நாள்நெடிய
பரிமுகந் துற்றமற் பெறுபேயை வென்றன
பாவலவர் கோவனைய கீரனெனும் ஞானமுனி
பகரும்இன் சொற்றமிழ்க் கவியால்ம கிழ்ந்தன
பாலைநில மேவியபொ யாமொழிமுன் ஓர்பொழுது
பரியதண் டத்தினைக் கொடுபோய விர்ந்தன
பானலணி யோடுகிளி யாம்அருணை மேயமுனி
பரவுசந் தத்திருப் புகழால்நி றைந்தன
பாகுநிக ராயதமிழ் தேர்முனிவர் ஏழெழுவர்
பரிவொழிந் துட்களிப் புறவேமு யன்றன
பாலையம காமுனிவன் ஆதியதி யானபரர்
பணிபுரிந் தத்தொழிற் செயவேவி ரும்பின
பாடலபு ராதிபதி நேர்பரம ஞானியர்கள்
பனுவல்கொண் டப்படிக் கொளவேமு யன்றன ⅝

பாதமலர் மீதுபல கீதலர் சூடுகிலர்
பதகர்தம் பக்கலுற் றிடவேது ரந்தன
பாடுகிற நாவுதொறும் வாணிகுடி யாவுறுதல்
பழுதெனுந் துட்டரைக் கொலவேது ணிந்தன
பாவரகி தாகரசு கோததியி லேமருவு
பவளஒண் கொப்பெனச் சொலவேப டர்ந்தன
பாகரச கோமளவி னோதநய சீலமிகு
பதமுணர்ந் திட்டகைக் கிளிதோள்ப திந்தன
பாதகநி சாசரர்கள் தோமரம தோடுபல
பகழிவெந் திற்றிடக் கனலாமு னிந்தன
பாய்பரிஇ லாஇர்தம் ஈயுமலை யால்உயிர்கொள்
பதிதர்மங் கத்தொலைத் தறவேநி வந்தன
பாமரரும் ஓசைநடை யால்மகிழ நீடுகவி
பயிலும்நெஞ் சத்தின்ஒப் புறவேசி வந்தன
பாழில்முய லாதகவு மாரர்மன மாம்மகளிர்
பகலினும் தொட்டணைத் திடவேமு யங்கின 3/4

மாளிகையி லேஅளவில் கூகையொடு கூ(வு)அவுண
மகளிர்நிந் தித்துமிக் கழவேகு ளிர்ந்தன
மாமலரில் வாழும்இரு நால்மகளி ராம்அவருள்
வயவர்சிந் திக்கும்உத் தமிதோள்பு ணர்ந்தன
வாசமிகு பூவுறுப னீரிலையின் நீறுகொடு
மறுவில்பண் பைத்தொகுத் தருள்சீர்பொ ருந்தின
வானில்உடு வாகும்இரு மூவரொடு மேனைமகள்
மலியும்அன் புற்றெடுக் கையில்மார்பு ரிஞ்சின
வாளரவெ லாம்அவச மாகநடம் ஆடிவரு
மயிலெனும் பொற்பரிக் குசைமேவு கின்றன
வாரணகு லாதிபதி யானதிரு ஞானமதில்
மதசலங் கொட்டும்உச் சியில்மோது மொய்ம்பின
வாதமிடு மூடரறி யாதநிலை தேறுமவர்
மகிமையென் கப்பெருத் திடுசீர்பொ திந்தன
மாமிசம்உ ணாதுதவ மேபுரிகு வாரெதிர்சின்
மயமிலங் கக்குறித் திடும்நீர்கி டந்தன 7/8

மாவிரத யோகியர்கள் பூசைவிதி சோர்வுறினும்
வழுவிலின் பத்துறச் செயுமால்வி ளைந்தன
மாவினொடு தேன்விரவி ஈயுமொரு மாதுமனம்
மகிழஎன்(று) அத்தினத் தினிலேகு விந்தன

மாலைவரு சேயநிற மேகமதின் மீதொளிரும்
மறுவில்செம் பொற்றடித்(து) எனநூல்பி றழ்ந்தன
வாணிமுத லோர்பலர்வி யாகரண நூல்உணர
வளைபிரம் பிட்டடித் தருள்கூர்அ ணங்கின
மாறில்உமை கூறும்வசை நாடியொரு காலம்அரன்
மறுகுமுன் புட்கையிற் றலையேகொ ணர்ந்தன
மாயைஉட லாகும்எனும் மூலவரை வேறுபடு
வடிவுகொண் டுற்றிடற் கிடமாவி ளங்கின
வார்குழையில் மேவுகுழை தாவுமெழில் நாடுமவர்
வறுமைதுஞ் சக்கொடுத் திடவேசி றந்தன
மாசுதவிர் மேலவர்கள் கூறுமறை ஓசைநலம்
மருவுகுன் றக்குடிக் குகவேள்பு யங்களே. 11

### நேரிசை வெண்பா

புயம்ஆ றிரண்டுடைய புங்கவனை, வன்கைக்
கயமா முகனைக் கடிந்து—செயமாரும்
குன்றக் குடியில்வரு கோமானைப் போற்றுநர்பொன்
மன்றத்(து) அரனையொப்பா வார். 12

### கட்டளைக் கலித்துறை

வாரணங் கூப்பிடும் குன்றக் குடியில் வளர்குகனைக்
காரண சற்குரு என்றுண ராத கசடருக்கும்
பூரண போதம் வருமோ?வெண் டாமரைப் பூவில்வைகி
ஆரணத் தோன்திரு நாவில்நின்.றாடும் அருட்கொடியே. 13

### கொச்சகக் கலிப்பா

அருட்கடலாம் உனைச்சிறிதும் அகத்தினிடை கருதாமல்
தெருட்சுடராய்த் தமைமதித்துத் திரிபவர்க்கும் இரங்குவையோ
மருட்கருங்கட் குறமானாள் வதிதருதண் புனத்தேகி
இருட்கருவேட் கிளைத்தார்போன் றிறைஞ்சுகுன்றக்
குடிக்கோவே. 14

### கலிவிருத்தம்

கோவை வாய்இதழ்க் குறமகள் கொழுநனை, விண்ணோர்
பாவை யூடலுக்(கு) உருகிநின்(று) இதம்பல பகரும்
தேவை, மாதவர் பரவுகுன் றக்குடிச் சேயைப்,
பூவை பாகனுக் கினியவன் என்பது பொதுவே. 15

### கட்டளைக்கலிப்பா

பொதுவி லாடும் புராந்தகன் மைந்தனைப்
பொருவில் குன்றக் குடிமேவு செல்வனைக்
கதுமெ னத்தொழு(து) உய்யாத மூடரைக்
கண்ணி னாற்றினம் காணவும் கூடுமோ!
மதும லர்ச்செழுங் காவியும் மூவிரு
வரைபொ ருந்திய மாமணிக் கோவையும்
பதும மென்கையிற் றண்டமும் நீறுதோய்
பவள மேனியைப் பார்த்தவல் லோர்களே. 16

### கலிநிலைத்துறை

வல்லார் விரும்பும்நம் குன்றக் குடிக்கோவில் வளர்வேலனைப்
பல்லாயி ரங்கோடி அண்டத்தும் நிறைகின்ற பரம்என்றிடா(து)
அல்லார் களத்(து)ஆதி தருமைந்தன் என்றோதி
அயர்வோர்கள்பால்
செல்லா திருந்(து)ஆ றெழுத்தோதல் கவுமாரர் செயலாகுமே. 17

### அறுசீர்க் கழிநெடில்

செயலறிந்து தவம்புரியச் சோம்பலுற்றுக்
கலகலெனும் சிலநூல் கற்று
மயலகன்ற பெரியோரிற் றமைமதிக்கும்
சிலருளத்தும் வசிக்கின் றாயோ
வயல்வளஞ்சேர்ந் திலங்குகுன்றக் குடித்தலத்து
முருகோனே! வள்ளை சாடும்
கயலனைய விழிமடவார் இருவரொடு
மயிலேறும் கருணை வாழ்வே. 18

### எழுசீர்க் கழிநெடில்

வாழ்வெனும் சிறுமியை மணஞ்செய்து நாடொறும்
மயக்கொடு முயக்கும் உற்றும்
தாழ்வொழிந் திடஅருளும் ஈகையா கியமகன்
தனைவிரும் பார்கள் நரரோ?
வீழ்வெனும் கொடிதற உனக்கன்பு புரிகின்ற
மெய்ப்பத்தர் சித்தர் அருளால்
ஆழ்வொருங் குதவிவளர் குன்றக் குடித்தலத்(து)
அமர்கின்ற கருணை முகிலே. 19

### எண்சீர்ச் சந்தக்கவி

*தனன தனதன தந்தத் தனன*

கருணை முகிலுறழ் சிந்தைக் குரவர்
கழறு முதுமொழி நம்பித் துகளில்
புருவ நடுவழி கண்டிட் டவர்கள்
புனித சமரசம் என்றைக் கருள்வை?
அருண கிரியென வந்தித் துருகும்
அடியர் மனம்நிகர் குன்றக் குடியின்
முருகன் அறுமுகன் என்றெத் தினமும்
மொழியும் நலம்உத வுஞ்சற் குருவே. 20

### ஒன்பதுசீர்ச் சந்த விருத்தம்

*தத்ததன தந்தத் தனத்ததன தந்ததன*
*தத்ததன தந்தத் தனத்ததன தந்த தனனா*

சற்குருவை நிந்தித் திடத்துணியும் வம்பர்பகர்
சத்தமுழு துங்கெட் டுனக்குரிமை கொண்டு முயல்வோர்
சொற்குருகும் நெஞ்சத் தினர்க்கடிமை என்றுவளர்
சுத்தகுணர் செஞ்சொற் பெருக்கொலி விளங்க அருள்வாய்
பொற்குவடும் ஒஞ்சிக் கிடக்கவுயர் கின்றதொரு
பொற்புமிகு குன்றக் குடிக்கிரியில் நின்ற முருகா
மற்குருகு தங்கிக் களிக்கஒளிர் செங்கையொடு
மற்றிணையில் பைம்பொற் சிகிப்பரியி வர்ந்த குகனே. 21

### பத்துசீர்க்கழிநெடில் சந்தக்கவி

*தனதனத் தந்தத் தனத்தான தன்னதன தனனா*

குகனெனச் சிந்தித் துனைப்பாடும் நன்மையுறு பெரியோர்
குவளையொக் குங்கட் கணைப்பாவை யன்னவர்கள் நடுவே
பகழிகைக் கொண்டற் பகட்பேறு மன்னவன திகல்சேர்
பழுதினுக் கஞ்சித் துடிப்பார்கொல்? உண்மைமொழி
பகர்வாய்
சகலருக் குஞ்சிற் சுகப்பேறு தன்னையினி தருள்வோர்
தறுகுபொற் குன்றக் குடிக்கோயி லுண்மருவு முருகா
அகவலுக் கின்புற் றெழிற்றோகை வன்னமுது கதன்மேல்
அயிலெடுத் தின்சொற் றமிழ்க்காவல் மன்னஅமர்
பரனே. 22

### பதினொருசீர்ச் சந்த விருத்தம்

*தனதனந் தத்தனத் தான—தத்ததானா*

பரவைஇன் பக்குடிற் றூதன்
ஒருவனுஞ், சிற்றுறுப் போடு
பரியகும் பத்துதித் தோனும்—உற்ற தோர்வாழ்வு
அரமியங் கட்டிலிற் காதல்
விநயபுஞ் சத்திருப் போலும்
அரிவைஎன் கைக்குவப் பாகும்—எற்கும் ஈவாய்
உரமிகுந் துற்குணச் சூரன்
நடுநடுங் கப்பொலப் பூமி
உடையவன் துக்கம்விட் டோட—வெற்றி வேலால்
இரவினுஞ் சத்தமிட் டார்வ
மொடுபொருங் கைத்திறத் தோடும்
இணையில்குன் றக்குடிக் காவல்—பெற்று ளானே. 23

### வெண்பா-தவம்

பெற்றிடுவ தெல்லாம் பெறவேண்டிப் பேர்பெரிய
வெற்றிவே லேந்தும் விமலனையே-பற்றிநின்று
கோடாத குன்றக் குடித்தலத்தைப் போற்றுதலே
தாடாளர் செய்யும் தவம். 24

### கட்டளைக் கலித்துறை

தவமே முயலினும், மங்கைநல் லார்மலர்த் தாளிறைஞ்சி
அவமே புரியினும், செவ்வேற் குமரன் அமர்தலினால்
நவமே மலிதருங் குன்றக் குடியில் நரர்கட்கெல்லாம்
சிவமேஎம் ஆருயிர் என்றுணர் ஆனந்தம் சித்திக்குமே. 25

### கலிநிலைத்துறை

சித்திக்கும் முத்திக்கும் ஆசித்து மாதவம் செய்வோர்களே!
எத்திக்கு மெச்சிடும் குன்றக் குடிக்குள் இருக்கின்றவேள்
சத்திக்கும் மயிலுக்கும் வாரணத் துக்கும் தமிழ்ப்பாடிடும்
பத்திக்குள் நிற்கின்ற கவுமா ரரைக்கண்டு பணிமின்களே. 26

### அறுசீர்க் கழிநெடில்

பணிலமுத்தம் திகழ்வீதி யுடையகுன்றக்
குடிக்குகனைப் பாடி ஆடித்

துணிவுதவும் சமரசச டாக்கரத்தைக்
குருபரன்வாய் சொல்லக் கேட்டுத்
தணிவறுஞ்சீர்ச் சண்முகவி னோதநன்னூல்
விதியுணர்ந்து தவஞ்செய் யாமல்
மணிமருவும் தூசுகப்பொற் கொங்கைநல்லார்க்(கு)
உருகுவ(து)என் மடமை! அன்றே. 27

## மேகவிடு தூது

### எழுசீர்

அன்று நான்முகன் படைத்திடும் உயிர்த்தொகை
அனைத்தையும் அனையே போல்
நின்று காக்கும்நல் எழிலிகாள்! உமைத்தினம்
நினைகுவ தொழியே னால்
குன்று றாவளம் உடையகுன் றக்குடிக்
குமரவே ளிடத்தே நீர்
சென்று நான்படும் துயரெலாம் மொழிந்தருள்
செய்கெனப் பணிவீ ரே. 28

### எண்சீர்த் தாழிசை

வீரைப் புனலைக் குடித்து விடுக்கவும்
விண்ணவர் ஊரிற் புகுந்து திரும்பவும்
பாரைப் புரப்பவர் தம்மை வணக்கவும்
பாடிய வாறு பலித்திடக் காணவும்
போரைப் புரக்கு மிலேச்சரை வெல்லவும்
பொன்னெனச் செம்பு பொலிந்திடக் காட்டவும்
கூரைப் பொருந்(து)அயில் நாடித் தெளியவும்
குன்றக் குடியிற் குகனருள் செய்ததே. 29

### வஞ்சித்துறை-இருசீர்

செய்யகுன் றக்குடி-ஐயனன்(பு) உற்றிடில்
மையல்நெஞ் சற்றுயர்-மெய்யறம் சிக்குமே. 30

### எண்சீர்க் கழிநெடில்

#### கைக்கிளை-தலைவன்றன்மை

சிக்கமில கிடவெளிறு சூழ்ந்த மைக்கண்
சிறிதுசிவப் புறத்தோகை விரித்துக் கூவித்

தக்கநடம் ஆடும்மயிற் பரியி லேறும்
சரவணவேள் மருவுகுன்றக் குடியின் மானாள்
கைக்கமலத் தணியும்வளை ஒன்றோ டொன்று
கலகலெனப் பேசும்ஒலி காதிற் கேட்டால்
இக்கன்வந்து பொருகின்றான், பவள வாய்ச்சொல்
இசைகேட்டால் என்படுமோ இதயம், மாதோ. 31

பதினான்குசீர்த் தாழிசை-நகர்ச்சிறப்பு

மாதர்கள் ஆடலின் ஓதையும், வேதியர்
மறையோ திடும்ஒலியும்,
வளர்தமிழ் நாவலர் துதியும் தேவர்கள்
மகுடம்உ ரிஞ்சுதலும்,
பூதர்கள் நாயகர் ஆதியர் தம்குறை
புகல்வதும், உயர்வேழம்
பொங்கும தங்கொடு பிளிறலும், மயிலும்
பூவையும் அஞ்சுகமும்,
சாதக மும்,பினும் உள்ளன வும்பயில்
சத்தமும், இடிநாணத்
தகுமும், முரசொடு விழவின் முழக்கும்
சலதிஅ டங்கிடினும்
சீதம ணங்கமழ் நறுமலர் பெருகச்
செறிபொழி லிடைமீறும்
திருவளர் குன்றக் குடிமுரு கனையே
சிந்திப் பதுநன்றே. 32

நேரிசை வெண்பா

நன்றுதவும் நின்பெருமை நாகர்பிரான் ஓதரிய(து)
என்றுணர்ந்து வாழ்வோர்க் கிழுக்குண்டோ—குன்றுள்உயர்
கோலா கலம்பொருந்தும் குன்றக் குடியினர்க்காக்
காலாக லம்பொரும்துங் கா. 33

கட்டளைக் கலித்துறை. திரிபு

காவியங் கண்ணினர்க்(கு) உள்ளுரு காதுனைக் கந்த! என்று
கூவியங் கண்ணி னலங்காட்டுங் குன்றக் குடித்தலத்தைச்
சேவியங் கண்ணி னடற்கன்னல் வேளைச் செகுத்(து) இதணின்
ஓவியங் கண்ணின தாறெழுத் தோதல் உறுவதென்றே. 34

### அம்மானை

என்றற்(கு) அணைமுதலாம் ஈரிரண்டு தாயகமும்
குன்றக் குடியிற் குருபரனே அம்மானை
குன்றக் குடியிற் குருபரனே ஆமாகின்
மன்றத்து முந்தவருள் வைக்குமோ அம்மானை
மாதனத்தைத் தந்துமன்றோ வாழ்விக்கும் அம்மானை. 35

### அறுசீர் விருத்தம்

மானிடம் பெற்று ளார்க்கு வகுத்தநூற் பொருள்ஓர் நான்கும்
வானிடம் புரப்போர் நாண வலிதெமக் கருள்வான் கண்டீர்
ஆனிடத்(து) இமயப் பாவை அருகுறப் பெரியோர் காணும்
கோனிடத் துதித்துக் குன்றக் குடித்தலத் தவிரும் கோவே. 36

### வஞ்சி விருத்தம் முச்சீர்

கோலமிகு குன்றக் குடி-வேலனது வெண்குக் குடம்
ஓலமிட உம்பர்த் தலம்-ஞாலமொடு நன்றுற் றதே. 37

### கட்டளைக் கலிப்பா

உற்ற வர்க்கும் உறவோர்க்கும் தன்உயிர்
ஒன்று மேதுணை என்றெண்ணி, உண்மைநூல்
கற்ற வர்க்குந் தவத்தோர்க்கும் சேர்ந்திடாக்
காசு தேடிக் கலங்கிட லாகுமோ
பெற்ற வற்கும் குறுமா முனிக்கும்ஓர்
பிரண வப்பொருள் பேசிய தேசிகா!
கொற்ற வர்க்கும் துணையான வேலவா
குலவு குன்றக் குடிக்கோவிற் கூத்தனே. 38

### இன்னிசை வெண்பா

கூத்தன் பரவவளர் குன்றக் குடிக்குகனே
காத்தருள வல்ல கடவுளெனக் கண்டிறைஞ்சிப்
பூத்தமலர் கொண்(டு)அவன்றன் போர்வேலைப் பூசைபுரிந்(து)
ஏத்தவல்லார் தம்மடிமை யாம். 39

### குறளடி வஞ்சிப்பா

யாமெமதெனும் தாமதர்தமை,
நாளுந்துதித் தாளுங்குரு
எனவேபணிந்(து) அனமேல்இவர்
விதிமதன்சமன் சதிதவிர்தவர்

போல்மகிழ்பவர் பால்மருவிலன் — அதனால்
வெள்ளியவரைபோல் விளங்குருக்காட்டித்
தெள்ளியமறையின் சிரப்பொருள்உணர்த்திக்
கோதறுதொண்டர் குழுவினில்கூட்டி
ஆதரவுடனுற் றருளவேண்டும்
குஞ்சரம்பிளிறக் குரக்கினம்புயலென்(று)
அஞ்சல்உறீஇ அலமரும்பொழில்சூழ்
குன்றக்குடியிற் குலவுசிற்பரனே. 40

### கலிவிருத்தம்

பரவு வார்க்கிரு பங்கயத் தாளருள்
குரவ னே!எழிற் குன்றக் குடிக்குள்வாழ்
சரவ ணோற்பவ னேஉனைச் சார்ந்தும்யான்
கரவு கொண்டு கலங்குவ தென்கொலோ. 41

### கொச்சகம்

என்கனவிற் பலகால்வந் தியம்பியசொற் சோராமே
கொன்கலபச் சிகியாய குரகதத்தில் வந்தருள்வாய்
வன்கணர்க்கும் திருவருளே வழங்குகுன்றக் குடிக்கிரிமேல்
மின்கலுழ்வேற் படையேந்தி விளங்குகுகப் பெருமானே. 42

### மடக்கு-கொச்சகம்

பெருகுகுன்றக் குடிக்கோவில் பேணுவார் குடிக்கோவில்
பருமலர்ச்செந் திருவருளும் பரவுநர்க்குத் திருவருளும்
தருமடியார்க் குயிராகும் தவம்புரிவோர்க் குயிராகும்
பொருபிறவுந் துரந்தரனே பொருந்துமயிற் றுரந்தரனே. 43

### களி-பதினான்குசீர்

துரந்து சூரனை வென்று மீண்டருள் சுத்த ஞானதி வாகரன்
தூய குன்றக் குடிக்குள் மேவிய சுந்த ரக்குகன் அன்பினால்
கரந்தி டா(து)அருட் கள்ளை யுண்டு களித்து ளேம்,ஒரு காலமும்
கால னுக்கயர் கின்றி லேம்இது கண்டு பாடுமின் கவிஞர்காள்!
இரந்து சுற்றம்வ ளர்க்க வேண்டி இராவ ணன்திறல் வாலியை
எய்து கொன்றதும், வீமன் வானரம் யாவும் உயர்ந்திட வந்ததும்

நிரந்த ரம்புகழ் பெற்ற மாருதி நிகரில் வான்மலர் கொண்டதும்
நீதி சேர்தரு மன்கை ஏற்றதும் நித்த மும்சொலல்
நிற்கவே. 44

### நேரிசை வெண்பா

நிற்கும் நிலையுணர்த்தி நேரிழையார் வாயுரைக்கும்
சொற்குருகு மோகம் தொலைத்தாண்டு—நற்குணமே
துன்றக் குடிலையினிற் றோய்பொருளைக் காட்டவல்லான்
குன்றக் குடிவளரும் கோன். 45

### கட்டளைக் கலித்துறை

கோனாகி உண்மைக் குருவாகி யார்க்கும் குலதெய்வமாய்
நானாகி நின்றதும் தானாகித் தீயவர் நாடரிய
வானாகி ஒப்பறும் குன்றக் குடியில் வளருமலைத்
தேனாகித் தித்திக்கும் செவ்வேள்பொற் றாள்களிற்
சேர்வதுண்டே. 46

### எண்சீர்த் தாழிசை

உண்டுண் டுதுயின் றெழும்ஊ ரவருக்(கு)
உறவா கியுழன் று,முயன் றுபொருட்
கொண்(டு)உண் கண்மடந் தையருக் கருள்வோர்
குன்றக் குடியிற் குறுகப் பெறினும்
வண்டுண் டகடம் பணியும் புயவேள்
மறலிக் கு(ம்)மதப் பயலுக் கும்வெறும்
புண்டுன் றுதலைப் பிரமற் கு(ம்)மனம்
புலரப் பொருமற் புகழைத் தருமே. 47

### மருட்பா

புகழ்கொடுக்கும் ஆனந்த போதம் பெருக்கும்
இகழ்வறுக்கும் ஆறுவரை யேற்றும்—திகழ்வடிவேற்
கொன்றவன் மருவிய குன்றக் குடியில்
உற்றவர் கரத்தால் உதவும்
நற்றவப் பயன்றோய் நனையா நீறே. 48

## மடக்கு

### கட்டளைக் கலிப்பா

நீறு போர்த்த கவுமார னாகமா நீறு போர்த்த கவுமார னாகமா
மீறு பாயலு றுப்பானை யன்றமை மீறு பாயலு றுப்பானை
யன்றமை
வீறு தோய்ந்த வடிவேலன் பண்ணவர் வீறு தோய்ந்த
வடிவேலன் பண்ணவர்
கூறு குன்றக் குடிக்கோவி லாதியே கூறு குன்றக்
குடிக்கோவி லாதியே. 49

### எண்சீர்த் தாழிசை

ஆதிக்கொரு பொருளானதை அறியப்பகர் முருகோன்
அணிமேவிய குன்றக்குடி அமலன்புகழ் கோடி
நீதிச்சதுர் மறையாலும்நி கழ்த்தாதவை நிற்க
நிறைகல்விய துடையேமென நினையுஞ்சில மூடர்
பாதிக்கலை மதிவாணுதல் மடவாரையும், மனிதப்
பதராமவர் தமையும்பகர் பண்புற்றிடல் என்னோ?
சோதிக்கதிர் வேலேதுணை எனஓதிடும் நாவில்
தொலையாநடம் இடுதாளுறு சொற்சுந்தர மாதே. 50

## வண்டு விடுதூது

### சவலை வெண்பா

மாதரெல்லாம் என்னை மதிக்கஇன்னே வண்டினங்காள்!
கோதறு சீர்க்குன் றக்குடிக் குகன்பால்
ஆதரவோ டென்துயரம் அத்தனையும் சொல்லிஅவன்
சீதமலர் ஈயச் செயும். 51

### கட்டளைக் கலித்துறை

செய்யவள் போற்றும்நம் குன்றக் குடியிற் சிவகுருவாம்
மெய்யனைச் சண்முகப் பெம்மானைச் செங்கதிர் வேலவனை
ஐயமு றாத மனத்தாற் கருதும் அடியவர்மேல்
எய்யவும் வல்லவ னோ?மல ரோனுக்(கு) இளையவனே. 52

### கலி விருத்தம்

இளமை நீங்கருங் குமரனைக் கனல்விழி இலங்கும்
குளம்ஒ ராறுடைக் குரவனைக் குளிர்புனற் பணைசூழ்

வளமை மேவுகுன் றக்குடிப் புலவனை வழுத்தார்
களவு றாமனம் பெறுவது கதையினுங் கதையே. 53

### சந்தக்கவி

#### கலிநிலைத்துறை

*தனதந்த தனதந்த தனதந்த தனதந்த தந்தத்தன*

கதைகொண்ட சமன்வந்து பொருமுன்பு மலர்கின்ற கஞ்சக்கழல்
இதையங்கொ டுனைநம்பும் நிலைதந்து சுகமிஞ்சும்
இன்புய்த்திடாய்
குதையொன்று சிலையங்கை யினர்நின்று புகழ்கின்ற குன்றக்குடி
அதைஎன்றும் அரசென்க அயிலுங்கொ டமரும்பொன்
அந்தத்தனே. 54

#### வேற்றொலி வெண்டுறை

அந்தமுதற் பகருமொரு மூன்றிடத்துந்
தானாகி அயில்வேல் ஏந்திப்
பந்தமற்றோர் காணநிற்கும் குகனுறும்குன்
றக்குடியைப் பரவ வல்லார்
செந்தகைத் திருவும்வெண் திருவுந் தோய்தரு
சுந்தரத் தோள்கொடு துலங்கு வார்களே. 55

### இரங்கல்

#### பதினான்குசீர்த் தாழிசை

வார ணிந்தமுலை மங்கை மாரும்,வரி
வண்டி னங்களுடன் ஐவகை
வன்ன மீறவளர் கிளிக ளும்,பிறவும்,
வளமை மேவுகுன் றக்குடித்
தார ணிந்தபுய வீர வாகுபணி
சண்மு கக்கடவுள் முன்புபோய்த்
தகுதி யானமொழி பகரில், அன்னவர்
தரிப்பர் கொல்?எனம தித்துநான்
சீர ணிந்தமன மதைவி டுக்க,அது
சென்று செங்கமல மலரைநேர்
திருவ டித்துணையில், மதுவெ னப்பெருகு
சீர ருட்களி பொருந்திஒர்

கூர ணிந்தகதிர் வேலி னும்பொருவில்
குக்கு டத்தினும்நெ ருங்குதோட்
குவடி டத்தினு மலைக்கு றத்திஇதழ்
கொண்ட வாய்களினும் நின்றதே. 56

### சந்தம்

#### பத்துசீர் விருத்தம்

*தந்த தானனத் தத்தந் தத்தன தய்யன*

நின்ற தாவரத் தைப்,புன் சொற்பகர் கிள்ளையை,
நெஞ்சை, ஓதிமத் தைக்,கஞ் சத்துறு புள்ளினை,
நன்ற தாகநத் திக்கொஞ் சக்கவி சொல்பவர்
நந்து றாவுன்வெற் றிச்சந் தத்தமிழ் கொள்வர்கொல்?
என்ற தேயெனப் பொற்கும் பப்புன லுள்வரும்
எங்கள் காவலற் குத்தந் திட்டதொர் எல்லையின்
ஒன்ற ஈகெனச் செப்புஞ் சத்திய வல்லவர்
உய்ந்து வாழ்வனப் புக்குன் றக்குடி ஐயனே. 57

### இரங்கல்

#### கட்டுத்தாழிசை

ஐய மற்ற மெய்யரே செய்கை யிற்ற துய்யரே
அருள்மி குந்த நேயரே பொருள்வி ரும்பும் வாயரே
மைய மொன்றும் யோகரே பொய்ய கன்ற நாகரே
மாதி ரத்து வாழ்நரே ஆதி வத்து வீழ்நரே
செய்ய குன்றக் குடியிலே வைகு மன்சிற் றடியிலே
சேர்ந்த சிந்தை மீளுமோ? ஆர்ந்த இன்பம் நீளுமோ?
வையம் நிந்தை கூறுமோ? மெய்ய றிந்து தேறுமோ?
மாய்வ(து) அஞ்சல் மேவியே ஆய்வ தென்றன் ஆவியே. 58

#### பாண்-நேரிசை வெண்பா

#### தலைவன் பிரிவுபற்றி ஊடல்கொண்ட தலைவியிடம் தூதுவந்த பாணனை மறுத்தல்

(இங்கு தலைவன் முருகப்பெருமான்)

ஆவித் துணையாகும் ஆறிரண்டு தோட்குகன்மேல்
கோவித்துக் கொள்வதற்கும் கூறினையோ—சேவித்து

மாதறுசீர் மாமுகன்மேல் வைஎன்ற பாணாபோ
கோதறுசீர்க் குன்றக் குடிக்கு. 59

## கிள்ளைவிடு தூது

### கட்டளைக் கலித்துறை

குடிகாரப் பாணர்தம் மால்வச மாம்விலைக் கோதையரோ(டு)
அடியாளைத் தேர்வது நீத்தங்கும் நீர்வர லாகுமென்று
கடிகாலும் பூம்பொழிற் குன்றக் குடிக்குகன் கண்முற்சென்று
பொடியாடும் கைக்கிளிக்(கு) உன்னாவல் மீறப்
புகல்கிள்ளையே. 60

### வெண்செந்துறை

கிள்ளைப் பனுவல் கிளர்குன் றக்குடிப்
பிள்ளைப் பெருமாள் பெருகருட் சுடரே. 61

### அறுசீர்க் கழிநெடில்

அருட்கடலிற் குளிப்பதற்கு முயலாமற்
பொருள்விரும்பி அலையுந் தம்மைத்
தெருட்புலமை யுடையாரா மதிப்பவரோ(டு)
இணங்காமல் திருக்கண் பார்த்(து)ஆள்
மருட்சிதரும் விழியணங்கார் தமக்குமனம்
உருகாத வலியுள் ளார்தம்
இருட்பிணிதீர்த் துயர்குன்றக் குடித்தலத்துக்
கோவிலிடத் திலங்கும் வேளே. 62

## சித்து

### எண்சீர்க் கழிநெடில்

வேளப்பா ஆனவன்போல் வளர்வ தாகி
விளங்குகுன்றக் குடித்தலைவாழ் வேற்கைச் சித்தன்
ஆளப்பார் புகழ்வலிமை பெற்றேம்; என்றும்
அழியேம்யாம்; அவன்ஆணை அவத்த மல்ல
கேளப்பா பசிதீரக் குழம்பும் சோறும்
கிருதகுள பாயசத்தோ டீந்தா யாகில்
மீளப்பார்த் திருக்கரச வாதம் செய்வோம்
வினைதவிர்ப்போம் பணியணையில் மேவு வோமே. 63

## இரங்கல்

### மடக்கு பதினான்குசீர்த் தாழிசை

மேவ லாருயிர் உண்ட வேலவன்,
மேவி லான்எனை இன்னமும்
வென்றி தோய்தரு குமர வேள்மதன்
வென்றி டாதுவி லக்கிலான்
பாவ லார்க்கருள் கந்தன் என்மனப்
பாவ கத்தும்இ லங்கிலான்
பத்தி யிற்படு முருகன் என்ன(து)
உபத்தி ரத்தைம றுக்கிலான்
காவல் மேவுகுன் றக்கு டிக்குகன்
காவ கத்தழை தந்திலான்
காங்கெ யப்பெயர் வேந்தன் என்னுடற்
காங்கை யைச்சிறி தாள்கிலான்
சேவ லேஎழில் தோகை யேஅடற்
சேவ கம்பெறும் வீரரே
செய்ய வாய்க்கிளி யேஎ னக்கருள்
செய்ய நீருரை செய்மினே. 64

### நிலைமண்டில ஆசிரியப்பா

செய்ய வான்கலைச் சிறப்பும், சீர்பெறு
மெய்யெலாம் புனையும் வெண்ணீற் றொளியும்
ஒண்கோ வணத்தோ(டு) உடீஇய கீளும்,
வண்கோ கனக மலர்முகம் ஒன்றும்,
முண்டிதச் சிரமும், மூவிரு முகத்துக்
கண்டிகை யதனொடு காவியந் தொடையல்
புனைதரு கழுத்தும் புகலரும் பொருளை
நினைதல் மேஎய நெடிதகல் மார்பும்,
தண்டமுந் துகள்தீர் தனிவேற் படையும்,
கொண்டகை இரண்டும், குலவும் பாதுகைத்
தாட்டுணை மலரும், தயங்கும் பேரொளி
கூட்டுற வமைந்து குலவிரு பரிதிநேர்,
குண்டலக் காதும், கோணல்தீர் சடையும்,
மண்டல மூன்றா மலர்விழி வனப்பும்,
குமுதவா யிடத்துக் குறுநகைப் பொலிவும்,
அமுதவாய் குதட்டி அகல்செவி விசிறித்

தானம் ஊற்றும் தவளமால் வரைநேர்
ஞானவே ழத்தின் நலம்புனை பிடரியில்
திகழ்தரு மாண்பும், செறிதரத் தோன்றி
புகழெலாங் கொடுத்துப் பொருநையில் திருமலைக்
குவட்டிற் காத்தமை கூறி, உய்யும்
தவத்தைஇவ் வுலகோர் தமக்கும்ஈந் தருளி
வீரவா கென்னும் விறலுடைப் புனிதன்
வாரமிக் குரைத்த வாழ்வுறப் புரிவாய்
யானைத் தோல்போர்த் திடுவோன் முதலாம்
ஏனைத் தேவர்கள் யாவரும் இறைஞ்சும்
குன்றக் குடித்திருக் கோவில்
மன்றத் துறையும் வடிவேற் சேயே. 65

நேரிசை வெண்பா

வேற்படையும் பற்பலவே மெய்யுருவம் பற்பலவே
பாற்படுமால் வெற்புகளும் பற்பலவே-காற்பதுமம்
துன்றக் குறித்துநிற்கும் தொண்டர்களும் பற்பலவே
குன்றக் குடிக்குகனுக் கு. 66

## தழை

கட்டளைக் கலித்துறை

குக்குடந் தாங்குகைச் செவ்வேலன் குன்றக் குடித்தலத்தான்
குக்குடந் தான்விண்ணு ளார்தருப் பூந்தழை கோதைநல்லாட்
குக்குடந் தானெனும் கொங்கைகள் மீறின, கூர்ப்பிலர்வாய்க்
குக்குடந் தாள்சுவைத் தீம்புக ழாகிக் குளிர்ந்தனவே. 67

கொச்சகக்கலிப்பா

தனங்கிடக்கு மார்பகத்தார் தமக்குருகிப் பொருள்தேடும்
மனங்கிடக்குந் தூயவர்பால் வருந்திஇரந் தலையேனால்
முனங்கிடக்கு மூவினையும் முறுக்கியெனைப் புரந்தருள்வாய்
கனங்கிடக்கப் பொழில்சூழும் கவின்குன்றக் குடிப்பரனே. 68

அறுசீர் விருத்தம்

பரந்தவான் கலையுணர்ந்த பாவலவர்
பனுவலையும் பழிக்குந் தீயர்

உரந்தவா(து) உயர்வதுகண்(டு) அலமந்தேன்
திருவருள்சற் றுதவி ஆள்வாய்
கிரந்தவாக் கியமறையும் தமிழ்த்துதியும்
முறைமுறையே கிளத்து வோர்க்குச்
சுரந்தஆ ரமுதருத்தும் தாயெனக்குன்
றக்குடியிற் றுலங்கும் சேயே. 69

### மதங்கம்

#### கலிவிருத்தம்

சேய மாமுகம் ஆறுடைச் சிவனெனத் திகழும்
தூய வேலனை இலகுகுன் றக்குடித் துரைஎன்(று)
ஏய நாடொறும் இசையொடு துதிக்கும்இம் மதங்கி
மாய வாள்விழிக் கணைதொடிற் பிழைப்ப(து)யார் மன்னோ. 70

#### அறுசீர்

மன்னுமா முகங்கள் ஆறும் மலர்விழித் தொகைமூ ஆறும்
மின்னுசெந் துவர்வாய் ஆறும் வியன்குழைச் செவியீ ராறும்
பன்னுமற் றுளவும் தோகைப் பரிமிசை குலவத் தோன்றிக்
கொன்னுறு பொழில்சூழ் குன்றக் குடிக்குகன் ஆள்வ
தென்றே. 71

#### வெண்டளைக் கலிப்பா

என்றும் அழிவற் றிருக்கும் பெரும்பேறு
குன்றுளுயர் குன்றக் குடிக்குகவேள் ஈயினல்லால்
துன்று புலனடக்கித் தூயநிலை சேர்துமெனப்
பொன்றுமட்டும் நாடிப் புலர்ந்திடினும் வாராதே. 72

### குறம்

#### அறுசீர்த் தாழிசை

வாரண கேதனந் தோய மன்னுகுன் றக்குடிக் கோவிற்
காரணன் றன்புயம் சேரக் காதல்மி குத்திடும் அம்மே
ஆரண மும்புகழ் நீபம் அஞ்சுகம் தந்திடும் நாளை
நாரணன் றன்மகள் போலும் நல்ல குறக்கொடி நானே. 73

#### எண்சீர்ச்சந்தம்

*தான தத்தன தந்தத்தன-தான தத்தன தந்தத்தன*

நானு ரைத்திடும் இந்தக்குறி நாளை மெய்ப்படும் நம்பித்தெரி
ஏனு னக்கிப்படி வம்பிற்றுயர் ஏழுநெற் கைகள் ஒன்றிட்டது

வானும் ஒப்பறு குன்றக்குடி வாழ்சி வந்தஉ டம்புக்குகன்
வேனு னிக்கிணையு யும்கட்கொடி வேண மட்டும்இ
ரங்கிக்கொடே. 74

நேரிசை வெண்பா

இரங்கிக் கொடாதவர்பால் ஏற்கவென என்றன்
சிரந்தொட் டெழுதியவன் செங்கை-பரம்புமங்கட்
குன்றக் குடிக்குகன்றாட் கோமலரிற் சீரியதோ
என்றற்(கு) உயிரனையா ளே. 75

கட்டளைக் கலித்துறை

ஆளாகிக் குன்றக் குடித்தலத் தேகி அறுமுகன்பொற்
றோளா றிரண்டினும் செந்தமிழ்ப் பாமலர் சூட்டினல்லால்
கோளாகும் ஒன்பதுக் கஞ்சாத் திறலும் குலவுதுங்க
வாளான கண்ணினர்க்(கு) ஏங்கா நலமும் வருவதின்றே.76

கலிநிலைத்துறை

வருவாய் மனக்கோயில் வாழ்வாய் இருப்பாய் வரங்களெல்லாம்
தருவாய் எனப்பாடும் முனிவோர் களுக்குமோர்
தாழ்வெய்துமோ
குருவாகி அரசாகி அன்னையாய்த் தந்தையாய்க் குலதெய்வமாய்த்
திருவாழ்வு குன்றாத குன்றக் குடிக்குள்வளர் செவ்வேலனே.77

மறம்

அறுசீர்

செவ்வேலன் மருவுகுன்றக் குடித்தலத்து மறவரெனச்
சிறிதும் அஞ்சா(து)
இவ்வேளை யிங்குவந்து பெண்கேட்ட தூதனே
இறைக்கஞ் சேம்யாம்
தெவ்வேதந் தவிர்க்குமெங்கள் கரம்கால்கொள்
இறைக்கெல்லாம்
திறல்சேர் உம்கோன்
மைவேற்கண் மகளிர்கொள்ள வல்லோம்காண் கடிதுவந்த
வழிபார்ப் பாயே. 78

எழுசீர்

வழியலா வழியைச் சதமெனக் கருதும்
மனிதர்போல் மாதர்மேல் மயலாம்

இழிவையே விரும்பிப் பெரிதுநெஞ் சயரும்
இன்னல்தீர்த் தருள்புரிந் தாள்வாய்
பொழிதருங் கருணை விழிகள்ஈ ராறும்
பொறிஉமிழ் கண்கள் ஓராறும்
பழியுறாக் குன்றக் குடித்தலத்(து) அலர்த்திப்
பவனிவந் தருளும்எம் பரனே. 79

### கலிவிருத்தம்

பரவை யீனிய பாவைய ரும்புணர்
குரவு தோய்தரு குன்றக் குடிக்குகன்
பரவி நாடுமெய்ப் பத்தர்தம் பால்அருட்
குரவ னாகிக் குலாவுவ துண்மையே. 80

### ஊசல்

### எண்சீர்

உண்மையொடு தவம்இரண்டும் தூண்க ளாக
உரையிறந்த நாதாந்தம் விட்ட மாக
வண்மைமிகும் நான்மறையும் கயிற தாக
வழுத்தரிய பிரணவமே பலகை யாகக்
கண்மையுறும் இருமடவார் அருகில் மேவக்
கதிர்வேல்கொண்(டு) ஆறெழுத்தும் களிப்புற் றாட்ட
அண்மைநின்று பலர்போற்ற ஆடீர் ஊசல்
அணிகொள்குன்றக் குடிக்குகவேள்! ஆடீர் ஊசல். 81

### எண்சீர்ச் சந்தக்கவி

*தான தத்ததன தந்தத் தனத்த தனனா*

ஊசல் ஒத்தலையும் நெஞ்சைப் பிடித்துன் அருளால்
ஓவி யச்சுடரில் உன்பொற் பதத்தி னிடையே
நாசம் அற்றுவளர் இன்பக் களிப்பின் மிகையால்
நானி றுத்திடுவ தென்(று)?இக் கணத்தில் மொழிவாய்
ஈச னுக்குமக வென்றுற் றிமைப்பி லவர்கோன்
ஈனும் உத்தமனு டன்சிற் சிலர்க்கு மனநோய்
ஆச ளித்தவரை வென்றிட் டசத்தி யுடனே
ஆண்மை முற்றவளர் குன்றக் குடிக்கு மரனே. 82

## வருகை

### பன்னிரண்டுசீர். சோலைவளம்

குடிலிற் றினையைக் கிம்புரியாற்
குறவர் மகளிர் சுணங்குமுலை
குலுங்கத் துவைக்கும் ஒலிகேட்டுக்
குரக்கின் இனங்கள் மழைமேகத்(து)
இடியென் றலமந்(து) உடுவிரவும்
எண்ணில் பசுங்காய்த் தலைப்பூகத்(து)
ஏறி விரியும் மலர்ப்பாளை
இடத்திற் பதுங்கிக் கிடந்(து)அதைவிட்டு
அடியிற் பழுத்து வெடித்தகனி
ஆரும் பலவிற் பாய்ந்து,சுளை
அனைத்தும் சிதறப் பெருந்தவர்தாம்
ஆவென் றிருவாய் அருந்திஅருட்
கொடியைப் புகழும் வளமைபுணர்
குன்றக் குடிவேள் வருகவே
குமர குருஎன் றுலகியம்பும்
குறிஞ்சிக் கிழவன் வருகவே. 83

## தன்னிலை கூறல்

### பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்

கிழவனுரு வங்கொண்டு மறமக ளிடத்துறும்
கிருபா கரக்கொண் டலைக்
கிள்ளையங் கவிபுனையும் வள்ளலைப் பிரமனது
செருவநோய் அறஇ டித்துக்
கழகப் பெருந்தலைவ னானகுரு நாதனைக்
கரியமாற்(கு) ஆழி தந்த
கையா(று)இ ரண்டுடைய கடவுளைச் சிவபிரான்
காதிடத் தொருசொல் ஓதும்
மழலையங் கனிவாய்கள் ஆறுடைய முருகோனை
மலயமா முனிவன் நெஞ்ச
மலரிடத் தநுதினம் நடம்புரியும் இருசரண
வாரிசக் குகனை, வண்டு
குழலிசை முழக்கவளர் குன்றக் குடிக்குள்வளர்
கொற்றவே லனைவி ரும்பிக்

கும்பிட்டு நாடித் துதித்துருகும் அடியவர்
குழாத்தினுக்(கு) அடிமை நானே. 84

### நேரிசை வெண்பா

யானெனதென் றோதும் இரண்டும்போய், யாவையும்நீ
தானெனக்காண் போர்க்கும் தவறுண்டோ-மீனெனக்கண்
கொண்டார்கள் ஆடல்மிகும் குன்றக் குடியில்நிற்கும்
தண்டாயு தக்குருநா தா. 85

### கட்டளைக் கலித்துறை

தாதாரும், பூம்பொழிற் குன்றக் குடியிற் சரவணன்றன்
பாதார விந்தத்தை நம்பாத மூடரைப் பாடுகின்ற
தீதாளர் தம்மையும் ஓர்பொரு ளாகச் சிறிதும்எண்ணி
வாதாட லாகுங்கொ லோகவு மாரத்து மாதவரே. 86

### கலிநிலைத்துறை

மாதவஞ் செய,நல்ல துறவுற்றும் நடமாடும் மயில்போல்வரும்
சீதசந் திரவதன மடவார் தமைச்சிந்தை செய்வேனை ஆள்!
வேதமந் திரபுனித ஆகமவி னோதத்து மேலோர்குலம்
கோதறுங் கிளியொடு துதிக்கின்ற குன்றக் குடித்தெய்வமே. 87

### கட்டளைக் கலிப்பா

தெய்வ மங்கையர் ஆடலும் பாடலும்
சேர்ந்த குன்றக் குடிக்கோவிற் சண்முகன்
ஐவ கைத்தொழிற் செய்வோர்க்கும் நாயகன்
ஆகு மென்ப தறியாத மாந்தரே
பெய்வ ளைக்கரத் தார்தமக் காட்படும்
பித்த ராகிப் பிறப்பிறப் பென்பதால்
நைவ ரென்று பெரியோர்கள் கூறிட
நாம றிந்தனம் நாட்டிலுள் ளோர்களே. 88

## சம்பிரதம்

### அறுசீர்க் கழிநெடில்

ஓர்கரத்தில் எழுகடலை அடக்குவேன்
இரதம்உண்பேன் உயர்ந்த நாகத்

தார்களிப்புற் றணிகுவேன், இவையெல்லாம்
வித்தையென்று தரணி சொன்னால்
கூர்கதிக்கும் தனிவேற்கைப் பெருமானை
இணையில்குன்றக் குடியிற் கண்டு
சூர்களத்திற் படப்பொருத விளையாட்டைத்
தமிழ்க்கவியாற் றுதிசெய் வேனே. 89

அறுசீர்

செய்ய பூமகள் மருவுகுன் றக்குடிச்
சிவகுரு நாதன்றான்
வெய்ய சூர்முதல் தடிந்தில னாமெனில்
விளங்குமுத் தொழில்எங்கே?
ஐய ராமவர் வாழ்க்கையெங் கே?மறை
அந்தணர் மகம்எங்கே?
மெய்ய தாமென அவரவர் விரும்பும்நூல்
விதிகள்எங் கேபோமே. 90

கலிவிருத்தம்

போம தாசலப் புங்கவன் பின்வரு
கோம ளாகரக் குன்றக் குடிக்குகன்
தாம மாலையும் தண்டமிழ் மாலையும்
காம நோயைக் கவலையை நீக்குமே. 91

கொச்சகக் கலிப்பா

நீக்கரிதாம் இருவினையும் நீறுபடப் பன்னீரின்
ஆக்கமிகும் பச்சிலையில் அமைத்தவெண்ணீ றளித்தருள்வாய்!
சேக்கனகக் கிரிநாணத் திகழ்ந்தகுன்றக் குடிக்கிரிமேல்
ஊக்கமிகுந் தனிவேல்கொண் டொளிர்குமரப் பெருமானே. 92

## வேனிற்காலம்

எண்சீர்க் கழிநெடில்

பெருகுதென்றற் றேரின்மத னுலவும் காலம்
பிறைக்கனல்மிக் கொளிர்காலம், பிறங்கும் பொன்னூர்த்
திருநதியில் தீம்புனலும் வறக்கும் காலம்
சீதரன்போய்ப் பாற்கடலிற் சேருங் காலம்

குருமணிக்கோ புரமருவு தெய்வக் கோவில்
குலவுகுன்றக் குடித்தலத்துக் கொற்ற வேந்தாம்
முருகனது கடம்பணிதோள் புணரா(து) இந்த
மொய்குழலாள் வாடுவது முறைமைத் தன்றே. 93

### நேரிசை வெண்பா

மைத்தடங்கண் ணீர்பெருக்கி வால்வளையோ(டு) ஆரமெறிந்(து)
உய்த்தவற்றை யெல்லாம் உதவுமுந்நீர்—வைத்தலைவேற்
கோவாகிக் குன்றக் குடித்தலத்தில் வாழ்குகனை
மேவாத மங்கையொப்பா மே. 94

## பனிக்காலம் - தலைவி கூற்று

### கட்டளைக் கலித்துறை

மேதகு சீர்கொண்ட நந்திசொல் நூலும் வியந்துபெருங்
காதலுற் றோர்க்(கு)இது நற்கால மென்று கழறப்பெற்ற
சீதள மீறும் பனிக்காலம் தோன்றியும் சேர்ந்திலனே
மாதவர் போற்றிடும் குன்றக் குடியினில் வாழ்கந்தனே. 95

### அறுசீர் விருத்தம்

கந்தனே வடிவே லேந்தும் கடவுளே உமையாள் ஈன்ற
மைந்தனே எனையாட் கொண்ட வரதனே மலரும் நீபக்
கொந்தனே இணைதீர் குன்றக் குடித்தலத் தமரும் கோவே
மந்தனே முதலி னோரால் வருந்திடா தருள்செய் வாயே. 96

## ஊர்

### கலிநிலைத்துறை

செய்யவித் துரும்மலை நிகர்வடிவ முடையவன்
செவ்வேல்கொளும்
கையவித் துவகுல திவாகரன் கதியுதவு காங்கேயன் ஊர்?
பொய்யவித் துயர்வுதவு குன்றக் குடிக்குட் பொருப்பாதியாம்
மெய்யவித் துகள்தீர் மகத்தோர்கள் வருமலை நிலத்தூர்களே. 97

## கார்காலம்

### கொச்சகக் கலிப்பா

ஊர்மருவும் நிலங்குளிர உறைதூவி உரும்ஒலியைக்
கார்மருவு காலம்வந்தும் கலந்தணைய வந்திலனே

கூர்மருவு வேலேந்திக் குலவுகுன்றக் குடிக்கிரிமேற்
சீர்மருவு கருணைபொழி செழுமுகில்போன் றிருந்தோனே. 98

### எழுசீர் விருத்தம்

இருவினைப் பிணிகெட் டருந்தவம் புரியார்
இலக்கெனத் துணிந்(து)அவர் மனம்போற்
கருநிறம் பொருந்தும் கவிசில பிதற்றிக்
கடையரிற் கடையனாத் திரியா(து)
அருமறைச் சிரத்திற் கொடிபுரி திருத்தாள்
அனையசெந் தமிழ்க்கவி முழக்கும்
குருவெனத் தடுத்தாண் டருளுவோன் குன்றக்
குடித்தலத் தமர்ஒரு கோவே. 99

### நிலைமண்டில ஆசிரியப்பா

அமரர்தம் கூட்டத்(து) அதிபனும் உணராச்
சமரச போதத் தன்மை யாதிய
நலமெலாம் கொடுத்து, நானிலத்(து) ஆழி
வலன்உறு புகழும் வானகத் தழியாச்
செக்கர் போலும் சிவபிரான் சிறப்பும்
மிக்கவாக் களித்து விளங்கும்ஓர் மருந்து
கனந்தவழ் சோலைக் கவின்உற உடீஇ
நனந்தலை இணைதீர் நாக மொன்று
கொடுதிகழ் குன்றக் குடியிற் கொற்றவன்
தொடுகுறி உணர்த்தச் சுகாசுகங் கடவா
வண்டர்தம் சேர்க்கையில் மருவாத்
தொண்டர்தம் பாதம் துலக்கும்நன் நீரே. 100

### நூற்பயன் — வெண்பா

குன்றக் குடியூர்க் குகவேள் கலம்பகத்தை
மன்றக் குடியான் மலயத்தான்—என்றக்
குடிலை யடையாளம் கொண்டவர்கேட் டீவார்
குடிலை யடை யாத கொடை.

குன்றக்குடி முருகப்பெருமான் கலம்பகம் முற்றிற்று

உ



# சென்னைக் கந்தகோட்ட முருகப்பெருமான் கலம்பகம்

## தண்டபாணி சுவாமிகள்

**எண்சீர் வண்ண விருத்தம்**

***தத்தனத் தனன தன்னத் தனனா***

சித்த ருக்கிசையும் உண்மைப் பொருளே
சிக்கி டப்பெரிதும் நண்ணிக் கொளலால்
இத்த ரைக்குள்உனை உன்னித் தொழும்நான்
எய்த்தி டச்செயல்நின் வண்மைக் கழகோ
முத்த மிழ்க்கினிய தென்னப் பகர்வாய்
முற்றும் இப்பொழுது விண்உற் றதுவோ
சுத்த தத்துவமென் மெய்ம்மைப் பொருளே
சொர்க்கம் ஒத்திலகு சென்னைக் குகனே. 1

**பதின்சீர் வண்ண விருத்தம்**

***தனதனந் தத்தத் தன்ன - தனன தானா***

குகனைநம் பித்தொழற் கெண்ணி மதம்அனந் தத்தினிற் றுன்னி
குரவர்புன் சொற்கள்கற் றின்னல் மன்னு றாதே
அகம்நிறைந் திட்டமெய்த் தன்மை மருவியுஞ் சொற்பனத் தென்னுள்
அவன்விளங் குற்று(ம்),முற் கன்ம-வன்மை தீரா(து)
இகழும்வஞ் சத்தர்கைப் பொன்னில்-விழைவும்வன் கற்கிணற் றிங்ஙன்
இடைதலுந் தூற்றிடப் பண்ணல்-உன்னி டாதோ
சகளவிம் பத்தில்நட் பின்மை-நிகழும்வம் பர்ச்செகுத் துஅம்மை
தவிர்நலங் கைக்கொளிற் பன்னு-சென்னை யூரே. 2

### மருடபா

சென்னைப் பதியில் திருக்கைவேல் ஏந்திநிற்போன்
தன்னைக் கருதவொட்டாச் சஞ்சலமே-உன்னை
இகலென உணரா(து) ஏற்ற நெஞ்சில்
பகலுறழ் திருவருட் பான்மை
புகவரின் எங்கு போவாய் நீயே. 3

### கலிவிருத்தம்

நீய லாதொரு கடவுளர் உளரென நினையேன்
ஏய நின்னருட் பெருக்கிலொர் சிறிதளித் தெனைஆள்
மாயன் அன்னவர் பலர்வளர் சென்னைமா நகரில்
சேய வேல்கொடு தினந்தினம் நிலவுதே சிகனே. 4

### மடக்கு

### கொச்சகக் கலிப்பா

சிகரி முற்றும் கோவிலதே தெண்ட னிடும்கோ விலதே
சுகமி ருக்கும் கையானே துதிப்ப வர்க்குக் கையானே
மகம்அருள்ஆ(டு) ஊர்வானே வணங்கு நர்வாழ் ஊர்வானே
திகழ்வி ருப்பம்சேயியலே சென்னை நகரச் சேயியலே. 5

## தழைச் சிறப்புரைத்தல்-தாய்கூற்று

### அறுசீர் விருத்தம்

இயல்விரும்பும் சென்னைநகர்க் குமரன்அனுப்
பியதழைகை யேந்தும் மின்னாள்
அயலவருக்(கு) அஞ்சுகிலாள். மதிச்சூடா
தியதுயரும் ஆறிற் றென்றாள்
கயல்விழிநீர் உகுக்கில்லாள், கடம்பனுப்பில்
என்னாமோ? கலந்து மாரன்
செயலொழிக்கில் என்னாமோ? தெரிகிலேம்
சிலநாளில் தெரிய லாமே. 6

### மேற்படி விளக்கம் தாழிசை 12 சீர்

தெரியற் கடம்பும் தமிழும்அணி
திருத்தோள் ஈராறு(உ) டையபிரான்

சென்னை நகரில் இருந்தெனது
செல்விக் கனுப்பும் செழுந்தழையில்
எரியிற் சுடும்மா மதிகுளிர்கைக்(கு)
எழிற்கட் கருணைத் துளிசிறிதும்
இரவின் பொழுதைச் சுருக்குவதற்(கு)
ஏற்ற மருந்தும், இளங்கிள்ளைப்
பரிகட் டியதென் றலந்தேரோன்
பார்த்து வெருளும் பரி(சு)ஒன்றும்
பாலும் அ(ன்)னமும் கசப்பென்று
பகரா தருந்தச் செயும்பண்பும்
விரிபொற் புறு(ம்)முந் நீர்முதலா
விளங்கு மவற்றை யிகழாமல்
விரும்பும் நலமும் புகுந்திருந்த
விதமென் னெனநான் விளம்புவதே. 7

### எண்சீர் விருத்தம்

விளம்புவது தொண்டரொடு பின்வருங்கா ரியமே
வேண்டுவது செந்தமிழும் விரைமலிநீ பமுமே
சளம்படுதல் மானீன்ற மகள்ஒருத்தி யாலே
தனித்திருக்கை மாதவத்தோர் தம்மனப்பூ மிசையே
வளம்பெறநா டொறும்கொடுக்கை சித்தியு(ம்)முத் தியுமே
வாகனங்கள் மயில்ஆடு மதகரியென் பனவே
குளம்படுநீற் றணியுடையார் எந்நாளும் பெருகிக்
குலவுமெழிற் சென்னைநகர்க் குகன்செயல்கூ றரிதே.
8

### இன்னிசை வெண்பா

அரிய சமயங்கள் அத்தனையும் போற்றும்
பெரிய குருபரனைப் பேசுங்கால் யாரும்
தெரிய மலைதோறும் சென்றுதினம் ஆடற்(கு)
உரியவனாம் சென்னைநக ரோன். 9

### கட்டளைக் கலித்துறை

நகரங்கள் ஆயிரம் கண்டலுத் தேன்,இனி நானுன்நற்சீர்
பகரன்ப ரோடொர் இடத்தே யிருந்து பணியச்செய்(து)ஆள்!
சிகரங் குலாவும் மலைத்தெய்வ மே!அயிற் சேவகனே!
தகரஞ்ச முன்உகைத் தாய்சென்னை மாநகர்ச் சண்முகனே.
10

### கலிவிருத்தம்

சண்மு கத்துச் சரவணன் அல்லது
விண்மு கத்தொரு மெய்த்தெய்வம் உண்டெனில்,
கண்மு கத்(து)அய லாம்இது காண்மினோ
தெண்மு கப்புனற் சென்னையிற் செல்வரே. 11

### கைக்கிளை (ஒருதலைக்காமம்) தலைவன் கூற்று

### வேற்றொலி வெண்டுறை

செல்வியினும் சீருடையாள் திருக்கடைக்கண்
நோக்கம்ஒரு சிறிதென் மீது
புல்வதன்முன் இந்தவண்ணம் பூமாரி
பொழியுமதன், புலவிப் போதில்
கொல்வதோர் அருமையோ? குமரன் சென்னையில்
கல்வியே வடிவமாக் கவின்ற மக்களே. 12

### மேற்படிதுறை பாங்கனொடு பகர்தல்

### எழுசீர் விருத்தம்

களவு முற்றுணர் தோழ அன்று யான்பகர்
கன்னி,என் கனவூடுற்(று)
இளமு லைத்துணை திளைப்புறப் புணர்ந்தனள்
யான்அவள் கனவூடுற்(று)
உளதும் அல்லதும் அறிந்துவந் துரைத்தியேல்
உனையென(து) உயிரென்பேன்
துளவ மால்புகழ் சென்னையில் குகனருட்
டுலக்கமும் பெறுவாயே. 13

### எண்சீர் விருத்தம்

வாயனந்தம் துதிபுரிந்தும் கரம்பல் வா(று)உன்
வடிவேலைப் பூசைசெய்தும், மனம்எந் நேரம்
சேயநிறத்(து) உன்வடிவத் தொடுநீ யேறும்
சிகிஅரவத் தண்டைமுதல் தியானம் செய்தும்
மாயஇருட் பிணிநீங்க வில்லை, நீமுன்
வரின்அல(து)இங்கு உயமாட்டேன், வரத்தான் வேண்டும்

காயகநெஞ் சினர்மருவாச் சென்னை மூதூர்க்
கந்தனே வடிவேற்கைக் கடவு ளானே. 14

நிலைமண்டில ஆசிரியப்பா

கடல்நிறத் தொருவன் காக்கும் காவல்
இடர்படக் கண்டேம், ஈனர் தம்பால்
அவன்புணர் மனைமார் அடையக் கண்டும்
இவண்துயில் வுறல்நீத்(து) எழுகிலன், அந்தோ!
ஆதி நாயகற்(கு) அன்றுநீ அருள்கூர்ந்து
ஓதிய பொருள்புக்(கு) உள்ளதோர் எழுத்தை
இகழ்கிலார் அறுவரோடு யான்படும் இன்னல்
நிகழ்தரல் உனது நெஞ்சகம் அறியும்,
பைப்புற் கறிக்கும் பசுமரை, அயம்நேர்
கொம்புடை யினமும், குருகினம் ஆதிய
பிறவும் எய்துறு பெருந்துயர் கருதின்
அறவும் கொடிதே, ஐய கோகோ!
ஆதலிற் சண்பை அணிநக ரிடத்(து)ஓர்
மாதவன் மகவா வந்த வாறு
நீவர வேண்டும்; அலதுநீள் நிலத்(து)ஓர்
காவலன் அந்நாள் கன்னி நாடு
வாழ்வுறச் செண்டால் வடவரை இடித்த
காழ்பெருந் தடக்கைக் காளை யென்னத்
திகழ்தரல் வேண்டும்; அல்ல(து)என் னதுசிற்
றகம்அறி தரச்சொற் றதுசெயல் வேண்டும்;
அல்லது நீயூர்ந்(து) அகிலம் சூட
வல்ல தாய மயிலினை யேனும்
கூவுபே ரொலியாற் குலச்சுடர் மறிப்ப
மேவுதா னவர்தாம் வெருண்(டு)இரி தரச்செயத்
தக்கசெஞ் சேவல் தன்னை யேனும்
இக்கணம் அலைப்பால் எறிகடற் கனுப்பி
அன்னவன் துயில்கை(க்)கு அணையாம் அரவம்
இன்னலெய் துறவீழ்த்(து) எழச்சொல வேண்டும்;
காவியங் கணையைக் கடைசியர் களைந்து
வாவிஅம் புயக்கண் மகிழ்நர்மேல் எறியும்
தண்பணைச் சென்னையிற் றழைந்து
விண்பதி புரக்கும் விகிர்தவே லவனே. 15

### சவலை வெண்பா

வேலங்கைக் கொண்டுசென்னை வீறுபெற நின்றோனே
காலங் கடந்த கதியளிப்பான்
ஞாலங் கருதிடினும் நல்குவான், என்கைமறை
மூலங் கழறு(ம்) மொழி. 16

### கட்டளைக் கலித்துறை

மொழியப் படாவிதம் ஆயிரம் சொற்றனை, மூதுலகில்
இழியப், படாமணி கொங்கைநல் லார்மயல் எய்தினேன்,நின்
வழியப் படாவென் றலறாமற் காக்க விரும்பல்என்றோ
கழியப் படாநலம் சேர்சென்னை மேவிய கந்தப்பனே. 17

### ஊசல்

### எண்சீர்க் கழிநெடில் விருத்தம்

வாளரிக்கண் விழிமடவார் இன்பம் ஓர்கால்
மறுத்தீர்ந்த மெய்ஞ்ஞான வாழ்க்கை ஓர்கால்
கோளகன்ற சமரசநன் னிலைமேல் விட்டம்
குலமறைவாக் கியங்களெனக் கூறும் நான்கும்
நீளவடம், பிரணவம்பொற் பலகை யாக
நிசமெனும்வேல் ஏந்தியிருந்(து) ஆடீர் ஊசல்
தேளனையார்க்(கு) எமன்போல்வார் துதிக்கும் சீர்சால்
சென்னைநகர்க் கந்தர்இனி(து) ஆடீர் ஊசல். 18

### இரங்கல் - கலிநிலைத்துறை

கந்த மலர்க்கூ தளம்அணி வானைக், கதிர்வேற்கை
அந்தண னைச்சென் னைப்பதி யிற்கண் டதனாலே
இந்தவி தத்துன் பெய்தினாள், என்மா(று) இனியேனும்
வந்தணை யானேல் அங்கசன் அம்பால் மடிவாளே. 19

### கலிவிருத்தம்

சல்லா பவினோ தனெனத் தமிழிற்
சொல்லார் துதியும் துதையப் படுமோ
நல்லார் புகழ்சென் னைநகர்க் குகனே
வில்லார் தனிவேல் புனைதோள் நிரையே. 20

### எண்சீர் விருத்தம்

நிரைகொள் வாரெதிர் பொருதபார்த் தனையே
நேரொரர் வீரன்இந் நீள்நிலத் தெய்தி

அரையன் ஆதியர் பிழைமுயன் றாலும்
அடக்கும் நாள்வரின் அல்லதுன் ஆணை
பரையும் ஈசனும் மலர்விழிக் கணியும்
பதம்தந் தாலும்என் பாழ்மனம் இசையா(து)
இரையும் வார்கடற் றொளிமிகும் சென்னை
யிடத்தில் வேல்பிடித் திலங்கும்எம் பரனே. 21

மடக்கு அறுசீர்

பரவைவிழிப் பரவைகொண்கற் குந்தையளிக்
குந்தயையென் பாங்கிற் செய்து
கரவினருக் கரவில்நிகழ் தருமாறும்
தருமாறு கருது கின்றேன்
குரவமலர்க் குரவ விண்ணூர்க் குஞ்சரியாற்
குஞ்சரியாய்க் குறப்பெண் கொண்டாய்
இரவலருக்(கு) இரவலனச் சென்னையிந்நாள்
சென்னையில்வைத்(து) இயல்கேட் போனே. 22

## சம்பிரதம் (சாமர்த்தியம்)

### இரட்டை ஆசிரிய விருத்தம்

போனகமெ னக்குளத் தொடுகடலை யுண்ணலாம்
பொன்வெள்ளி உலக மெங்கும்
பொலிவுற விளக்கலாம், மலைபல சுமக்கின்ற
பூதத்தின் மேற்றி ரியலாம்
வானகமும் வைகுந்த மும்கையிற் காட்டலாம்
மந்திரத்து அளவறி யலாம்
மையலிற் பல்லுயிரும் வசமற்று விழுமாறு
வருவிக்கலாம் இதெல்லாம்
கானகக் குறவள்ளி மேவரனைச் சென்னையிற்
கவினுறும் கந்த வேளைக்
கருதாத சிலருக்கும் எளிதாய விதமெனக்
கவிவாணர் கண்டுகொள்வார்
ஊனகடுறத் தின்கை மனிதருக் கில்லையெனும்
ஒருவிரதம் நிலைநிறுத்தி
உள்ளநெறி ஆறினுக் கும்பொதுவ னாய்முத்தி
உறுமாறு முயலுவோமே. 23

### நேரிசை வெண்பா

முயலகனைச் சென்னியின்மேல், முண்டகத்தாட் கீழ்வைத்(து)
இயலுநடம் ஆடும் இறைவன்—மயலுடையாட்(கு)
ஈந்தகுகன், சென்னைநகர்க்(கு) என்னைமகிழ் விக்கும்வண்ணம்
போந்தமனம் சொல்வதுண்டோ பொய்? 24

### கட்டளைக் கலித்துறை

பொய்யடி யார்க்கும் பணிசெய்தல் வேண்டிப் புலருமென்னை
மெய்யடி யார்களிற் சேர்த்தால் இழிவுன்னை மேவுங்கொலோ
ஐயடி கட்கருள் செய்தார் உதவும் அறுமுகவா!
பையடித் தோகை மயிலாடும் சென்னைப் பதிக்குகனே. 25

### ஊர்

### கட்டளைக் கலிப்பா

பதியில் மிக்குயர் செந்தூர், பரங்கிரி
பழனிக் குன்றம், பழமுதிர் சோலைவெற்(பு)
எதிரில் ஏரகம், மால்வரை ஆதியாய்
யாவர் கூறிடும் எம்மலைச் சாரலும்
பொதிய நாதன் முதலோர்கள் சிந்தையும்,
பூதம் ஐந்தும், புகல்வேதச் சென்னியும்,
திதித ரும்புதல் வர்க்கொரு காலனாம்
சென்னை வேலவர் சீர்திகழ் ஊர்களே. 26

### எழுசீர் விருத்தம்

ஊரும் வாகன மாய தோகையு டைக்கு கேசனை ஒப்பில்செஞ்
சீரு ளார்மலி சென்னை யிற்றிகழ் செங்கை வேலனை நம்புவார்
பாரும் வானக முந்து தித்தப தத்த ராகுவர் என்னும்நூல்
யாரும் ஓர்வரி தாயி னும்சிறி(து) என்றன் மட்டில்இ யைந்ததே. 27

### மதங்கு

### எண்சீர் விருத்தம்

இயம்புகின்ற சாதிகட்குள் உயர்ந்த தாகும்
எங்கள்குலம், இந்தவிதம் இகத்தோர் தேரார்,
அயன்புதல்வர் தம்மில்அந்த வசிட்டன் மட்டும்
அறிந்துள்ளான்; தமிழ்வேதம் அறைந்தோன் றன்னைப்

பயந்தவள்யார்? கேட்டதுண்டோ, மதங்கி நாமம்
பார்ப்பதியும் புனைந்துகொண்டாள், பழிக்க வேண்டாம்
செயங்கமழும் சென்னைநகர்க் குகன்அன் பில்லார்
சிறந்தகுலத் துதித்தாலும் தீயோர் தாமே. 28

**சந்தக்கவி 8 சீர்**

*தான தந்தன தன்னன தனனா*

தாம டைந்தஅருள் வண்மைகொ டுலகோர்
தாழ்வொ ழிந்தளவில் நன்னலம் உறுவே
மாம டந்தைகண வன்முத லினர்தோய்
வாழ்வை யுஞ்சிறுமை என்னுமெ யுணர்வோர்
நேமம் வென்றிதிகழ் பன்னிரு புயமேல்
நீப முங்குரவும் அண்ணிய முருகோன்
நாமம் நம்பியுயர் சென்னையி னிடைபோய்
நாடொ றுந்துதிசெய்(து) உன்னிடும் நிலையே. 29

**14 சீர் வண்ணவிருத்தம்**

*தனன தத்ததன தன்னனா*

நிலையில் நிற்பதும், அதுபி றழ்ச்சிபடும்
நெறியி னிற்செலலும் எண்ணொணா
நிதிவி ளைத்திடலும் மிகுத ளர்ச்சி கொடும்
நிதமி ரப்பதுவும் விண்ணுளார்
தலைமை பெற்றிடினும் உயிர்வ தைத்திடுதல்
தவறெ னச்சொலலும்-அன்னவூர்
தனில்இ ருக்குமட மகளிர் இச்சைகொடு
தழல்வ ளர்த்திடலும், இன்னதே(வு)
அலைக டற்புவியில் உயர்வெ னக்கொளலும்
அவர வர்க்கும் அவர்-எண்ணமூட்(டு)
அவிர்வ தொப்பில்பரம் எனலும், மற்றும்இவை
அனைய பற்பலவும் உன்னினால்
மலைவில் உத்தமர்கள் குடியி ருக்கும்பொழில்
மருவும் நற்புகழ்கொள்-சென்னையாம்
வளந கர்க்கிடைஓர் மயிலி னிற்பவனி
வருமொ ருத்தனருள்-வண்மையே. 30

## இரங்கல்

### நேரிசை வெண்பா

வண்மை மலிந்தசென்னை மாநகரில் வாழ்குகன்பால்
உண்மைசொல்லப் போன ஒருவண்(டு)என்-பெண்மைக்(கு)
இணங்கப் பகர்ந்ததுவோ? ஏய்ந்தசெச்சைத் தேன்உண்(டு)
உணங்கிக் கிடந்ததுகொல் லோ? 31

### மேற்படி கட்டளைக் கலித்துறை

ஓகோஎன் கிள்ளை வரக்காண்கி லேன்சென்னை யூர்க்குகன்பாற்
பாகோ டுறழ்தமிழ்க் கிள்ளையொன் றுண்(டு)அது பற்றியதோ
கோகோயென் றன்பொடு பேசாதென் னேனும் குளறியதோ
நாகோரம் உள்ளதன் றேசெய்யு மாறென்கொல்? நானினியே. 32

## நெஞ்சுவிடு தூது

### எண்சீர்த் தாழிசை

இனியமாதர் தம்மையேவி யேவிநெஞ்(சு)இ டைந்ததால்
யான்வளர்த்த கிளியொ(டு) அன்னம் எனுமவற்றை விட்டபின்
தனியளாகி, விண்ணிலேகும் நாரையோடும் முகிலொடும்
சாற்றினேன், எனக்கிசைந்த சரதமொன்றும் வினவிலேன்
பனிமலர்க்க டம்பணிந்து சென்னையூரில் வைகும்வேள்
பட்சம்வைத்தி டான்எனப் பகர்ந்திடற்கும் அஞ்சினேன்;
கனியும்அன்பொ டுள்ளநெஞ்சம்! உன்னையன்றி மற்றையோர்
காதல்கூற வல்லரல்லர் கடிதில்ஏகி வருதியே. 33

## குறம் (குறத்தி குறிசொல்லுதல்)

### கட்டுத் தாழிசை. ஈற்றுச்சீர் எதுகை

வருகுறியும் செல்குறியும் உளகுறியும் சொல்வேன்
வாதுகொண்டு பகைத்தவரை வாயடியால் வெல்வேன்
அருகுசொன்ன கெவுளியது நன்னிமித்தம் பாராய்
ஐந்துநெற்கை ஒன்றியதென் ஆசைமுற்றும் தாராய்
திருமருவும் சென்னைநகர்க் குமரனையே சேர்வாய்
தியக்கமுற்றும் நீங்கியினித் தினமுமகிழ் கூர்வாய்

மருமலர்க்கை ரேகையிது வம்பாமோ மானே!
வளம்பெருகுந் தென்பொதியை மலைக்குறத்தி நானே. 34

### மேற்படி குறுந்தாழிசை

நானுரைக் கின்றசொற் கேளாய் நற்றமிழ்ச் சென்னைவி சாகன்
தானுனைச் சேர்வன்வந் தின்றே சத்தியம் என்குறி கண்டாய்!
ஏனுனக் கின்னமும் ஐயம் எண்ணெயும் கஞ்சியும் பெய்து
வேனுறு தானையும் நல்காய் மெல்லியற் செந்தகை மின்னே. 35

### மடக்கு

### கொச்சகக் கலிப்பா

மின்னல்நிகர் வேலானே வினையில்விட வேலானே
பொன்னவிர்பல் பணியானே புலைத்தொழிலிற் பணியானே
கன்னல்வில்லிக் கிளையானே கரிமுகவற் கிளையானே
சென்னைநகர்க் குடையானே திறல்அவுணர்க் குடையானே. 36

### அடிமடக்கு-கட்டளைக் கலிப்பா

ஆனை யானனத் தன்றுணைக் கந்தனே
ஆனை யானனத் தன்றுணைக் கந்தனே
கான வேதனை யஞ்செயும் வேடனே
கான வேதனை யஞ்செயும் வேடனே
சேனை வீரக் கணம்பயில் வாகனே
சேனை வீரக் கணம்பயில் வாகனே
மானச் சென்னைப் பதிக்கணி நாதனே
மானச் சென்னைப் பதிக்கணி நாதனே. 37

### நேரிசை வெண்பா

நாதாந்த மோனம் நவிலுங் குருநாதன்
வேதாந்த ஞானம் விளக்குவோன் - போதாந்தம்
தன்னை யுணரும் தவத்தோர் புகழ்போலும்
சென்னைநகர்க் கோயிலில்வாழ் சேய். 38

### கட்டளைக் கலித்துறை

சேய வதனங்கள் ஆறுடை யான்,திருச் சென்னைப்பிரான்
மாய வதனம்பு வார்க்கெளி யான்,சொன்ன வார்த்தையென்னும்

தூய வதனநு பூதியெய் தாமுனம் தூர்த்தரிடம்
போய வதனம் இரந்தலைந் தேன்,என்புன் புந்திகொண்டே. 39

### பாண்

#### அறுசீர்க் கழிநெடில் விருத்தம்

புந்தியொரு சிறிதுமின்றிப் பாண,நீ
தூதுரைக்கப் புகுந்த(து) என்கொல்
செந்தில்நக ரெனஅலைச்சீர் மருவுசென்னைப்
பதிக்குமரன் திரள்தோள் வேட்கை
உந்தியதும், குன்றியதும், அறியவல்லை
அல்லை; சொன்னேன்; உன்சொற் கொண்டோ
முந்திஅவர் இரவுபகல் வந்துவந்தென்
முலைப்போகம் முயங்கி னாரே! 40

#### மேற்படி எண்சீர் விருத்தம்

நார்மலிந்த நானிருக்க அவர்பயந்த மதலையாம்
நாதன்என் கரத்திருக்க நாணமொன்றும் இன்றியே
ஏர்மலிந்த வேடமிட்டு, விழிமருட்டும் விலைமினார்
ஈனவூன் அருந்தும்வா யிதழ்ச்சுவைக்க நண்ணினார்
பேர்மலிந்த பாண!நின்னொடு என்றன்ஆவல் உள்ளதாய்ப்
பேசல்உண்மை யாகில்,என் பெருந்தவம்செய் பெற்றியே
நீர்மலிந்த வயல்குலாவு சென்னையூரின் முருகவேள்
நேயமென் னுளத்திலாத நிமிடமொன்றும் இல்லையே. 41

#### பஃறொடை வெண்பா

இல்லைப் பொருளைநம்பி ஏமாந் திருப்பவர்பாற்
பல்லைத் திறக்கும்வணம் பண்ணாதே தொல்லைமறை
ஆர்க்கின்ற சென்னைமுரு கையா! அருட்கடைக்கண்
பார்க்கின்ற தாகப் பகர்ந்தாயே-நீர்க்குமிழி
அன்னவுடல் வாழ்க்கை அநித்தியமென் றன்பரெலாம்
சொன்னமொழி எண்ணித் துடிக்கின்றேன் முன்ன(ம்)நின்கைக்
கிள்ளைநான் ஆனாற் கிலேசம் பெருக்குமையல்
கொள்ளைகொள்ளை யாகவந்து கூடுவதேன் வள்ளைநெடும்
காதார் குறத்திஒரு கைப்பிரம்பு கொண்டுபல
போதார்வம் சொற்றிடலும் பொய்யாமோ நீதான்
எனையசைக்கின் றாய்எனும்சொல் ஏதமற்ற தாகில்
உனைவழுத்தல் என்றன் உரமோ, பனையுறழும்

கைக்கயத்தி லேனும் கருங்கோட்(டு) அயத்தேனும்
மிக்கமயில் வாகனத்தின் மீதேனும்-தக்கபுகழ்
வல்ல முனிவரும்பல் வானவர்கள் ஆதியராம்
எல்லவரும் சூழ எதிர்தோன்றி நல்லகனா
ஒன்றிற் கொடுத்தவரம் உள்ளபடி யேநடக்கும்
வென்றிப் பெருக்கம் மிகக்காட்டித் தென்றற்கோன்
வேதனனங் கன்னென்பார் வீறாப் பணுகாத
போதுநய மாகப் புரி. 42

கலிநிலை, வண்ணக்கறை

*தனதந்த தனதந்த தனதந்த தனதந்த தனதன்னனா*

புரிகொண்ட இருகொம்பு திகழ்கின்ற
தகர்கொண்ட புகழெண்ணுவேன்
எரியின்கண் மெழுகென்று தளர்துன்பம்
அறவந்தென் எதிர்மன்னுவாய்
வரிவண்டு மதமுண்ட பலதந்தி
தெருவெங்கும் வருசென்னையூர்
கிரிஒஞ்சு புகழொன்ற நடனஞ்செய்(து)
உயர்வென்றி கிளர்மன்னனே. 43

குறளடி வஞ்சிப்பா

மன்னவர்முதற் பொன்னுடையயர்
தம்மெதிர்தினம் எம்மதுமனய்
ஒல்குறுந்துயர் நல்குபுன்மயல்
ஆவதும்உன தேவலதெனில்
அல்லதுமறைச் செல்வருள்நிறை(வு)
என்கைமெய்ப்படா நின்கழற்
பேசவாயிலன் நாசமில்புகழ்
மரீஇயசென்னையம் பதியிற்சிறந்து
தன்னைநாடினர்க்குத் தருமுருகேசனே. 44

நேரிசை வெண்பா

முருகார் கடம்பணிவான் மும்மூர்த்தி கட்கும்
அருகாய் அவராய் அலன்ஆம்-பெருகாண்மைச்

சேந்தனெழிற் சென்னைநகர்ச் செவ்வேள், அவன்றிருத்தாள்
மாந்தருக்கும் எய்து வது. 45

### கட்டளைக் கலித்துறை

வதுவைப் பருவம்வந் தெய்தியும் வாடும் வனிதையெனப்
பொதுவைக் கருதியும் பேறடை யாது புழுங்குகின்றேன்
விதுவைப் புனையும் சடையார்மைந் தா!வெற்றி வேல்பிடித்து
மதுவைப் பொழியுங் கடம்பணிந் தாய்சென்னை வாழ்கந்தனே.
46

### அறுசீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்

வாழுமறை முடிவுணர்ந்தா ரனையசிலர்
நிர்க்குணம்நின் வடிவம் என்பார்
ஆழும்அறி வினர்க்கும்எட்டாய் எனச்சொல்வார்
நான்துணிவுற்(று) ஐயு றாமல்
ஏழுபிறப் பினுந்தடுத்தாள் பவன்என்பேன்
தளர்நடைச்சேய் என்றும் சொல்வேன்
காமுறுமா மரம்பிளந்த வடிவேலா
சென்னைநகர்க் கந்த வேளே. 47

### எழுசீர் விருத்தம்

வேள்படைப் பொலிவும், குளங்களும், வயலும்
வீதியும், ஆதியை விரித்து
நாள்படக் கவிசொற் றலைவுறா துனையே
நவிலுமெய்த் தொழும்பரிற் கூட்டாய்!
காள்படு குதிரைத் தலைப்பெரும் பேயாற்
கலங்கிநின் றிறைஞ்சினன் றனையும்
ஆள்பரம் பொருளே அசலமுற் றுடையாய்!
அவிர்புகழ்ச் சென்னைவே லவனே. 48

### எண்சீர்க்கழி நெடில்

அவலமதி தீர்ந்தபல பெரியோர் தாமும்
அகம்புறம்ஒன் றெனத்துணிவுற்(று) அறைத லால்என்

தவமுதிர்ந்திட் டாலும்இல்லா விடினும் தோகைத்
தனிப்பரிமேற் றிருச்சேவை தரத்தான் வேண்டும்
கவளமத கரிமுகவற்(கு) இளைய பாலா
கார்த்திகைப்பெண் ணார்வளர்த்த கந்தா! எங்கள்
சிவகுருதே சிகமுருகா! பொன்னூர் போலும்
சென்னைநகர்க் கோவிலில்வாழ் செயச்செவ் வேளே. 49

### எண்சீர் வண்ண விருத்தம்

*தய்யதன தன்னதன தந்ததன தானா*

செவ்வரிகள் துன்னும்விழி மங்கையர்க ளாலே
தெள்ளியவர் தம்மையிகழ் -கின்றசில தீயோர்
பெளவம்நிகர் புன்மையில்அ மிழ்ந்துமடி வேனோ
பையரவை உண்ணுமயி லின்கண்நனி வாராய்
அவ்வவர்தம் எண்ணமென நின்றகும ரேசா!
ஐயமறு சண்முகம்அ மைந்தகுரு நாதா!
தெவ்வருயிர் விண்ணில்உற வென்றவடி வேலா!
செல்வமிகு சென்னையில்ந டஞ்செய்முரு கோனே! 50

## கழிக்கண்வாய் புலம்பல்

### 12 சீர்த்தாழிசை

முருகு விரியும் மலர்த்துணரும் முத்து விளையும் எடுத்தெறிந்து,
முழங்கிச் சிறிதும் துயிலாமல், முழுதும் பசுமைப்
பொலிவெய்தி
அருகு வருவார் களைவெருட்டி, அலையச் சலியாது,
எந்நேரம்
அம்கட் புனல்மிக் கிறைத்து,மதி யதன்முற் கொதிக்கும்
அணிக்கடலே
குருகு முழங்கும் பொழிற்சென்னைக் குகனை, எனது
மகள்போல்நீ
கோலா கலச்சீர்ப் பவனியினிற் கும்பிட் டனையோ
அலதெனைப்போற்

பெருகும் உனையீன் றுள்ளாளும் பேறில் லவளாய்,
மலடிருந்து
பிரிய விரதம் பலஇருந்து பெற்றாள் கொல்லோ?
பேசுதியே! 51

### மேற்படி எண்சீர் மடக்கு

பேசுகின்ற மாதருக்கு மறவாத வலரே
பிறங்குமதன் மாதருக்கு மறவாத வலரே
மாசுபடல் புன்னையிடைக் கலைகையணி வண்டே
வளியசைக்கும் புன்னையிடைக் கலைகையணி வண்டே
கூசுகின்ற நாவாய்மேல் வருந்திருக்கை யினமே
குத்துவென நாவாய்மேல் வருந்திருக்கை யினமே
தேசுகொடைக் கந்தர்முற்றும் சேரவிரங் காரே
சென்னைநகர்க் கந்தர்முற்றும் சேரவிரங் காரே. 52

### அறுசீர் வண்ணவிருத்தம்

*தானன தனத்தன்ன தானனா*

காரணமெ னச்சொன்ன வாய்மையார்
காலமழி வுற்றின்னல் ஈயுமேல்
நாரணன்மு தற்றுன்னு தேவர்தாம்
நாளும்உனை மெச்சுண்மை நீடுமோ?
பூரணப தத்தண்ணல் பாலதா!
பூதரமு கட்டண்ணும் ஆடலாய்
ஆரணன்அ ழப்பண்ணு தேசிகா
ஆசறுத மிழ்ச்சென்னை வேலனே. 53

### காலம் கார்காலம்

### நேரிசை வெண்பா

வேலாயு தம்பிடித்து மிக்கபுகழ்ச் சென்னையில்வாழ்
கோலா கலச்சீர்க் குமரன்மேல்—மாலானாள்
வாடும் விதமறிந்தும் வாடைக் கனல்பரப்பி
மூடுகின்ற(து) அந்தோகொண் மூ. 54

### மேற்படி கட்டளைக் கலித்துறை

மூவர்க்கும் முன்னவன் ஈன்றசெவ் வேளை, முதிர்ந்ததமிழ்ப்
பாவற்றி டாப்புகழ்ச் சென்னைக் குகேசனைப் பார்த்தமின்னாள்

யாவர்க்கும் நன்மை தரும்கார்கண் டேங்கினள், ஈனமதன்
பூவச்சம் இவ்வண்ணம் ஆனால்என் னாம்கொல்
பொழிந்திடினே. 55

### பனிக்காலம் அறுசீர்

பொழிந்திடும்கார்க் குலங்களஞ்சிப் புறம்போகாப்
பனிவிளையும் பொல்லாக் காலம்,
வழிந்தமதுப் பூங்கமலம் மடியுமென்றால்
எவர்க்காகும்? மலர்க்கைத் தீயும்
கழிந்தமத கரித்தோலும் ஒருபாதிப்
பெண்ணுருவும், கனவெண் ணீறும்
குழிந்தகடல் விடத்துணவும் சென்னைநகர்க்
குகன்தாதை கொளல்நன் றாமே. 56

### மேற்படி எண்சீர்

நன்றறிவார் இனமலியும் சென்னை மூதூர்
நடுநிலவு குகன்திருத்தோள், நகில பாரத்(து)
ஒன்றிமகிழ் வுறுவார்க்கே நல்ல தாகி
ஒளிருமிந்தப் பனிக்காலத்(து) உரகம் பூண்டோன்
வன்றழலார் முதுகாட்டிற் சென்றான், மாயன்
வடவைத்தீ யுறுமிடத்தில் வசித்தான் வேதன்
கொன்றருந்தும் வேள்வியும்ஆ மெனத்தன் னூலிற்
குளிர்காயும் நிமித்தம்வம்பிற் கூறி னானே. 57

### மேற்படி எண்சீர் வேனிற்காலம்

கூறுநலம் அத்தனையும் குலவுதமிழ்ச் சென்னைக்
குமரகுரு பரமுருகன் கொற்றநெடுந் தோள்ஈர்
ஆறுமணைந் திடுஞ்சுகம்நான் அடையாத காலம்
அரன்தலையிற் கங்கையினை அணிந்துகொண்ட காலம்
ஈறுதவிர் பாற்கடலில் அரிதுயின்ற காலம்
எழில்வேதன் தாமரைப்பூ வின்பயின்ற காலம்
மாறுபடாத் தேவர்குலம் அமுதம்உண்ட காலம்
வசந்தன்தேர் மிசைமதனன் வரும்வேனிற் காலம். 58

### அறுசீர் வண்ண விருத்தம்

*தானத்தன தன்னத் தனனா*

காலத்தொடு கன்மப் பிணிதீர் காதற்கொடு நின்னைத்
தொழும்நான்
ஞாலத்தினர் எண்ணப் பெறுசீர் நாடிப்பெரி தின்னற் படலால்

ஆலத்தினை உண்ணத்துணிவார் ஆசற்றுய முன்னுற்
றருள்வாய்
சீலத்துயர் சென்னைக் குகனே சேவற்கொடி உன்னைப் புரியே. 59

**எண்சீர்த்தாழிசை**

உன்னைப் புரியா விடில்என் றனையும்
உலகு(உ)ன் அடியான் எனஓ திடுமோ
என்னப் பனும்அன் னையும்அன் னவர்போல்
இருதெய் வமும்நீ யலதிங் குளவோ
முன்னப் படியென் னொடுசொல் லியவா
முடியா மலிருக் கமுறைக் கழகோ
சென்னைப் பதியிற் புலவோர் பரவும்
சிவசண் முகதே சிகசிற் பரனே. 60

**எண்சீர்த் தாழிசை**

சிற்பரத்தில் உற்பவித்த செல்வனாகும் உன்னையே
தெண்டனிட்(டு) இறைஞ்சியும் திருட்டுநெஞ்சம்
அமைவுறா(து)
அற்பவாச னைக்கண்எய்தி என்னையும்ப டுத்துபா(டு)
அறிகிலாய்கொல் இன்னம்நின் அருட்பெருக் கமைத்திலாய்
முற்பவத்தில் அப்படிக்கி ருந்த(து) உண்மை யாகுமோ
மோகமாதி இந்தவாறு மூடிநிற்க லாகுமோ
விற்பனக்கு ழாம்இயைந்த சென்னையூரி டத்திலோர்
வேலணிந்து மயிலின்மேல் விளங்குகின்ற மெய்யனே. 61

**பள்ளு-தாழிசை 14 சீர்**

மெய்யே சொல்பவர்க் கிரங்கி யருளும்
வெள்ளக் கடலின் அமுதனார்
வேரிக் கடப்பந் தாரிற் பொலிந்து
மிளிரும் செந்தமிழ் வேட்கையார்
கையேந் தியகுக் குடத்தி னார்வளம்
கமழும் சென்னையிற் காவலர்
கழனித் தொகையில் நடுகைக் கிரங்கிக்
காலம் கடத்தும் கடைசியீர்
மையேந் தவிர்கண் வெருட்டும் செங்கனி
வாய்வக் கணையும் நிறுத்திடீர்

வளர்ந்த நாற்றின்(று) இளந்தை யாதலின்
மடங்கிக் கசங்கமி திக்கொணாது
ஐயோ உழவர் தம்மை மயக்கி
அவர்கைப் பறம்பும் அடிக்கிறீர்
அகன்று போகாமல் நெருங்கி டாதெடுத்(து)
அணிகுழம் பாமற் பதிமினே. 62

### எண்சீர் வண்ண விருத்தம்

*தனதான தத்ததந்த தனதன்ன தானனா*

பதியாம்உ ணக்கிசைந்த நடைமன்னு வார்களே
பரலோக நட்பரென்ற முதலுண்மை தேறும்நான்
அதிமோகம் உற்றவம்பர் எனஎண்ணில் வீடுதோ(று)
அலையாதெ ழிற்சிகண்டி மிசைகண்முன் நேர்வையோ
பொதியாச லத்தொர்தொண்டன் அறிதன்மை யாளனே
புகழ்தோய தமிழ்ப்பொழிந்த கிளிநண்ணு தோளனே
நதிமாதி னைப்புனைந்த சடையண்ணல் பாலகா
நவைதீர் மலர்க்கடம்பு மலிசென்னை வேலனே. 6

## திருமகள் முன்னிலை

### நேரிசை ஆசிரியப்பா

வேலைக் கலைபுனை மெல்லிய றொடுநீ
மாலைப் பிரிந்து, மனிதரிற் கடையாம்
ஈனர் தம்பால் இயைதரு கொடிதால்
வானவர் அவுணர் வன்மைக்(கு) உடைந்தார்,
மாதவர் முதலோர் மனமிகு இடைந்தார்
வேதமா தியநூல் விதிமிகப் பிறழ்ந்தன
மின்னை நேரும் விதிர்வேற் படைக்கைச்
சென்னைக் குமரன் திருப்பதத்(து) ஆணை
தொன்னீர் மையளாத் துலங்குதி இதுநின்
நன்னீர்க்(கு) ஒவ்வா நடையென அறிவாய்!
தணவரும் கருணைத் தண்மதி யொடுவெண்
புணரியிற் றோன்றும் பொருவில் பூமகளே. 64

## நூற்பயன்

### எண்சீர் வண்ண விருத்தம்

*தனதன தனதன தன்னத் தனந் தனனா*

அருள்வலி யினரொடு துன்னச் செயும், புலவோர்
அவைநடு வதிதரும் வண்மைப் பதந்தரும், வேள்
மருமல ரவன்எமன் என்னச் சொலுங்கொடியோர்
வசமுறு பழவினை தன்னைத் தணந்திடும், நீர்
பெருகிய கடலைமுன் உண்ணத் துணிந்தவன் வாய்
பெறவரு தமிழணி யின்முற் படும்,புகழ்தோய்
தெருள்மிகு விய(து) அயில் கொண்மற் புயங்கொடுவாழ்
சிவகுரு பரன்மகிழ் சென்னைக் கலம்பகமே 65

**சென்னைக் கந்தகோட்ட முருகப்பெருமான் கலம்பகம் முற்றிற்று**

உ

# ஸ்ரீ தேவ சேனாபதி கவசம்

## ஸ்ரீ முருகதாசன்

### நூன்முகம்

காலனைக் காலாற் கடிந்த தேவனின்
பாலனை வணங்கிடும் பான்மை யறிந்தே
நூலென இதனை நுவன்றேன் சிறியேன்
பாலினை மட்டும் பருகிடும் அ(ன்)னமென
நூலிதன் சிறப்பினை நோக்குக இனிதே
வேலவன் அருளை விரைவில் தேக்குக!

### நூல்

சேவடி தொழுவோர் சென்ம வினைதனைப்
பூவடி யாலே போக்கிப் புரந்திடும்
கூர்வடி வேலா குமரா வருக!
சூர்முதல் தடிந்த சுதனே வருக!
பார்முழு மைக்கும் பதியே வருக!
ஆர்வ முடனெனை ஆண்டிட வருக!
கடம்பனை வதைத்த கந்தா வருக!
இடும்பனை அழித்த இறைவா வருக!
உடன்படும் பக்தர் உறவே வருக
திடம்பட ஞானம் தரவே வருக!
கார்த்திகை மைந்தா கந்தா வருக!
பார்த்திடும் வேளையிற் பறந்தே வருக!
வள்ளி மணாளா வருக வருக!
பிள்ளையென் முன்னே பேசிட வருக!
தொல்லைகள் எல்லாம் தோல்வி அடைந்திட
அல்லல்கள் யாவும் அழிந்து மறைந்திட

உன்னடி தொழுவோர் உயர்ந்து சிறந்திட
இன்னருள் சுரக்கும் ஏந்தலே வருக!
ஓங்கிய மணிமுடி ஒளியுடன் துலங்கிடத்
தேங்கிய அருளினை விழிகள் வழங்கிட
ஆறிரு காதிலும் குண்டலம் அசைய
நீறிடும் நெற்றியிற் புருவம் வளைந்திடப்
பழகிய கழுத்திற் பல்வகை ஆரம்
அழகுடன் மார்பில் அசைந்தே ஆடப்
பன்னிரு கரத்திலும் பலவா யுதமும்
மின்னிடும் அழகுடை வேலா யுதமும்
என்னிடர் நீக்கிட இனிதே வருக!
உன்னிரு தேவியர் உடன்நீ வருக!
மயில்மீ தேறும் மணியே வருக!
பயில்வோர் மனத்தினிற் பாவகி வருக!
சூரனை வதைத்த சுடரே வருக!
மாரனை நிகர்த்த மதியே வருக!
காரியம் நிகழ்த்தும் கரிமுகற் கிளையோய்!
காரணம் உணர்த்தும் கலையுணர் பாவல!
வேலிறை வாநீ விரைந்து வருக!
மாலிருஞ் சோலை மலையோய் வருக!
குறைகள் காணாக் குகனே வருக!
மறைகள் பேசிடும் மகிபா வருக!
சலங்கைகள் ஒலித்திடச் சண்முக வருக!
கலங்க விடாமற் காத்திட வருக!
ஆறு முகத்துடன் அழகாய் வருக!
தாருகற் செற்றோன் தயவுடன் வருக!
செந்தூர்ப் பதிசேர் சேந்தா வருக!
எந்தாய் நீயும் இசைவுடன் வருக!
குமர குருவின் குறைதீர்த் தருளி
அமரர் இடரை அழித்தோய் வருக!
உன்னைத் தொழுதே உன்னடி பணியும்
என்னைக் காத்திட இனிதே வருக!
வெற்றி வேலுடனே விரைந்துநீ வருக!
சுற்றிய பகையைத் தொலைத்திட வருக!
நலம்பல புரிந்திடும் நாரணன் மருக!
சிலம்பொலி முழங்கிடச் சீக்கிரம் வருக!

அழகு மயில்மேல் ஆடியே வருக!
குழகா குமரா குகனே வருக!
அடியவன் அங்கம் அனைத்தும் காக்கும்
படியருள் புரிந்திட பாவகி வருக!
கற்றை முடித்தலை கதிர்வேல் காக்க!
நெற்றிப் பரப்பினை நீள்வேல் காக்க!
சிலைபுரு வங்கள் செவ்வேள் காக்க!
சலியா இமைகளைச் சண்முகர் காக்க!
விழிகள் இரண்டினை வேலவர் காக்க!
எழில்நா சிதனை இறையவர் காக்க!
ஆடும் மயிலோன் அறுமுகன் புகழைப்
பாடும் வாய்தனைப் பரிவுடன் காக்க!
சொற்களைத் தெளிவாய்ச் சொல்லிட உதவும்
பற்களை உன்றன் பரிவேல் காக்க!
ஆவியென் உடலில் அடங்கிடும் வரையில்
நாவினை உன்தன் நல்லருள் காக்க!
இதழ்கள் இரண்டும் இனியவேல் காக்க!
பதமுடன் முகவாய் பருவேல் காக்க!
வதனம் முழுவதும் வடிவேல் காக்க!
நிதம்என் செவிகளை நெறிவேல் காக்க!
சிரந்தனைத் தாங்கும் சின்னக் கழுத்துடன்
குரல்வளை யதனைக் குகனார் காக்க!
மூங்கில் தோள்இணை முருகனார் காக்க!
வீங்கிடும் முலைமார் வேலவர் காக்க!
அடர்முடி நெஞ்சினை அருள்வேல் காக்க!
பிடரிப் பகுதியைப் பெருவேல் காக்க!
முதுகைத் தணிகை முரண்வேல் காக்க!
உதரம் பரிவுடன் உறுவேல் காக்க!
முற்றும் விலாப்புறம் முனைவேல் காக்க!
சிற்றிடை தன்னைச் சிவன்மகன் காக்க!
உந்திச் சுழிதனை உக்ரவேல் காக்க!
விந்துக் குறிதனை வேலவர் காக்க!
குதந்தனை முருகன் குறையறக் காக்க!
அதன்புறப் பிட்டம் அருள்வேல் காக்க!
இணைத்தொடை யதனுடன் இருகுதி கால்களும்
கணைக்கால் உடனே கந்தனார் காக்க!

மூட்டுகள் எல்லாம் முறையுடன் காக்க!
நீட்டிடும் தாள்களை நிமலனார் காக்க!
முழங்கால் தன்னை முனைப்புடன் காக்க!
முழங்கை யதனை முருகவேள் காக்க!
இருமுன் கைகளை இணைவேல் காக்க!
இருபின் கைகளை இறைவேல் காக்க!
கால்விரல் பத்துடன் கைவிரல் பத்தையும்
வேல்கரம் கொண்ட வித்தகர் காக்க!
மெய்ப்பொருள் ஆகியே மேவும்நின் புகழைச்
செப்பிய நேரம் சேந்தனார் காக்க!
செப்பா மல்நான் சிந்தித் திருப்பினும்
தப்பா மல்நீ தகவுடன் காக்க!
சந்தி வேளையிற் சண்முகர் காக்க!
அந்தி வேளையில் அறுமுகர் காக்க!
முற்பகல் தன்னில் முனைவேல் காக்க!
பிற்பகல் தனிலே பிணைவேல் காக்க!
இரவு வேளையில் இறையவர் காக்க!
பரவும் ஒளியினிற் பாவகி காக்க!
சாமங் களிலே சரஹணர் காக்க!
தாமதம் இன்றிச் சண்முகர் காக்க!
எல்லா இடத்திலும் என்றன் எதிரிகள்
நில்லா வண்ணம் நீள்வேல் காக்க!
பொல்லா வினையும் பொல்லாப் பழியும்
இல்லா தொழித்தே இணைவேல் காக்க!
வேர்க்க வேர்க்க வினைகள் ஓடிடப்
பார்க்கப் பார்க்கப் பாவகி பார்க்க!
காக்கக் காக்கக் கந்தனார் காக்க!
போக்கப் போக்கப் பொல்லா வினைகள்!
பில்லி மற்றும் பெருஞ்சூ னியமும்
கொல்லையில் நிற்கும் குறுமுனி தனையும்
சொல்லிடும் உன்றன் தோத்திரத் தாலே
கெல்லி யெறிந்திடக் கேட்டேன் அருள்வாய்
பிள்ளை இரத்தம் குடிக்கும் பேய்கள்
கொள்ளி குறளை குமுறும் சாத்தான்
காடன் மாடன் காட்டே ரிகளும்
வேடனுன் அருளால் விலக்கிட வருவாய்!

பெண்டிரைப் பிடிக்கும் ..... ராட்சதர்
அண்டிடா வகையினில் அருள்வாய் ஐயா
ஆசைக ளுடனே ஆண்களைப் பிடித்து
மோசம் செய்யும் மோகினி வகையும்
எல்லாப் பேயும் இரிசி மண்ணரும்
நில்லா தோட்டிட நீயெனக் கருள்வாய்
மண்டை ஓட்டுடன் நகமும் மயிரும்
கொண்டே புதைத்த ஒருகல சத்தில்
பிள்ளையின் எலும்பும் பூனையின் மயிரும்
கொள்ளத் திணித்த குறும்பா வையுடன்
வீட்டினுள் புதைத்த வஞ்சனை தன்னை
ஓட்டிட நீயும் உவந்தே அருள்வாய்
கூற்றின் தூதுவன் கண்டாற் குறுகிட
மாற்றான் கண்டால் பதறி வணங்கிடக்
காற்றும் கருப்பும் கலங்கி நடுங்கிட
ஆற்றல் எனக்கே அருள்வாய் ஐயா!
சிங்கம் புலியுடன் சினமிகு கரடியும்
இங்கெனைக் கண்டால் இடிந்து கலங்கிட
நாயுடன் வஞ்சகம் செய்திடும் நரியும்
பாயும் சிறுத்தைப் பல்வகை மிருகமும்
சேயெனைக் கண்டதும் சிதறித் திரும்பிட
நீயெனக் கின்றே நிலைபெற அருள்வாய்
சர்ப்பம் பூரான் சலமண் டலியுடன்
விர்ச்சிக விடமும் விரைவினில் இறங்கிட
விடமிகு குளவி வெறிநாய்க் கடிவிடம்
திடமுடன் இறங்கிடத் தேவா அருள்வாய்
ஒற்றைத் தலைவலி ஒளிப்பும் சுளுக்கும்
மற்றைய வாதம் வலிப்புகள் எல்லாம்
உருக்கிடும் க்ஷயத்துடன் உதறிடும் வலிப்பும்
கருக்கிடும் சூலை கைகால் சிலந்தி
பித்தம் குடைச்சல் பிளந்திடும் தலைவலி
இரத்தம் கெட்டிட வந்திடும் சொறிகளும்
கண்டவர் வெறுக்கும் கருமத் தொழுநோய்
கண்டச் சளியுடன் நெஞ்சுச் சளியும்
மார்வலி தோள்வலி மலச்சிக் கல்களும்
பார்வை மறைக்கும் பல்வகைக் கண்ணோய்

கைகால் உளைச்சல் கட்டி பிளவை
கைகாற் சுளுக்குடன் காதில் வலியும்
உதரக் கடுப்பும் உதிரப் போக்கும்
பதறச் செய்யும் பல்வலிக் குத்தும்
காசம் குன்மம் கர்ப்பச் சிதைவும்
பேசும் போதினில் பிறழ்ந்திடும் வாயும்
மேகவெட் டையுடன் மேவுஅரை யாப்பும்
தேகம் முதிர்ந்த திரையும் நரையும்
எல்லாச் சோகையும் இருகா மாலையும்
எல்லாப் பிணியும் ஏகிட அருள்வாய்!
அண்டம் முழுவதும் அடியவர்க் குறவாய்க்
கொண்டுன் புகழைக் குறையறச் சொல்லி
நன்னலம் பெற்று நயமுடன் வாழப்
பன்னிரு விழியாற் பார்த்தே அருள்வாய்!
சரஹண பவனே சண்முக குகனே!
திரிபுரம் எரித்த தேவனின் மகனே!
என்குறை தீர்த்தே எனையாட் கொண்டே
உன்பதம் அருளி உயர்ந்திடச் செய்வாய்!
கன்னல் தமிழ்ச்சுவை காத்திடும் கீரன்
இன்னல் களைந்த இறைவன் நீயே!
வானவர் தலைவனின் அமரர் பதியைத்
தான்அவர் பெற்றிடத் தயைபுரிந் தவனே!
ஓமெனும் மந்திரத் துட்பொருள் தன்னைச்
சோமனை யணிந்தவர்க் குரைத்தவன் நீயே!
செந்தூர் மேவும் சேந்தனும் நீயே!
கந்தா கருணைக் கடலும் நீயே!
எந்தை நீயே எந்தாய் நீயே!
சொந்தமென்று எனக்குச் சொல்லிடும் வகையில்
பந்தம் பாசம் பரிவுடன் நேசம்
தந்துஎனைக் காத்திடும் தலைவனும் நீயே!
திருப்பரங் குன்றினில் திகழும் மணியே!
பருப்பதம் அளிக்கும் பழனியின் வாழ்வே!
தணிகை மலையில் தங்கிடும் வேலா!
பிணிகள் போக்கிடும் பீடுடைக் குமரா!
கதிர்கா மத்துறை கந்தன் நீயே!
எதிர்ப்பினை நீக்கும் இறைவன் நீயே!

சென்னி மலைதனில் திகழ்ந்திடும் முருகா!
குன்னக் குடிதனில் உறையும் குமரா!
ஆர்த்திடும் அசுரர் ஆணவம் அழித்த
கார்த்திகை மைந்தன் கடம்பன் நீயே!
பார்த்திடும் பணியிற் பகைமை நீக்கிச்
சேர்த்திடு நிம்மதி செங்கதிர் வேலா!
கல்வி ஞானம் கருதிடும் செல்வம்
பல்வகை வாகனம் பாராட் டுக்களும்
செல்வாக் குடனே சொல்வாக் கினையும்
வெல்வார் இல்லா மிகுதனி நிலையும்
கலைமக ளுடனே அலைமக ளிடமும்
மலைமக ளன்னை மருங்கினிற் கேட்டு
என்றனுக் கருள என்முன் வருவாய்
குன்றுடைக் குமரா குகனே முருகா!
புத்தி குறைந்தே பொல்லா வினையால்
எத்தனை குற்றம் ஏதுசெய் தாலும்
இந்திரன் மகளொடும் எழில்வள் ளியொடும்
என்தன் பிழைகளை இனிதே பொறுப்பாய்!
அன்னையர் இருவரும் அருகினில் இருக்க
என்னை நீயும் இசைவுடன் காப்பாய்!
உன்னருட் பாதம் ஒன்றையே நம்பிடும்
என்னைக் காத்திட இன்றே வருவாய்!
உன்னை வணங்கி உன்புகழ் உரைப்போர்
உன்னை நினைந்தே உருகிடும் அன்பர்
அன்னவர் வாழும் இல்லங் களிலே
கன்னம் இட்டிடக் கள்வர்கள் வாரா
வகையருள் செய்வாய் வடிவேல் முருகா
குகனே உன்னிடம் கும்பிட் டுரைத்தேன்
கந்தநின் பெருமையைக் கருதிடும் அன்பர்
சந்ததி தழைக்கச் சண்முகன் அருள்வாய்!
உலகினை ஆட்டிடும் ஒன்பது கோளும்
நலம்பல செய்திட நன்றே அருள்வாய்!
எட்டுத் திக்கில் இருந்திடும் பெரியோர்
இட்டமு டன்என் செயல்களில் உதவிடக்
கெட்ட நோக்குடன் கிளம்பும் பகைவர்
பொட்டுப் பொடியாய்ச் சிதறிட அருள்வாய்

சொல்லா தொழிந்த சுகங்கள் பலவும்
எல்லாம் அருளிட இன்றே வருவாய்
தேவ சேனாபதி நின்கட் டளையால்
தேவ சேனாபதி கவசம் உரைத்தேன்!
முன்னாள் தவத்தால் முருக தாசன்யான்
இன்னாள் இதனை ஏற்றுடன் நீயும்
படித்தவர் கேட்டவர் பார்த்தவர் எவர்க்கும்
துடித்துவர் இடையிதழ்க் குறமக ளுடனே
வானவர் கோன்மகள், வாரணக் குஞ்சரி
தானுடன் இருந்திடத் தருவாய் பலவரம்
இந்நூல் தன்னை இருமுறை தினமும்
பன்னாள் படித்துப் பாரா யணம்செயும்
அடியவர் துயரை அழித்திடு வேலால்
கொடிய பிணிகளைக் குலைத்திடு காலால்
வறுமை ஒழித்து வளங்கள் செழித்துப்
பெருமைகள் மிகவே பெற்றிட அருள்வாய்!
பிறந்தும் இறந்தும் பேரிடர்ப் பட்டும்
துறந்தும் ஒழியாத் துன்பப் பிறவியை
மாற்றி யமைத்தே மாண்புடன் மோட்சப்
பேற்றினை யருளிப் பிறவி தவிர்ப்பாய்!
எடுத்த பிறவியில் எல்லா நாளிலும்
படித்துன் பதம்பெறச் செய்வாய் ஐயா!
கந்தா போற்றி! கடம்பா போற்றி!
எந்தாய் போற்றி! இறைவா போற்றி!
திருப்பரங் குன்றின் தேவா போற்றி!
செருப்பகைச் செந்தூர் வேலா போற்றி!
பழனிப் பதியில் பாங்குடன் நிற்கும்
குழந்தை முருகா குமரா போற்றி!
ஏரகந் தன்னில் இசைவுடன் மந்திரச்
சீரகம் உரைத்த செல்வா போற்றி!
குன்றுதோ றாடிடும் குமரா போற்றி!
என்றும் மயில்மேல் இறைவா போற்றி
அழகர் மலையில் அழகுடன் விளங்கும்
பழமுதிர் சோலைப் பரமா போற்றி!
பாவம் போக்கிடும் பாவகி சரணம்!
தேவ யானையின் திருவடி சரணம்!

அறங்குலவு மகத்தழலு மவுணமட
    வார்வயிற்றி னழலு மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
    சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.

**சூரசங்காரம் முதலிய கீர்த்தனைகள்**

**முற்றிற்று**

உ

# பேராதனைப் பல்கலைக்கழகத் திருமுருகன் கீர்த்தனைகள்

## ந. வீரமணி ஐயர்

### 1. செந்தமிழ்க் கோயில்கொண்ட கந்தன்

இராகம்: ஷண்முகப்ரியா தாளம்: ஆதி

பல்லவி

செந்தமிழ்க் கோயில்கொண்ட கந்தனே அருள்வாய்
சுந்தரப் பேராதனை தந்திடு பல்கலைச்

அனுபல்லவி

மந்தமாருதம் வீசும் மலையழகு மலியும்
கந்தமலர் கமழும் கழகமாம் பல்கலைச்

சரணம்

முந்து தமிழ்மாலை முத்தார வழகுடன்
சிந்தும் அருள்நிறையும் சிரிப்பழகு தவழ
வந்து அமர்ந்துகலை வளங்களும் தந்தருளக்
கந்தனே கடம்பனே கார்த்திகேயனே அருள்

### 2. சேவடி தந்தருள்

இராகம்: கல்யாணி தாளம்: ஆதி

பல்லவி

வேலேந்தி விளையாடி வா—வேலவா
மாலேத்தும் மருகனே பல்கலை முருகனே

அனுபல்லவி

கோலேந்தியே அன்று கோவணப் பண்டாரமாய்
நீவேடந் தாங்கியே வேடிக்கை தான்புரிந்தாய்

சரணம்

செந்தமிழ் அவ்வையின் பைந்தமிழ் கேட்டிட
தந்தநா வற்பழ நற்சுவை கண்டனை
சிந்தனைக் கினியவா சேவடி தந்தருள்
நந்தவைப் பல்கலை நற்கழ கந்தனில்

## 3. ஆராதனை செய்தோம்

இராகம்: ஹிந்தோளம் தாளம்: ஆதி

பல்லவி

ஆராதனை செய்தோம் ஆறுமுகா—அருட்
பேராத னைப்பதி மேவும் கலாநிதி

அனுபல்லவி

தீராத வினைதீர்க்குந் தீன தயாபரா
பாராயோ எங்களைப் பன்னிரு கைவேலா

சரணம்

சூரர் குலம்முடித்த சுப்ரமண்யா குகா
மார கோடிலாவண்ய மயில்வாக னாபரா
பாரதனி லேவந்து பல்கலை மலைமீது
வீரவேல் தாங்கியருள் விளங்கு முருகாவுனை

## 4. கந்தனைக் கண்டனையோ?

இராகம்: ஹம்ஸாநந்தி தாளம்: ஆதி

பல்லவி

கந்தனைக் கண்டனை யோ?—பெண்ணே
பைந்தமிழ் பாடிட வந்தருள் தரும்அந்தக்

அனுபல்லவி

பந்தமு டனேவந்து பல்கலை மலைமீது
சுந்தரக் கன்னியர் சூழப் பேராதனைக்

சரணம்

கல்வியெனுங் குன்றக் கனக மலையிருந்து
நல்வரங்கள் தந்து நாதன் எமக்கருள்வான்
செல்வியரும் நம்மைச் சேர்ந்துவந் துறைந்திட
பல்கலை யருள்செல்வம் பரிந்து தருந்தெய்வக்

## 5. கலையருளுந் தெய்வம்

இராகம்: கௌரிமனோஹரி தாளம்: ஆதி

பல்லவி

கலையருளுந் தெய்வம் கந்தா நீயன்றோ!
கலியுக வரதனே கடம்பனே செந்தமிழ்க்

அனுபல்லவி

நிலையருளி வாழ்வில் நெஞ்சம் குளிரவைக்கும்
சிலையது வாய்உருவில் சிங்கார மாயபல

சரணம்

சோலை மணமலரின் மாலை யணியும்மார்பா
வேலைப் பிடித்துநின்று விளங்கிடும் சுப்ரமண்யா
காலைப் பிடித்தேனையா காத்தருள் வாய்ஐயா
கௌரி மனோஹரி களிக்கும்உமை பாலா.

## 6. துள்ளிவரும் அழகா

இராகம்: சாரமதி தாளம்: ஆதி

பல்லவி

பல்கலை யகமதில் நல்கிடும் ஷண்முகா
நல்வரந் தருங்குக நாதனே வந்தருள்

### அனுபல்லவி

மெல்லென வீசியே மேவுந்தென்றல் தழுவும்
முல்லைமணம் பரவும் மோகனப் பேராதனைப்

### சரணம்

வள்ளிகுஞ் சரிமகிழ் வரதனே குமரனே
வந்தருள் தாராயோ கந்தகா ருண்யனே
புள்ளிம யில்மீது புனிதவே லெடுத்தேந்தித்
துள்ளிவரும் அழகா தூயமலை மேவிப்

## 7. ஆனந்த ரூபன்

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

### பல்லவி

வெற்றிவே லேந்திடும் வேலாயு தனின்பதம்
பற்றியே வாழுவாய் பல்கலை மலைமேவும்

### அனுபல்லவி

எத்திசையும் புகழும் எழில்மேவும் பேராதனை
கற்றவர் பணிந்திடும் கழகப்பல் கலைமலை

### சரணம்

அன்பருக் கருள்தரும் ஆனந்த ரூபன்அவன்
இன்பமா யின்னருளை இறைஞ்சிடும் குருபரன்
துன்பமெல் லாமகற்றுந் தூயமா லின்மருகன்
மன்புகழ் பல்கலைக் கதிபன் திருமுருகன்.

## 8. தமிழ்கேட்டு உருகுவான்

இராகம்: கரகரப்ரியா தாளம்: ஆதி

### பல்லவி

மயில்மீதில் வருவான் குகன் — தமிழ்
மயல்கொண்டு பலகலை பயிலுங் கழகமதில்

அனுபல்லவி

அயில்ஏந்தி யேஅந்த ஆறுமு கன்இரு
மயல்மாதர் சூழ்ந்திட மரகதப் பச்சைப்புள்ளி

சரணம்

தமிழ்கேட்டு உருகுவான் தண்ணரு ளுந்தருவான்
அமிழ்தான இனியநற் றமிழ்த்தேனை மாந்துவான்
குமிழ்சிரிப் புடன்வள்ளி குஞ்சரி தாள்மருவ
கமழும்பல் கலைவளர் கழகப்பே ராதனையில்.

## 9. கண்மலரருள்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

என்னிரு கண்ணுள் நிறைந்தவனே—எழில்
பன்னிரு கையனே பல்கலையில் அமர்ந்து

அனுபல்லவி

மின்னிடும் வேலேந்தி மிளிரும் பொன்னின்முடி
சென்னியிற் சூடியே வன்ன மயிலின்மீது

சரணம்

ஷண்முகனே வாராய் என்முகம்நீ பாராய்
தண்மலர்ச் சேவடிகள் தஞ்சமென அடைந்தேன்
பண்முறை யால்உன்னைப் பாடிப் பரவிநின்றேன்
கண்மல ரருள்பல கலைக்கோயில் வந்துறைந்து.

## 10. என்னை ஆட்கொள்பவன்

இராகம்: மாண்டு தாளம்: ஆதி

பல்லவி

ஆறுமுகன் என்று கூறு—அஞ்சுகமே
தேறுதல் மொழிசொல்லித் தேற்றும் ஒரேஒருவன்

அநுபல்லவி

வேறுதுணை இல்லை வேல்முருகா என்றால்
ஏறுமயி லேறிவந்து என்னையாட் கொள்பவன்

சரணம்

நல்லருங் கலைபயில் பல்கலைக் கழகம்
இல்லிடங் கொண்டான் இன்பத்த மிழ்முருகன்
வல்லவன் குஞ்சரி வள்ளிமண வாளன்
நல்லவன் பேராதனை நற்பதி யுறைபவன்.

## 11. ஆவலுடனே வருவான்

இராகம்: பாகேஸ்ரீ தாளம்: ஆதி

பல்லவி

தேவசே னாபதி மாமயில் மீதினிலே
ஆவலு டனே வருவான் என்னையாட்கொள்ள

அநுபல்லவி

நாவல ரும்போற்றும் நற்பதிப் பேராதனைப்
பாவலர் புகழ்ந்திடும் பல்கலை யகம்வளர்

சரணம்

தாமரைத் தாளிணைகள் தந்திடு வான்குகன்
தேமலர்ச் சேவடியின் தேனருள் தந்திடுவான்
பாமலர் சொரிந்துநான் பக்திசெய் வேன்முருகன்
தாமத மில்லாமல் தயைபுரி வான்ஐயன்.

## 12. அடைக்கலம் தந்து ஆள்வாய்

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

நாவற் கனிகொடுத்து நற்றமிழ்த் தேன்சுவைத்த
பூவடி தருவாய் புண்ணியனே—அவ்வைக்கு

அநுபல்லவி

சேவற் கொடியுடையாய் சிங்கார மயிலுடையாய்
மேவப் பல்கலையகம் மேவிய ருள்தருவாய்

**சரணம்**

செந்தமிழ் முருகனே வந்துபல் கலைப்பதிப்
பைந்தமிழ்ப் பாடலைப் பரவச மாய்க்கேட்பான்
கந்தவேள் கடம்பன் கார்த்திகே யன்குமரன்
சுந்தரப் பேராதனை வந்தருள் புரிபவன்.

## 13. கிடைக்காதோ நின்னருள்?

இராகம்: நீர்வாணி தாளம்: ஆதி

**பல்லவி**

அடைக்கலந் தந்தெனை ஆள்வாய்—ஆறுமுகவா
படைக்கல மாகவேலைப் பிடித்தவே லையாஉந்தன்

**அனுபல்லவி**

கடைக்கண் அருள்நோக்குக் காட்டாயோ ஷண்முகனே
கிடைக்காதோ நின்னருள் கீர்வாணி யின்மைந்தா

**சரணம்**

சீரோங்கு நற்பதிப் பேராதனை வளர்
காராடும் கோபுரக் கோயில்கொண்ட நாதா
ஏடோங்கு பல்கலை எழிற்கலை யகம்அமர்
பாரோர் புகழும்சிவ பால குமாரவேலா.

## 14. கழகமலை வளரும் அழகன்

இராகம்: தேஷ் தாளம்: ஆதி

**பல்லவி**

கண்குளிரக் கண்டேன்—பல்கலை
கழகமலை வளரும் அழகனைக் குழகனை

**அனுபல்லவி**

பண்கமழ் இன்னிசையாற் பக்திபெ ருகப்பாடி
தண்கழ லருளது தரும்ஷண் முகனைஎந்தன்

சரணம்

மஞ்சு தவழும்பனி கொஞ்சும்கோ புரவாயில்
மிஞ்சும் எழில்நிறையும் பிஞ்சுப் பிறைதவழும்
தஞ்சம் எனஅடியர் கொஞ்சுங் குரல்ஒலிக்கும்
மஞ்சவ னப்பதி மருவும்பே ராதனையில்.

## 15. ஷண்முகனின் அருள்

இராகம்: அமிர்தவர்ஷணி தாளம்: ரூபகம்

பல்லவி

கலைவளருங் கோயில் கொண்ட
கார்த்திகேய னே—அருள்

அனுபல்லவி

தலைவன் கந்தன் தாளைப் பிடித்தால்
அலைவ தேது? ஆத்ம ஜீவன்

சரணம்

சரண மலரைச் சரணடைபவர்
சண்முக னின்அருள் திண்ணமாய்ப் பெறுவர்
தரணி தனில்பே ராதனைப் பதியில்
அமரும் முருகா அபய வரந்தா.

## 16. பலகலையருள்வாய்

இராகம்: நீலாம்பரி தாளம்: ஆதி

பல்லவி

பன்னிரு கையாநின் பாதம லர்பணிந்து
சென்னிமேற் கரங்கூப்பி சேவிக்க வேவரந்தா

அனுபல்லவி

மன்னிடு கலைவளர் மகிழுபல் கலையகம்
நண்ணிடு பேராதனைப் புண்ணிய னேகந்தா

சரணம்

மலையகந் தோறும்மயில் வாகனா என்றுமுன்
நிலையக மாகவே நின்றருள் புரிந்தாய்
கலையக மேதிகழ்ந்து கல்வி நலம்பெறவே
பலகலை யருள்வாய் பாலசுப்ர மணியா.

## 17. உவந்தருள் புரிந்தனை!

இராகம்: மோகனம் தாளம்: ஆதி

பல்லவி

உனைப்பாட உளமார உவந்தேன்—கந்தா
எனைப்பாட அருளாயோ வினைதீர்க்கும் முருகோனே

அனுபல்லவி

சுனைசூழும் எழில்மேவு இனிதாம் பேராதனைப்பல்
கலைமேவுந் திருமுருகா கழல்பணிந்தேன் தமிழில்

சரணம்

முன்னம் அருணகிரி கன்னல் திருப்புகழால்
உன்னையே பாடிடவே உவந்தருள் புரிந்தனை
இன்னமும் அருளாயோ இரக்கமுனக் கில்லையோ
வன்ன மயிலழகா வந்தருள் தாராயோ?

## 18. முத்தமிழ்த் தேன்பருகும் முருகன்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

முத்தமிழ்த் தேன்பருகும் முருகனடி—என்றும்
இத்தரை மீதுவந்தான் இலங்கைப் பேராதனையில்

அனுபல்லவி

முத்தன் அவன்குமரன் முந்து தமிழ்மாலைப்
பித்தன் ஷண்முகன்குகன் பல்கலை யகம்வளர்

சரணம்

சுந்தரி அபிராமி தந்திடும் வேலவன்
தொந்தி வயிற்றுத் தந்திமுகன் தம்பி
விந்தை மயிலேறும் எந்தை முருகனவன்
சிந்தைசெய்ய வருவான் சேர்ந்து இன்பம்நல்கி.

## 19. இன்பத் தமிழ் பாடு

இராகம்: வசந்த தாளம்: ஆதி

பல்லவி

முருகையன் இருபாதம் நாடு—என்றும்
இருகைகள் கூப்பிநீ இன்பத் தமிழ்பாடு

அனுபல்லவி

ஒருகையில் வேலேந்தி ஓடோடி வருவன்—பன்
னிருகையால் இன்பங்கள் இறைத்தள்ளி யேதருவன்

சரணம்

நம்பின பேர்களைக் கைவிடான் கந்தன்வள்ளி
நாயகன் வேலவன் நல்லருள் புரிவான்
கும்பிடும் அன்பரின் குறைகள் அகற்றிடுவான்
கோலக் கலைக்கழகப் பேராதனை வளரும்.

## 20. கழக மமரு மழகன்

இராகம்: கானடா தாளம்: ஆதி

பல்லவி

கழகந் தனிலமரும் அழகன்—முருகன்
பழகுபல் கலைவளரும் அழகுபே ராதனைக்

அனுபல்லவி

குழகன் குகன்குமரன் குஞ்சரி வள்ளிலோலன்
எழில்தவழ் மயில்மீது அயிலேந்தும் கதிர்வேலன்

சரணம்

செந்தமிழ்ப் பாதமதில் செந்தாமரை இருக்கும்
பைந்தமிழ்ப் பாமலரில் பாலின்சுவை பெருக்கும்
அந்தமில் ஆறுமுகன் அருளில்மனம் உருக்கும்
சுந்தர வழகுடன் முந்துபல் கலைமலைக்

## 21. ஏரம்பன் சோதரா!

இராகம்: ஆரபி தாளம்: ஆதி

பல்லவி

என்னைக் கண்ணாற் பாராயோ—முருகா
ஏரம்பன் சோதரா ஆரம்பு னைந்தளிக்கும்

அனுபல்லவி

உன்னையே எண்ணியே உருகித் தமிழ்படிப்பேன்
நின்னையே நினைந்துநான் நிதவிழி நீர்வடிப்பேன்

சரணம்

சந்ததமுஞ் சரணம் சரணமென்று கதறும்
எந்தனைக் காராயோ எம்பிரான் பாலகா
கந்தனே ஷண்முகா கடம்பனே கார்த்திகேயா
மந்தமா ருதப்பேரா தனைக்கலை மலைநாதா.

## 22. திருவடி நாடினேன்

இராகம்: இலதாங்கி தாளம்: ஆதி

பல்லவி

அருளை எண்ணிஎண்ணி அநவரதம் நினைந்து
உருகி உருகிஉந்தன் திருவடி நாடினேன்

அனுபல்லவி

இருளை யகற்றிக்கல்வி இன்ப ஒளிஏற்றும்
திருவளர் பேராதனை திகழ்முரு கையாஉந்தன்

சரணம்

மலைக்கோயில் தனில்மேவும் மயில்வா கனாபல
கலைக்கோயில் கொண்டரு ளும் கார்த்திகே யாகுமரா
சிலைவேடக் குறக்குலச் சிங்கார வள்ளிலோலா
நிலைகண்டு இரங்காயோ நீலாய தாக்ஷிபாலா.

## 23. காணத் துடிக்குதையா!

இராகம்: பீம்பிளாஸ் தாளம்: ரூபகம்

பல்லவி

காணத் துடிக்கு தையா—உன்னைக்
காதலாய் வந்துபல் கலையகக் குகாநிதம்

அனுபல்லவி

பேணவரும் கல்விப் பேரா தனைப்பதி
மாணவர் போற்றுபல் கலைக்கோயில் வந்துன்னைக்

சரணம்

செந்தமிழ்த் தேன்மாந்தும் தேவகுஞ் சரிநாதா
தந்திமு கத்தோனின் தம்பியே நீவாராய்
உந்தன் அருள்நீதா உமாபதி யின்பாலா
கந்தனே ஷண்முகா கன்னிவள்ளி லோலா.

## 24. பழகு தமிழ்ப்பிரியன்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

கழகமதில் அமர்ந்த கருணையை என்சொல்வேன்
அழகன் பழனியப்பன் அறுமுகன் பல்கலைக்

அனுபல்லவி

பழகு தமிழ்ப்பிரியன் பாலசுப் பிரமணியன்
குழகன் குருபரன் குகன்சர வணபவன்

சரணம்

அருணகிரி நாதர் உருகிப் புகழ்பாட
திருவடி தந்தனன் தீந்தமிழ் உண்டனன்
கருணைவ டிவழகன் கலியுக வரதனாம்
குருவடி வானவன் கொஞ்சு தமிழ்பருகக்

## 25. கருணைக்கடல்

இராகம்: ஸாவேரி தாளம்: ஆதி

பல்லவி

கருணைக் கடல்எங்கள் கந்தன்—என்றும்
அருளை நமக்கருளி ஆட்கொள்ளு வான்அன்புக்

அனுபல்லவி

உருகி உருகிவாழ்வில் உளமார வேகசிந்து
திருமுரு காஎனத் தேடிவந் தருள்செய்யும்

சரணம்

கந்தா குகாஎன வந்தாள்ப வன்வேலன்
மந்தாரை மலர்மலி மலையகம் வாழ்பவன்
தந்தாளப் பல்கலை வந்தவன் செந்தமிழ்ச்
சிந்தா மணிகுகன் சிவசுப் பிரமணியன்.



## 26. நின்பதம் நம்பினேன்

இராகம்: சங்கராபரணம் தாளம்: ஆதி

பல்லவி

கலைக்கழகம் வாழும் கந்தா—உந்தன்
காலைப் பிடித்தேனையா வேலைப் பிடிக்குங்கையா

அனுபல்லவி

குலைக்கதலி குலுங்கும் குமுதவாம்பல் மலரும்
மலைக்கோயில் கொண்டபேரா தனைப்பதி யமரும்பல்

**சரணம்**

கலைமகள் அலைமகள் மலைமகள் போற்றும்பல்
கலைக்கழகம் மேவும் கலியுக வரதனே
தலைமகனே முருகா தமிழின்பத் தேனமுதே
நிலையருள்வாய் ஐயா நின்பதம் நம்பினேன்நான்.

## 27. பேராதனைக் கலைத்தேவா!

இராகம்: ஆபேரி தாளம்: ஆதி

**பல்லவி**

சங்கரன் மைந்தா சரவண பவனே
மங்கலப் பேரா தனைக்கலைத் தேவா

**அனுபல்லவி**

திங்கள் தவழுமுகில் திகழ்மலை யகந்தனில்
பொங்கிட வேஅருளைப் பொழியுந் திருமுருகா

**சரணம்**

பன்னிரு கரங்களும் பால்முகம் மூவிரண்டும்
சென்னியில் மிளிர்ந்திடுஞ் செழும்பசும் பொன்முடியும்
வன்ன மயில்அழகும் வள்ளியம்மை அழகும்
இன்னருள் தன்னழகும் இறைஞ்சுங் குருபரனே.

## 28. சுந்தரப் புன்னகை

இராகம்: மலயமாருதம் தாளம்: ஆதி

**பல்லவி**

வேல்முருகன் பதம் நாடு—மனமே
மால்மருகன் குகன் மகிழுவான் பல்கலை

**அனுபல்லவி**

சேல்விழி மங்கையர் தெய்வகுஞ் சரிவள்ளி
சூழ மயில்மீதில் சுந்தரப் புன்னகைபுரி

சரணம்

பேராத னைப்பதி மேவுங் குருபரன்
பேரின்ப நாயகன் சூரின் கதிர்வேலன்
தீராத வினைதீர்க்குந் தீன தயாபரன்
தீந்தமி ழுருந்தவே தினமும் பல்கலையுறை

## 29. குஞ்சரி மணாளா!

**இராகம்:** அமிர்தவர்ஷணி **தாளம்:** ஆதி

பல்லவி

கண் பாரையா கார்த்தி கேயனே
கருணா கரனே சரணாம் புஜம்தா

அனுபல்லவி

பண்பாடி உன்னைப் புரவினேன் வேலா
பல்கலைக் கழக மலைமீ தமர்ந்து

சரணம்

குமரா குகனே குருநா தனேவா
குஞ்சரி மணாளா குறவள்ளி லோலா
அமரா அதிபா ஆறுமுகத் தேவா
அழகுக் கலைவாழ் பதிபே ராதனையில்.

## 30. சோதனை ஞாயமோ?

**இராகம்:** காபி **தாளம்:** ஆதி

பல்லவி

முருகனிடஞ் சொல்லடி—ஸகியே
அருகு அணையமனம் உருகுவதைப் பல்கலை

அனுபல்லவி

பெருகிக்கண் ணீர்சொரிந்து பேராதனைத் தேவனை
திருவடி தரஇங்கு வருகஎனப் பல்கலை

சரணம்

சோதனை ஞாயமோ? மாதெனை மயக்கியே
வேதனை தருவது வேலனுனக் கழகோ?
போதனைக் கலையாவும் போதிக்கும் பேராதனை
நாதனை அணுகியென் காதலைப் பல்கலை

## 31. ஓடிவரும் முருகா!

இராகம்: பீம்பிளாஸ் தாளம்: ஆதி

பல்லவி

கலையமுதம் படைத்தோம் கந்தா—என்றுமுன்
கலையெலாம் நின்னருள் நிலைதரு மென்றுபல்

அனுபல்லவி

அலைமகள் கலைமகள் மலைமகள் போற்றிடும்
தலைவனே வேலா தாமரைப் பதந்தாராய்

சரணம்

அழகு முருகாவுனை அன்பொழுகப் பாடி
உருகிஉன் னையேதொழும் உள்ளமும் அறியாயோ?
பழகுதமிழ் இசைக்கப் பறந்து மயிலின்மீது
பாவை யிருவருடன் ஓடிவரும் முருகா.

## 32. பாலாபிஷேகம் செய்வோம்

இராகம்: மோகனம் தாளம்: ஆதி

பல்லவி

மனமும் உருக்கிஉந்தன் மலரடி சேர்க்கும்
தினமும் உந்தன்அருள் திருவடி காக்கும்

அனுபல்லவி

கனவும் நனவும்கலைக் கழகந்தனில் மேவும்
கந்தனை வழியேகிக் காணவென் கால்களேவும்

சரணம்

பேராதனைப் பதிச் சீரான கலைக்கோயில்
பேராதரித் தடியர் பேரின்ப வீட்டுவாயில்
வேலாயு தனேசக்தி பாலாசண் முகநாதா
பாலாபி ஷேகஞ்செய்வோம் பக்தியா யுனைப்பணிந்து.

## 33. விளையாடும் சரவணன்

இராகம்: ஸிந்துபைரவி தாளம்: ஆதி

பல்லவி

தந்தைக்கு உபதேசம் தரணியிற் செய்தவன்
விந்தை மயிலின்மீது விளையாடும் சரவணன்

அனுபல்லவி

எந்தைபல் கலைவாழும் எழில்மலை கொண்டவன்
வந்தணைந் தேபேரா தனைப்பதி யுறைபவன்

சரணம்

காக்குங்கூர் வடிவேலன் கந்தன்என் ஷண்முகன்
வாக்கு மனம்காயம் வணங்கும் பரிசுத்தன்
தேக்கு புகழ்பரப்பும் தெய்வப்பே ராதனையில்
நாக்கு மணம்கமழ நற்றமிழ் பாடியே.

## 34. கலைக்கோலம் கொண்ட கந்தன்

இராகம்: பூபாளம் தாளம்: ஆதி

பல்லவி

மலைக்கோயில் மணிஒலி மனமுருக்கும்—எந்தன்
மனமுருகி முருகன் பதமிருக்கும்—பல்கலை

அனுபல்லவி

கலைக்கோலம் கொண்டவன் கந்தன்அவன் எந்தன்
தலைக்கோதந் திருவடி தந்தவன் பேராதனை

சரணம்

குருவடி வாகிஅந்தக் குமரன் வருவன்மலர்த்
திருவடி சூடிஎன்றுந் திருவரு ளுந்தருவன்
அருள்வடி வானவன் ஆறுமு கன்குகன்
இருள்வினை நீக்கிவாழ்வில் இன்ப அருள்புரிவன்.

## 35. ஞானவேலன்

இராகம்: ஹிந்தோளம் தாளம்: ஆதி

பல்லவி

செந்தமிழ்த் தேன்பருக வந்தபல் கலைமலைக்
கந்தனைக் கண்டேனடி—பெண்ணே

அனுபல்லவி

சிந்தனைக் கினியவன் சிவசுப்பிர மணியன்
எந்தன் மனங்கவர்ந்து எழில்பேரா தனைவளர்ந்து

சரணம்

மோனச் சிரிப்பழகில் நானும்மெய்ம் மறந்தேனே
கான மிசைக்க அந்தக் கந்தன் வருகின்றான்
ஞானவே லன்முருகன் ஞாலம்பு கழ்குமரன்
கானக்கு றத்திவள்ளி குஞ்சரி காதலன்.

## 36. தண்டாயுதபாணி

இராகம்: ஸாருகேசி தாளம்: ஆதி

பல்லவி

கண்டார் மனத்தையெல்லாம் கசிந்துருகச் செய்வான்
தண்டாயு தபாணி தாமரைப் பதந்தந்தே.

அனுபல்லவி

கொண்டாடிப் பல்கலைக் கோயில்கொண்ட குமரன்
வண்டார் குழலிவள்ளி வளர்குஞ்சரி லோலன்

சரணம்

ஆணவம் நீக்குவான் ஆன்மா அருட்கடலில்
மோனமாய் மூழ்கிட முகிழ்த்தசெந் தமிழ்த்தேன்
காண வரும்பெரியான் கந்தா முருகன்குகன்
கலையழகு பொலியும் கவின்பேரா தனையிலே.

## 37. அழகு வேலேந்தி நின்றான்

இராகம்: தேஷ் தாளம்: ஆதி

பல்லவி

கந்தானை வழியேகிக் கந்தனைக் கண்டேன்
அந்தாறு முகன்ஒரு அழகுவே லேந்திநின்றான்.

அனுபல்லவி

வந்தாளும் குஞ்சரி வள்ளிநா யகியுடன்
தந்தாளும் குறுநகை தவழப்பல் கலைமலையின்

சரணம்

குறுநகை புரியிதழ் குழிதவழ் கன்னங்கள்
அறுமுக னின்அருள் அன்பொழு குங்கண்கள்
நறுமணம் கமழ்ந்திடும் நல்லமு தமொழியும்
முறுவலும் கண்டுநான் முற்றும் மறந்துநின்றேன்.

## 38. ஆராதனை செய்ய அருள்வாய்

இராகம்: நாதநாமக்ரியா தாளம்: ஆதி

பல்லவி

பாராத தேனோ சிவபாலா—என்னைப்
பேராதனைப் பல்கலை மேவுந் திருமுருகா

அனுபல்லவி

தீராத எந்தன்வினை தீர்த்த ஷண்முகநாதா
ஆராதனை செய்ய அருளுங் குருநாதா

சரணம்

செவ்விதழ் வாய்குழியச் சிரிப்பின் அருள்தவழ
சேவல் கொடியேந்தும் சேவகனே முருகா
வெவ்வினை நீக்கியருள் வேலதைத் தூக்கிமிளிர்
வெற்றிவே லாயுதனே பற்றினேன் பதந்தாராய்.

## 39. கழகமலை முருகன்!

இராகம்: காம்போதி தாளம்: ஆதி

பல்லவி

அமரர் தொழுஞ்சிவ குமரவடி வேலன்
அருள்தருவான் மன இருள்களைவான் என்றும்

அனுபல்லவி

கமழும்மலர் சொரியும் கவின்பேரா தனைக்கலை
வளரும்பல் கலைமிளிர் கழகமலை முருகன்

சரணம்

வள்ளிகுஞ் சரியோடு வடிவேலும் ஏந்திஎழில்
புள்ளிம யில்மீதினில் புனிதன் குகன்வருவான்
அள்ளிஎன் இதயத்தை ஆறுமு கன்அணைப்பான்
புள்ளினம் பாடுமெழில் புனிதப்பே ராதனையில்.

## 40. சிங்கார வேலவன்

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

கலைக்குன்றம் தனிலமர்ந்து காத்திடுவான்—குகன்
சிலைவள்ளி யின்கணவன் சிங்கார வேலவன்

அனுபல்லவி

மலைக்குன்றும் மாவலி மாநதி சூழ்பொழில்
நிலைக்கள மாகவந்து நின்றுபே ராதனைப்பல்

சரணம்

சீரார் கலைகள்மலி பேராத னைப்பதியில்
வேலாயு தந்தரித்து விளங்குந் திருமுருகன்
பேராத ரித்துஅன்பர் ஆராத னைகள்செய்ய
காரானை முகன்தம்பி காத்துஅருள் புரிவான்.

## 41. ஆடும் மயிலேறும் ஆறுமுகன்

இராகம்: கல்யாணி தாளம்: ஆதி

பல்லவி

ஆடும் மயிலேறும் ஆறுமுகன்—பாதம்
நாடும் அன்பருக்கு நற்கதி நல்கிடுவான்

அனுபல்லவி

நீடு புகழ்க்கல்வி நிறைந்தபே ராதனையில்
வாழும்பல கலைமலை மீதுதோகை விரித்து

சரணம்

தத்துவன் சரவண முத்துக் குமரையன்
சித்துவும் சத்துவாய் முத்தியின் வித்துவாம்
வித்தகன் சற்குரு வித்தைகள் சித்திசேர்
இத்திருப் பல்கலை நற்றிருக் கோயிலில்

## 42. அருணகிரி பணியும் ஆறுமுகன்

இராகம்: திலங் தாளம்: ஆதி

பல்லவி

அருணகிரி பணியும் ஆறுமுகன்—என்றும்
கருணையுடன் உன்னைக் காத்திடுவான் வாழ்வில்

அனுபல்லவி

முருக குமரா குகா வருக வருகஎனத்
தருணம திலேவந்து தயைபுரி வான்முருகன்

சரணம்

சந்தத் தமிழில் தந்த அந்தத் திருப்புகழை
சிந்தை குளிரக் கேட்டு சிங்காரன் அருள்செய்தான்
நந்தவப் பேராதனை தந்த கலைமலையில்
வந்தணைந் தேபல்கலை வாரியுண் ணும்முருகன்.

## 43. குருநாதனைக் கண்டேன்

இராகம்: பௌலஹரி தாளம்: ஆதி

பல்லவி

குருநாதனைக் கண்டேன்—கலைக்குன்றில்
இருமாதர் புடைசூழ அருமா மயிலின்மீது

அனுபல்லவி

பெருமா மறைகள் போற்றும் பேரின்ப ரூபன்குகன்
எனையாளப் பேராதனை எழில்கலை மலைமேவும்

சரணம்

மயிலாட மலர்ச்சோலை மதுவீழ்ந்த நதிஓடக்
குயில்பாடக் கலைவாழும் குன்றம மர்ந்துபேரா
தனைமேவும் புகழ்சேர எனையாளும் குமரேசன்
சுனைசூழும் மலைமீது அனைய ரிருவருடன்.

## 44. குஞ்சரி கணவனின் கோயில்

இராகம்: ரஞ்ஜனி தாளம்: ஆதி

பல்லவி

அஞ்சல்என் றருள்வான் ஆறுமுகன்—மஞ்சு
கொஞ்சுபல் கலைமலைக் கோயில் கொண்டமுருகன்

அனுபல்லவி

தஞ்சம்என்றே அவன் தாமரைப் பதம்பாடிக்
கெஞ்சியழுதால் அந்தக் கந்தன் மனம்கசிந்து

சரணம்

மஞ்சரி குலுங்கிடும் மாமுகில் இலங்கிடும்
குஞ்சரி கணவனின் கோயில் வலம்வந்து
அஞ்சலி செய்திட அருட்கலைப் பேராதனை
வெஞ்சமர் வேலவன் வெவ்வினைகள் தீர்த்து

## 45. அறிஞர் குடில் அருகே!

இராகம்: பந்துவராளி தாளம்: ஆதி

பல்லவி

அறிஞர்குடில் அருகே அழகுப் பேராதனையில்
கலைஞர்போற்றும் பல்கலைக் கழகமமரும் கந்தா

அனுபல்லவி

உறியதில் ஏறிவெண்ணெய் திருடும் மாலின்மருகா
அறியாயோ எந்தன்நிலை அருளாயோ ஆறுமுகா

சரணம்

வானுயர்ந்த எழில் வளநிறை கலைமலை
மேவும்கு மராமயில் ஏறும்முருகா அருள்
தேனுலரா மலர்த் தீம்பொழில் பேராதனை
மேலைப் பல்கலைக்க ழகமமரும் கந்தா.

## 46. நெஞ்சம் துடிக்குதையா!

இராகம்: ஸிம்மேந்திரமத்யமம் தாளம்: ஆதி

பல்லவி

நின்முகம் கண்டிட நெஞ்சம் துடிக்குதையா
ஷண்முக நாதனே என்முகம் பார்த்தருள்

அனுபல்லவி

பண்முறையால் உன்னைப் பாடிப்பரவி நின்றேன்
பல்கலைப் பேராதனைப் பன்னிரு கையனே

சரணம்

உந்தனைக் கண்டிட கந்தானை வழியேறி
வந்தனை புரிந்திட வந்தேன்நின் றிருக்கோயில்
எந்தனைப் பாராயோ எழில்முரு கையனே
கந்தனே கடம்பனே காருண்ய னேகுகா.

## 47. அயில் ஏந்தும் ஆறுமுகா

இராகம்: ஹம்ஸத்வனி தாளம்: ஆதி

பல்லவி

மனமிரங்கிட இந்த மௌனமு மேனோ?
மயில்வாகனா தங்க அயில்ஏந்தும் ஆறுமுகா

அனுபல்லவி

தினமுன தடிகளைத் தேடித்தேடிப் பாடிக்
கனவிலும் நனவிலும் கலங்குவ தறிவாயோ?

சரணம்

கலைபயிலும் பல்கலைக் கழகமுயர் குன்ற
மலையதன் மீதிலே மன்னும் குருநாதா
தலைவனே தயாபரா தருணமி துதானையா
இலைவேறு கதிஐயா இன்னருள் தந்திட.

## 48. எத்தனை சோதனையோ?

இராகம்: ஹம்ஸாநந்தி தாளம்: ஆதி

பல்லவி

எத்தனை சோதனையோ?—வாழ்வில்
அத்தனைக்கும் உன்னருள் அன்றிநா னுய்வேனோ?

அனுபல்லவி

சித்தம் இரங்கியுந்தன் சேவடி தந்தருள்
பித்தன் மகனல்லவோ அத்தனே ஆறுமுகா

சரணம்

பாடிப்பாடி உந்தன் பாதம லரின்மது
நாடிடும் வண்டானேன் நாதனே ஷண்முகா
தேடிக் கலைவளரும் தெய்வீகப் பேராதனை
நாடிப் பல்கலைமலை நண்ணி யுறைபவனே.

## 49. இரக்கம் இல்லையோ?

இராகம்: ஸகானா தாளம்: ஆதி

பல்லவி

இரக்கமென்ப தில்லையோ?—முருகா
அரக்கர்குல அகந்தை தொலைத்த ஆறுமுகவா

அனுபல்லவி

புரக்கும் கலைமலியும் புனிதப் பேராதனையில்
சிறக்கும் பல்கலைமலை இருக்கும் முருகவேளே

சரணம்

சரணம் சரணம்என்று சந்ததமும் கதறிப்
பதமலரை நினைந்து பரிவதும் அறியாயோ?
தருணம்இது வேஐயா தண்ணருள் தாருமையா
சரவண பவகுஹா ஷண்முகா வேலையா.

## 50. சரணடைந்தேன்

இராகம்: ஹரிகாம்போதி தாளம்: ஆதி

பல்லவி

நினைச்சர ணடைந்தேன் நிர்மலனே
எனைக்கண் பாராய் ஏரம்பன் சோதரா

அனுபல்லவி

சுனைநதி சூழும் சோலைவளப் பேரா
தனைப்பதிப் பல்கலை மலையமரும் கந்தா

**சரணம்**

உன்னிரு தாளைஎண்ணி உருகிநின்றேன் குமரா
என்னிடம் சோதனைகள் ஏனோ குருபரனே
சென்னியில் உன்பதம் சூட்டு சுப்ரமணியா
பன்னிரு கையனே பதந்தாவே ஐயனே.

## 51. கொள்ளைகொளும் காட்சி

இராகம்: பாகேஸ்ரீ தாளம்: ரூபகம்

**பல்லவி**

வந்து பாருங்கடி—எங்கள்
கந்தன் பல்கலைக் குன்றில் அமர்வதை

**அனுபல்லவி**

சிந்தை மகிழ்ந்து செந்தமிழ் பருகி
விந்தை மயிலில் விளங்கிடு முருகனை

**சரணம்**

அள்ளிஅள்ளி அருள் அனைவருக் குந்தந்து
தெள்ளு தமிழ்ப்பேரா தனையில்வே லேந்தியே
வள்ளி குஞ்சரியுடன் பல்கலை மலைமீது
கிள்ளி மனமதைக் கொள்ளைகொளும் காட்சி.

## 52. பல்கலைக் கழகத்திலே!

இராகம்: நடைபைரவி தாளம்: ஆதி

**பல்லவி**

கையிலொரு வேல்ஏந்தி கலைக்குன்ற மீதமர்ந்து
ஐயன்முரு கையன்என்றும் அபயம் அளித்திடுவான்

**அனுபல்லவி**

வையகத்தில் எழில்மிகு வளநிறை பேராதனைப்
பல்கலைக் கழகத்தில் பாலசுப்ர மண்யன் என்றும்

சரணம்

தந்திமுகன் தம்பியவன் தண்டமிழை உண்டகந்தன்
விந்தைமிகு மயில்மீது வீற்றிருந்து கலைச்செல்வம்
தந்திடுவான் தண்ணருளுந் தாமரைப் பதத்தாளும்
உந்தனுக்கே நல்கிடுவான் மந்தமா ருதமலையில்.

## 53. உருகியே பாடு

இராகம்: வாசஸ்பதி தாளம்: ஆதி

பல்லவி

மூவிரு வதனன் தாளினை நாடு
முருகன் திருப்புகழ் உருகியே பாடு

அனுபல்லவி

பூவிரு வாட்சியும் புனித நதிசூழும்
பாவலர் போற்றிடும் பல்கலை மலையுறை

சரணம்

கண்டவர் களிப்புறுங் கவினுரு வானவன்
அண்டரும் போற்றிடும் ஆறு முகன்பரன்
எண்டிசை ஏற்றிடும் எழில்வடி வேலவன்
அண்டின பேர்களுக் கருள்தரும் ஷண்முகன்.

## 54. செந்தமிழ்த் தெய்வம்

இராகம்: ஹேமவதி தாளம்: ஆதி

பல்லவி

செந்தமிழ்த் தெய்வம் எங்கள் கந்தன்—அவன்
சந்தத் தமிழ்நுகரும் சரவண பவகுகன்

அனுபல்லவி

மந்தமா ருதச்சோலை மலைமலி பேராதனை
வந்தணைந் தேபல்கலை வளக்குன்று மீதமரும்

சரணம்

அமிழ்தாகிய எங்கள் அன்னையாம் அன்பினை
தமிழான மொழியெனுந் தாயினைப் பூவினில்
நவிலவொ ணாஇன்ப நற்பண்பு நாதனை
புவிமீது இலங்கிடும் பேராதனை வளரும்.

## 55. அருள் ஒழுகுந் திருமுகம்

இராகம்: காம்போதி தாளம்: ஆதி

பல்லவி

அருள்ஒழுகும் உந்தன் திருமுகம் கண்டுநான்
உருகி உருகிஉனை உளமாரப் பாடவருள்

அனுபல்லவி

பெருகுகண் ணீர்சொரியப் பேரம் பலத்தின்சுதா
அருகு அணைத்தெனக்கு அன்பொடு நீசிரிக்கும்

சரணம்

செவ்விதழ் மலர்ந்திருக்கும் சிரிப்பழகும் உந்தன்
செவ்வரும் திருமேனிச் செம்பசும் பொன்னழகும்
கல்விக் கலைக்கழகக் கவின்பெறு பேராதனைச்
செல்வமே உன்னழகும் சேவடி யின் அழகும்.

## 56. கலைப்பண்பு நிறை தெய்வம்

இராகம்: காபி தாளம்: ரூபகம்

பல்லவி

ஞானப் பழநி நல்லருள் தருவான்
மோன மயிலின் மீதிலே வருவான்

அனுபல்லவி

கானத் தமிழில் கந்தன் புகழைப்
பாடப் பாடப் பரிந்தே அருள்வன்

சரணம்

பேரா தனையின் பெரும்பல கலைமலை
சீரா யமர்ந்து சிந்தனை தருவான்
காரா னைமுகன் களிக்குஞ் சோதரன்
பாரா ளுங்கலைப் பண்புநிறை தெய்வம்.

## 57. தமிழை மாந்தும் அழகு முருகன்

இராகம்: தேஷ் தாளம்: ரூபகம்

பல்லவி

அழகு முருகன் அருளை நாடு
அவனே தெய்வம் குகனைப் பாடு

அனுபல்லவி

பழகு தமிழின் பல்கலை யமர்ந்து
குழகன் குமரன் எழிலாய் அருள்வான்

சரணம்

புகழைப் பாட புனிதன் வருவான்
புகலிடம் தந்து இகமதில் ஆள்வான்
திகழும் பேரா தனைப்பல் கலையில்
மலையி லமர்ந்து தமிழை மாந்தும்

## 58. காட்சிதர வருவன்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

பாவலர் போற்றிடும் சிவபாலன்—கலை
நாவலர் ஏற்றிடும் நாதன்சிங் காரவேலன்

அனுபல்லவி

காவளம் மலியும் பேராத னைப்பதிக்
கோவில் கொண்டுபல கலைவளர்க்கும் முருகன்

சரணம்

கான மிசைத்திடக் கந்தன் மனமுருகி
கான மயிலின்மீது காட்சிதர வருவன்
கானக் குறத்திவள்ளி குஞ்சரியின் லோலன்
மோனமு ருகன்அவன் ஞானவ டிவேலன்.

## 59. ஆறுமுக அழகு

இராகம்: ஹிந்தோளம் தாளம்: ஆதி

பல்லவி

கண்ணில் தெரியுதையா கந்தனே உன்முகம்
காட்டும் அருள்சிரிப்பும் அழகொழுக எந்தன்

அனுபல்லவி

மண்ணில் மலையழகு மலியும் பேராதனைப்
பல்கலை மலைமீது பரிந்துறையுங் காட்சி

சரணம்

பச்சை மயிலின்மீது பாவை யிருவருடன்
இச்சையாய் நீயமர்ந்து இன்பத் தமிழ்பருகி
மெச்சிடு வேல்தாங்கி மேவி யருள்செய்யும்
அச்சிவ பாலனின் ஆறு முகஅழகு.

## 60. மங்களம் இசைப்போம்

இராகம்: மத்யமாவதி தாளம்: ஆதி

பல்லவி

மங்களப் பாட் டிசைப்போம்—என்றும்
எங்கும் அருள் பரப்பும்
எழில்முரு கேச னுக்கு

அனுபல்லவி

மங்கை வள்ளிகாந்தன் மாதுகுஞ் சரிநாதன்
பங்கய பாதசீலன் பல்கலையுறை தேவனுக்கு

சரணம்

செந்தமிழ் மாந்திடும் சிங்கார வேலவன்
வந்தணைந் தேகலை வளமலை யுறைபவன்
கந்தனைக் கடம்பனைக் கலியுக வரதனை
வந்தனை செய்தென்றும் வாழ்த்தி வணங்கியே.

## 61. எனையாள வருவான்

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

குமரேசன் வருவானடி—ஸ்கியே
குறமாதும் குலமாதும் புடைசூழ மயில்மீதில்

அனுபல்லவி

அமரேந்தி ரன்பணியும் ஆறுமு கன்திருப்
புகழ்பெறு பேராதனைப் பல்கலை மலையமரும்

சரணம்

இனிதான தமிழ்பாட வருவானே முருகேசன்
கனிவான பழநீயாய் கலைமேவி வந்தவன்
பனிமா மலைத்திருப் பேராத னைவளர்
வனிதா மணியெந்தன் வினையோட அருள்வேலன்.

## 62. அழகுமயில் வேலன்

இராகம்: பந்துவராளி தாளம்: ஆதி

பல்லவி

நற்பதம் அருள்வாய் அப்பா—குமரா
கற்பகத் தாயீன்ற கந்தா கடம்பாகுகா

அனுபல்லவி

அற்புதமாய் ஆடும் அழகுமயில் வேலா
பொற்புறு வள்ளியாம் பூங்கொடியின் லோலா

**சரணம்**

நின்பதம் தாராயோ இங்குநீ வாராயோ
நிதமுனைப் பாடிடும் நேயனைப் பாராயோ
அன்பன் எனக்குவேறு அடைக்கலம் யாருமுண்டோ
ஆறுமு கனேபேரா தனைவளர் முருகனே.

## 63. அபலையைப் பாராயோ?

இராகம்: சாமா தாளம்: ஆதி

**பல்லவி**

அபயம் என்றே கதறும் அபலையைப் பாராயோ
ஆறுமுகனே குகனே—என்றுமே

**அனுபல்லவி**

உபயபதம் போற்றி உள்ளன்புடன் துதித்தேன்
சமயசஞ் சீவியெனச் சந்ததமும் பணிந்தேன்

**சரணம்**

தேறுதல் மொழியேனும் கூறுவா ரில்லைஐயா
வேறுதுணை இல்லை வேலாயு தனேதேவா
ஆறுதல் தாராயோ ஆறுமு கத்தையா
ஏறு மயில்மீது ஓடிவா முத்தையா.

## 64. நிம்மதி இல்லையடி

இராகம்: கௌரிமனோஹரி தாளம்: ஆதி

**பல்லவி**

நேற்றவ ரைக்கண்ட நேரமெல்லா மென்மனம்
நிம்மதி இல்லையடி—தோழி

**அனுபல்லவி**

வேற்படை யுந்தாங்கி விரித்தாடும் மயில்மீது
வெற்றிமிகு பல்கலை கற்றவர் புகழ்மலையில்

சரணம்

பேராத னைப்பதி மேவிவ ளருங்கந்தன்
வாரானோ என்காதல் தீரானோ முருகையன்
சீரார்பல் கலையகம் சேர்கலை மலைக்குமரன்
தாரானோ தண்ணருள் மாமலர்ச் சோலையிலே.

## 65. அபயம்! அபயம்!! அபயம்!!!

இராகம்: ஸிம்மேந்திரமத்யம் தாளம்: ஆதி

பல்லவி

ஆறுமுகா அபயம் அபயம் அபயம் என்று
நூறுதரங் கூவினும் நின்செவி கேளாதோ?

அனுபல்லவி

வேறுமுகம் உள்ளதோ வேலனே நின்னருளில்
சீறுகொள்வது மேனோ சிறியேனைக் காத்தருள

சரணம்

பன்னிரு கண்ணிருந்தும் பாராமுகம் ஏனோகுஹா
நின்னிரு பதமலர் சென்னியிற் சூட்டாயோ
மின்னிடும் வேலேந்தி மிளிர்பேரா தனைவளர்
பன்னிரு கையனே பரிந்தெனைப் பாராயோ.

## 66. மையலால் வாடினேன்

இராகம்: தேஷ் தாளம்: ஆதி

பல்லவி

கூத்தபிரான் கொஞ்சும் குமரனே—என்னைக்
காத்தருள்வாய் குஹனே கந்தனே ஷண்முகனே

அனுபல்லவி

பூத்தமலர் சொரியும் புனிதப் பேராதனைக்
கார்த்திகே யனேஎன்னைப் பார்த்திடு வாய்தில்லைக்

சரணம்

நின்னருள் வேண்டினேன் நினதருள் நாடினேன்
கன்னல் தமிழில்உந்தன் கழலடி பாடினேன்
சொன்னதெல் லாம்மறந்து சொக்கிநான் கூடினேன்
வன்ன மயில்அழகா மையலால் வாடினேன்.

## 67. திருப்புகழ்

இராகம்: ஸிந்துபைரவி தாளம்: ஆதி

திருமுருக நாமம் அனுதினமும் போற்றி
திகழுதமிழ் பாடித் தொழுவோமே
தினகர னைக்கண்ட பனியெனவே எங்கள்
இருவினை கள்யாவும் களைவானே
மருவு நதிசூழ மலைகள் மலிநாடாம்
மணிகள் விளைபேரா தனைமேவும்
மலர்கள் சொரிசோலை கலைகள் வளர்சாலை
மகிழு கலையோர்கள் பணிகோயில்
அருளு தவிநின்று அழகு மயில்மீதில்
அனைய ருடன்கூடி எனையாள
அறிஞர் குடிசேரும் புலவர் புகழ்ஞானந்
தவழு மலைமீதில் அமர்வோனே
முருக குகமாலின் மருக குறமாதின்
கணவ எனையாளும் உமைபாலன்
வருக வெனஅன்பர் உருகித் தினம்பாட
அருள்சொரியும் ஞானப் பெருமாளே.

## 68. திருப்புகழ்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

வெற்றிவே லேந்தியே மயில்மீதில்
வித்தகன் வேலவன் முருகேசன்
எற்றிசை ஏற்றிடும் எழில்மேவும்
எம்பிரான் குஞ்சரி மணவாளன்

பற்றிடும் பல்கலை மலைமீது
பாலித்து நல்லருள் செயுவேலன்
கற்றிடும் மாணவர்க் கருளாளன்
கல்விப்பே ராதனைப் பெருமாளே.

## 69. திருப்புகழ்

இராகம்: மோகனம் தாளம்: கண்டஜம்பை

பல்கலையின் மலையில் உறைவோனே
பாலசுப்ர மணியா வரவேணும்
நல்கிடும்நின் னருளைத் தரவேணும்
நாடிவந்துன் பதமே பிடித்தேனே
மல்கிடுகண் ணீரைச் சொரிந்தேனே
மலரடிநான் வேண்டித் தொழுதேனே
கல்விமிளிர் பேரா தனைமேவும்
கருணைபொழி ஞானப் பெருமாளே.

## 70. காவடிச் சிந்து

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

காவடி தோளில் தூக்கிக் கொண்டு—மேலைக்
கந்தனை வழி யேகிக்கொண்டு—அங்கு
கோயில்-கொள்-பல்கலை
வாயில்-உள்ள-மலைக்
கந்தன்-புகழ்-பாட-என்றும்
எந்தன்-வினை-ஓட.

மாவடிவான கொடுஞ் சூரன்—அவன்
மமதை தொலைத்த சுகுமாரன்—எழில்
மேவும்-பேரா-தனைத்
தேவன்-ஆரா-தனை
செய்ய-இங்கு-வருவன்-குகன்
துய்ய-அருள்-தருவன்.

மூவடி யாலளந்த மூர்த்தி—போற்றும்
முருகன் பல்கலை யுறைகீர்த்தி

ஆறு-படை-வீடு
கூறு-புக-ழோடு
ஏழுபடை-வீடாய்த்-திகழும்-எங்கள்
ஈழவள-நாடு-புகழும்.

சேவடி தந்தெமை ஆளும்—செய்ய
செந்தில் குமர கந்தவேளும்
செந்த-மிழை-நாடி
வந்த-குகன்-ஓடி
குன்ற-மிளிர-அருள்-பொழியும்
நின்ற-எமது-வினை-அழியும்.

## 71. காவடிச் சிந்து

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

பேராத னைப்பதியில் நாமாரா தனைசெய்யப்
பேரின்ப வருள்தரும் முருகன்—கதிர்க்
கூரிதழ் வேலைத்தாங்கி வருவன்—என்றும்
தீராத வினையொன்றும் சேராத வண்ணஞ்செய்து
பாரில் பல்கலைச்செல்வம் தருவன்—மனத்
தேரில் பவனிவரும் ஒருவன். 1

செந்தமிழ்ப் பாட்டிஔவை தந்ததீந் தமிழுண்ண
வந்த முருகனருள் உருக்கும்—கண்கள்
சிந்த முருகபக்தி பெருக்கும்—திகழ்
கந்தவே ளின்பல்கலை தந்தக லைக்கோயிலில்
முந்து முருகனருள் புரக்கும்—அங்கு
வந்து அருள்மிளிர்ந்து சிறக்கும். 2

காவடி ஏந்தியன்பர் சேவலின் கொடிக்கந்தன்
சேவடி பாடிஆடும் ஆட்டம்—காணும்
தேவரின் அன்புக்கோடி கூட்டம்—மெல்ல
பூவடிப் பாதம்நல்கும் வேலனின் பாதம்நாடி
புண்ணியப் பாட்டொலிகள் கேட்கும்—அவர்
நண்ணிடும் அருள்வநது காக்கும். 3

பல்கலைக் கோயில்கொண்ட பன்னிரு கையனுக்குப்
பால்காவ டிகள்வருங் கோடி—அன்பு

வேல்விழி மங்கையர்கள் கூடி—வேலன்
நல்கிடும் பாதம்வெற்றி நாடிடும் பாதைகாட்டும்
பல்கலைச் சித்திதரும் பட்டம்—வாழ்வில்
நல்லவை யாவும்தரும் திட்டம். 4

பதங்கள்

## 72. காதலின் பலனோ?

இராகம்: காம்போதி தாளம்: ஆதி

பல்லவி

பல்கலை முருகனைப் பார்த்ததும் என்மனம்
மெல்லென அவன்பாற் செல்லுதடி—ஸகியே

அனுபல்லவி

கல்வியி னாற்பெற்ற காதலின் பலனோ?
வல்ல திருமுருகன் வதனவருள் அழகோ?

சரணம்

கண்டதும் என்மனங் களித்து மகிழ்ந்ததடி
அண்ட சராசரம் அனைத்தையும் வென்றேனடி
மண்டலந் தனிலே மலர்மலி பேராதனைக்
கொண்ட மலைக்கோயில் குடியிருக்கும் அந்தப்

பதம்

## 73. எப்படி நான் நினைப்பேன்?

இராகம்: தன்யாஸீ தாளம்: ஆதி

பல்லவி

இப்படிச் செய்வானென்று எப்படி நான் நினைப்பேன்
தப்பிலி ஒப்பிலி செப்புதற் கொண்ணாவேலை

அனுபல்லவி

அப்பனுக் கேபுத்தி செப்பிய தோடல்லாமல்
இப்புவி படைத்தானின் அச்செவி நோகச்செய்தான்

சரணம்

பிரமனைக் கூவிநின்றான் பிரணவம் என்னஎன்றான்
அரனவன் வந்து அங்கே ஆகாதா றுமுகாஎன்றான்
பிரணவப் பொருட்சொல்லிக் குருவடி வாகிநின்றான்
பெருமானைச் சீடராக்கிச் சிவகுரு நாதனானான்.

சுடும்பழம் வேண்டுமா சுடாதப ழமாஎன்று
அருந்தமிழ்ப் பாட்டியாம் ஔவையைக் கேட்டுநின்றான்
கருங்காலி கதலிக்கு நாணிட வேசெய்தான்
பருங்கலை மலையுறை பேராத னைமுருகன்.

பதம்

## 74. தவிக்குதடி என் நெஞ்சம்

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

காத்துக் காத்துநின்று கால்களும் நொந்ததடி
கார்த்திகேயன் பல்கலைக் கந்தன் வருவானென்று

அனுபல்லவி

பூத்துக் குலுங்கும்மலர்ப் பேராத னைப்பதியில்
ஏத்தும் மலர்க்காவில் எந்தன்முரு கையனைக்

சரணம்

கலைபயிலும் சாலைக் கந்தானை வழியேகி
அலைமோதும் மனத்துடன் அழகனை நோக்கிநின்றேன்
தலைவனைக் காணாமல் தவிக்குதடி என்நெஞ்சம்
மலைமீதி ருக்கும்அந்த முருகன் வருவானென்று.

பதம்

## 75. எத்தனை இன்பமடி?

இராகம்: ஸிந்துபைரவி தாளம்: ஆதி

பல்லவி

எத்தனை இன்பமடி—தோழி
முத்தவ ளைவில்எனை முருகன் அணைத்தபோது

அனுபல்லவி

சித்தம தில்ஒருவன் சிங்கார வேலன்அவன்
இத்தரை யிற்பல்கலை கற்றவ னின்காதல்

சரணம்

காதலர் சோலையிலே கந்தனைக் காத்திருந்தேன்
ஆதர வெல்லாம்நீயே ஆறுமு காஎன்றேன்
போதனை கள்நல்கும் பேராத னைப்பதியில்
நாதன் திருமுருகன் நங்கை எனைமருவ.

பதம்

## 76. ஒரு சேதி

இராகம்: திலங் தாளம்: ஆதி

பல்லவி

ஒருசேதி சொல்லாயோ ஓடிடும் முகிலே
பெருவாழ்வு தரும்பேரா தனைவாழும் முருகனுக்கு

அனுபல்லவி

வருவாய் முருகாஎன வளரும்பல் கலைமலை
அருகாய்க்கோ புரவாயில் அணுகியே நான்சொல்லும்

சரணம்

பருவக் குமரிஎனைப் பார்த்துப்பார்த்து மயக்கி
மருவத் துடிதுடித்தாய் மயில்வாக னாஎன்பாய்

திருவளர் பேராதனை திகழ்மலைக் கோயிலிலே
திருவடி சூட்டிஎனை அருக்ணை யவேசொல்லும்.

பதம்

## 77. இன்பம் தந்தான்

இராகம்: காபி தாளம்: ஆதி

பல்லவி

சேவல் கொடியுமேந்திச் செங்கையில் வேல்கொண்டு
ஆவல் ததும்பவந்தான் ஆறுமுகன் இன்பந்தந்தான்

அனுபல்லவி

தேவர் மலர்கள்தூவ துந்துபி தானொலிக்க
பாவலர் போற்றும்பேரா தனைப்பதிச் சண்முகன்

சரணம்

மயிலொடு மரகத மங்கையர் புடைசூழ
அயிலொடு வந்தெனை அணைத்து மகிழ்ந்தான்
மயலொடு தமிழிசை பாடி மயங்கிநின்றேன்
கயல்விழி நீர்சொரியக் கந்தன்எங் கோமறைந்தான்.

பதம்

## 78. கந்தனிடம் தூது

இராகம்: காமாஸ் தாளம்: ஆதி

பல்லவி

கந்தனிடந் தூது சொல்லடி—தோழி
வந்தணைந்து இன்பந் தந்து
சொந்தமுடன் எனை ஆளச்

அனுபல்லவி

மந்தமா ருதந்தவழும் மலர்கள்ம லியும்பதி
சுந்தரப் பேராதனை தந்தபல் கலைமலையின்

சரணம்

கந்தானை வழியேகி நீயே—எந்தன்
கந்தனைக் கண்டிடு வாயே—அவனை
வந்தாளு வாய்முரு கோனே—என்று
வாயார என்நிலை சொல்வாயே தோழி.

## 79. என்னடி நடந்தது?

இராகம்: ஸாவேரி தாளம்: ஆதி

பல்லவி

என்னடி நடந்தது என்மகளே உனக்கு
கன்னஞ் சிவந்துமேனி கனலாய்க் கொதிக்குதடி

அநுபல்லவி

வன்ன மயிலின்மீது வடிவேலுங் கையிலேந்தி
கன்னல் கலைபயிலும் கந்தனைக் கண்டாய்பின்பு

சரணம்

சந்தனச் சாந்துமணம் உந்தன்மே னியிலாச்சு
கந்தனணி கடம்புங் கூந்தலில் வரலாச்சு
செந்தமிழ் மொழிந்திடுஞ் செவ்விதழ் துடிக்குது
சுந்தரப் பேராதனை மந்தரக் கோயிலிலே.

கண்ணிகள்

## 80. துன்பம் மறந்தேனடி

இராகம்: பீம்பிளாஸ் தாளம்: ரூபகம்

கந்தனைக் கண்டதுமே—என்மனம்
காந்தமாய் ஆனதடி
எந்தனை யேஇழுத்துக்—காதல்
இன்பமுந் தந்தானடி. 1

முந்தாநாள் நான்தனியே—நல்ல
மமமகி நன்னாளில்

கந்தானை வீதியேகி—பல்கலைக்
கந்தனைக் கண்டேனடி 2

புள்ளி மயில்மீதில்—தங்கப்
புனிதவேல் கையிலேந்தித்
துள்ளி வரும்முருகன்—அழகில்
துன்பம் மறந்தேனடி 3

செவ்விதழ் வாய்மலரச்—சிரித்து
செந்தா மரைக்கண்ணால்
கவ்வியென் கண்களையே—காதல்
காந்தம தால்இழுத்தான். 4

நானும் மயங்கிநின்றேன்—ஷண்முக
நாதன் எழில்உருவில்
வானும் முகில்சொரிந்தே—என்னை
வாயார வாழ்த்திற்றடி 5

வேலைப் பிடிக்குங்கையால்—காதல்
சோலை வனத்திடையே
வாலைக் குமரியெனை—அணைத்தான்
வாளாது நாணிநின்றேன். 6

பாரா முகம்ஏனோ—ஜீவப்
பாவையே என்றேயன்பாய்
பேராதனை முருகன்—எனக்குப்
பேரின்பந் தந்தானடி. 7

## 81. எனக்கின்பம் தருவன்

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

**பல்லவி**

மயில்மீது விளையாடும் முருகன்—அவன்
அயில்ஏந்தி எனையாள வருவன்—புள்ளி

**அனுபல்லவி**

மயல்கொண்ட எனக்கின்பம் தருவன்—தமிழ்
பயில்பல கலைவளர் பதியாம்பே ராதனையில்

சரணம்

செங்கையில் வேலேந்திச் சிரித்தான்—குகன்
மங்கை எனைமருவ அணைத்தான்—சிவ
கங்கையுமை பாலன் கார்த்திகேயன்—குமரன்
அங்கையிலே உறுதி அளித்தவடி வேலன்.

மாவலி நதிபாயும் சோலை—அங்கு
காமலி மலைக்கோயில் சாலை—தன்னில்
பூமகள் மருகனாம் புனிதன்—எந்தன்
காதலைக் கவர்ந்திட்ட இனியன்—பச்சை

சேவலின் கொடியேந்தி வந்தான்—இரு
சேவடி சேர்அருள் தந்தான்—மிக
ஆவலாய் என்நெஞ்சம் கொண்டான்—குகன்
ஆறுமுகத் தால்நகை புரிந்தான்.

சரவண பவன்எந்தன் நாதன்—பாரில்
சகல கலைகளுக்கும் போதன்—நல்ல
வரமருளி வாழ்வும் தருவான்—இன்பம்
வாரிவாரி அள்ளித் தருவான்.

ஷண்முகன் என்னுயிர்த் தேவன்—சிவ
சக்தி சிவகாமி பாலன்—என்றும்
என்முகம் பார்த்தருள் சீலன்—வள்ளி
எழிலான குஞ்சரி லோலன்.

## 82. பல்கலை முருகன் கும்மி

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

சீரான நன்னகர்ப் பேராத னைமலை
 சேவற்கொ டிக்கந்தன் கும்மிபாட
காரானை மாமுகன் பாதார விந்தமே
 கன்னல் தமிழ்க்கும்மிக் காப்பாமே. 1

செந்தமிழ்த் தெய்வத் திருமுரு கன்அவன்
 வந்து பல்கலை யுறைந்தானடி
கந்தம லர்ச்சோலைக் கங்கைமா வலிசூழ்
 அந்தப் பேராதனை வந்தானடி. 2

பல்கலை முருகன் பாதம்பா டிக்கும்மி
பாங்கிய ரேகூடிக் கொட்டுங்கடி
நல்கிடும் நல்லருள் நம்மை யுய்யவைக்கும்
நாதனைப் போற்றியே கும்மியடி. 3

மேலைக் கந்தானை வழியேகிக் கலை
மேவிபல் கலை மலைமீது
வேலைப் பிடித்து விளங்கிடும் வேலனை
வேண்டியே கும்மி யடியுங்கடி. 4

குத்து விளக்கு நடுவேவைத்து அன்பாய்
கூடிக் கும்மி யடியுங்கடி
கத்தும் குயிலொடு கந்தனைப் பாடியே
கன்னிய ரேகும்மி கொட்டுங்கடி. 5

ஓராறு முகனைப் பாடுங்கடி நீங்கள்
ஓங்கார ரூபனைக் கூடுங்கடி
பேராத னைப்பதி வாழும் முருகனின்
பேரின்பக் காதலைப் பாடுங்கடி. 6

மாங்கனி வேண்டி மயில்மீ தில்வலம்
மானிலத் தைச்சுற்றி வந்தவனாம்
தீங்கடுங் கோபங்கொண் டாண்டி யாகிஔவை
தீந்தமிழிற் சாந்தி கொண்டவனாம். 7

ஓங்கார மந்திரத் துட்பொருளைச் சொல்லி
ஓங்கிச் சிவகுரு வானவனாம்
ஆங்காரப் பிரமன் அகந்தை தொலைத்த
ஆறுமு கன்வடி வேலவனாம். 8

செந்தமிழ்த் தேனமு துண்டவ னாங்கந்தன்
சேர்கலை யாவும் பயின்றவனாம்
அந்தக் கலைகளை உண்டிடப் பல்கலை
கொண்டபே ராதனை வந்தவனாம். 9

சூரர் மமதை தொலைத்தவ னாம்குகன்
சுப்ரமண்ய சிவன் மைந்தனுமாம்
தீரன் அவன்புகழ் தீந்தமிழிற் பாடித்
தோகையரே கும்மி கொட்டுங்கடி. 10

பாடுங்கடி எங்கள் பல்கலைக் கந்தனைப்
பண்புறவே கும்மி கொட்டுங்கடி
ஆடுங்கடி நீங்கள் ஆனந்த மாகவே
ஆறுமு கக்கும்மி அடியுங்கடி. 11

## 83. பல்கலை முருகன் விருத்தம்

முன்னமொரு முருகபக்தி
முதிர்ந்தநக் கீரனுன்னைக்
கன்னலொடு தேனமுதம்
கலந்தாற்றுப் படைபயிலக் காட்சிதந்தாய்.

சொன்னயமும் பொருள்நயமும்
சொரிந்தருண கிரிதமிழில்
சொன்னதிருப் புகழ்கேட்டுச்
செவ்விதழின் வாய்மலர்ந்து சிரித்துநின்றாய்.

இன்னமுதத் தமிழ்ஔவை
இனியவைகள் கூறியுந்தன்
பொன்னடிகள் ஏத்திநிற்பப்
புனிதவே லேந்தியருள் புரியவந்தாய்.

என்னருமை மொழிகேட்டு
இரங்கியருள் தாராயோ?
நன்னகர்பே ராதனையில்
பல்கலையின் மலைமேவும் ஞானமூர்த்தி.



## 84. பல்கலைக்கழக முருகன் பஜனைப் பாடல்கள்

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

குஞ்சரன் சோதரா ஜெயஜெய முருகா
குஞ்சரி லோலா குறமகள் நாதா

சரணங்கள்

ஷண்முக நாதா ஜெயஜெய முருகா
என்முகம் பாராய் பன்னிரு கையா

சுப்ரம் மண்யா ஜெயஜெய முருகா
சுந்தர ரூபா கந்தனே தேவா

கார்த்தி கேயா ஜெயஜெய முருகா
கதிர்வடி வேலா கருணா கரனே

சூரசம் ஹாரா ஜெயஜெய முருகா
சுந்தரி பாலா வந்தருள் நீதா

சிவகுரு நாதா ஜெயஜெய முருகா
சரவண பவகுஹ ஷண்முக நாதா

ஆரா வமுதே ஜெயஜெய முருகா
பேரா தனைப்பல் கலைவளர் முருகா

வேலா யுதனே ஜெயஜெய முருகா
கோலாண் டிடுந்தண் டாயுத பாணி

சரவண பவனே ஜெயஜெய முருகா
மரகத மயில்மிசை வருவாய் குகனே

கந்தா குகனே ஜெயஜெய முருகா
வந்தாள் கலியுக வரதா பரனே

அம்பிகை பாலா ஜெயஜெய முருகா
தும்பிக் கையன் சோதரா அருள்வாய்

பல்கலை மலையில் ஜெயஜெய முருகா
நல்கிடு வாய்அருள் நாதனே குமரா

வள்ளிம ணாளா ஜெயஜெய முருகா
புள்ளிம யில்மிசை துள்ளியே வருவாய்

செந்தமிழ்க் கந்தா ஜெயஜெய முருகா
பைந்தமிழ்ப் பல்கலை மலைவளர் குமரா

வருவாய் அருள்வாய் ஜெயஜெய முருகா
திருமால் மருகா அருமா தவனே

சேவற் கொடியோய் ஜெயஜெய முருகா
சேவடி தந்தெமை ஆண்டருள் பரனே

வேலும் மயிலும் ஜெயஜெய முருகா
வேண்டும் நமக்கே உறுதுணை குமரா

ஆறுமு கனே ஜெயஜெய முருகா
ஆறுதல் அருள்வாய் அம்பிகை சுதனே

பேரா தனையில் ஜெயஜெய முருகா
சீராய்ப் பல்கலை மலையுறை வோனே
மங்களம் அருள்வாய் ஜெயஜெய முருகா
கந்தனே சரணம் சரணம் சரணம்.

## 85. தாலாட்டு

இராகம்: நீலாம்பரி தாளம்: ஆதி

கண்ணிகள்

பேராதனைப் பல்கலைப் பெரும்பதி வந்தவனே
சீராட்டி யன்பர்தொழச் சிவபாலா கண்வளராய்
கந்தா முருகாகுஹா கடம்பனே கண்வளராய்
சிந்தாமணி யேசெல்வச் சீராளா கண்வளராய்
ஓராறு முகத்தேவா ஓங்கார உட்பொருளே
பேராதனைப் பல்கலைத் தேவாநீ கண்வளராய்
தெய்வத் தமிழ்மொழியே தேனமுதே கண்வளராய்
உய்ய வழியருளும் உத்தமனே கண்வளராய்
எங்கும் அருள்சுரந்து எங்களையே காக்கவந்து
தங்கும்பே ராதனையின் தலைவனே கண்வளராய்
முத்தமிழின் பெட்டகமே முருகனே கண்வளராய்
வித்தகர் போற்றும்கலைச் சித்தனே கண்வளராய்.

## 86. கிளிக்கண்ணி

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

கண்ணிகள்

சிந்தை மயங்குஞ்சோலைச்
செல்வப் பேராதனையில்
வந்தணைந்தே பல்கலை—கிளியே
வரையி லமர்ந்தானடி

தந்தைக் குபதேசித்த
தனைய னாறுமுகவன்
முந்தையின் பங்கள்தரும்—கிளியே
முத்தமிழ்த் தெய்வமடி

செந்தமிழ்த் தேனமுதம்
தேடிவந் தேபருகி
அந்தத் தமிழ்மதுவில்—கிளியே
அழகன் மயங்கிவிட்டான்

சுந்தரப் பேராதனை
தந்தபல் கலைமலை
வந்தணைந் தின்பங்கொண்டான்—கிளியே
வண்டமிழ்த் தேனையுண்டான்.

## 87. நிலாப்பாடல்

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

**கண்ணிகள்**

வட்ட முழுமதியே வெண்ணிலாவே—எந்தன்
வாட்ட மறிந்திடாயோ வெண்ணிலாவே
கட்டழகன் கந்தனிடம் வெண்ணிலாவே—நீஎன்
காதலைப்போயுரைப்பாய் வெண்ணிலாவே.

இத்தரை மீதினிலே வெண்ணிலாவே—கந்தன்
இருப்பான்பல் கலைக்குன்றில் வெண்ணிலாவே
முத்தனுக்கு என்நிலையை வெண்ணிலாவே—சென்று
முத்தமிழில் நீயுரைப்பாய் வெண்ணிலாவே.

சக்திசிவ பாலனவன் வெண்ணிலாவே—ஞான
சக்திவடி வேலவன்காண் வெண்ணிலாவே
பக்தியொடு நான்துதிக்கும் வெண்ணிலாவே—அந்தப்
பரிசுத்த நிலைசொல்வாய் வெண்ணிலாவே.

பேராதனைப் பதியில் வெண்ணிலாவே—கந்தன்
பெருங்கலைக் குன்றங்கொண்டான்
வெண்ணிலாவே
ஆராதனை செய்தேன் வெண்ணிலாவே—எந்தன்
அன்புமொழி கூறுவாயோ வெண்ணிலாவே.

## 88. பல்கலை முருகனுக்கு அரஹரோஹரா

இராகம்: தேஷ் தாளம்: ஆதி

கண்ணிகள்

பல்கலை முருகனுக்கு அரஹரோஹரா
பாலசுப்ர மண்யனுக்கு அரஹரோஹரா
வெல்கவெல்க வேலனுக்கு அரஹரோஹரா
வெற்றிவேல் முருகனுக்கு அரஹரோஹரா
குன்றிலாடுங் குமரனுக்கு அரஹரோஹரா
கொன்றசூர காலனுக்கு அரஹரோஹரா
ஆறுபடை கொண்டவர்க்கு அரஹரோஹரா
ஏறுமயில் வாகனர்க்கு அரஹரோஹரா
திருப்பழனித் தேவனுக்கு அரஹரோஹரா
விருப்புட னருள்பவர்க்கு அரஹரோஹரா
ஏரகக் குமாரனுக்கு அரஹரோஹரா
பேராதனை முருகனுக்கு அரஹரோஹரா
திருச்செந்தூர் வேலனுக்கு அரஹரோஹரா
அருட்செல்வந் தருபவர்க்கு அரஹரோஹரா
சோலைமலை அழகனுக்கு அரஹரோஹரா
ஞாலம்சுற்றி வந்தவர்க்கு அரஹரோஹரா
வள்ளிமண வாளனுக்கு அரஹரோஹரா
புள்ளிமயில் நேசருக்கு அரஹரோஹரா.

## 89. பஜன்

இராகம்: தர்பாரிகானடா தாளம்: ஆதி

பல்லவி

உள்ளம் உருகியே பாடு—குற
வள்ளி மணவாளன் வளர்கலை மலைநாடு

சரணங்கள்

தெள்ளுதமிழ் பாட வருவான்—இன்பத்
தேனென நல்லருள் தருவான்

மெள்ள அவன்பாதம் மேவியே சேர்ந்தார்க்கு
அள்ளக் குறையாத செல்வம்—வாழ்வில்
அன்றுசேரும் நாமும் உய்வம்.

பேராதனை மலை மேவி—மேலைப்
பெருங்கலைக் கந்தானை யேகி
ஆராதனை செய்ய அள்ளி அருள்தரும்
சீராளனாம் எங்கள் குமரன்—இந்தப்
பேராத னைக்கலை முருகன்.

## 90. கல்யாண முருகன் பஜன்

இராகம்: யமன்கல்யாண் தாளம்: ஆதி

பல்லவி

கல்யாண முருகனின் காட்சி—என்றும்
காண்பதே நம்விழி மாட்சி—பல்கலைக்

அனுபல்லவி

தெய்வானை வள்ளியாம் தேவியர் மருவும்
நல்லாறு முகன்கலை நாயகன் பேராதனைக்

சரணம்

தெய்வம ணங்கமழுந் தேனிதழ் தான்விரியச்
செய்யுங் குறுநகை செகத்தை மயக்கிடும்
உய்ய வழியருளும் உவந்து மயிலின்மிசை
கையதில் வேலேந்திக் கல்விப்பல் கலைமலைக்

## 91. பஜன்

இராகம்: ஸிந்துபைரவி தாளம்: ஆதி

பல்லவி

ஓராறு முகன்புகழ் பாடுவோம்—வினை
வேரோடு மாய்த்திடும் வேலவன் பல்கலை

### அனுபல்லவி

காராணை மாமுகன் சோதரன் சுந்தரன்
பேராத் ணைக்கலைக் கோயிலில் வந்தவன்

### சரணம்

நாமாவளி சொல்லிப் பாடுவோம் கந்தன்
பாதார விந்தமே நாடுவோம் வாழ்வில்
ஆதார மாய்வரும் தேவனாம் பல்கலை
நீதா வெனவந்து நல்குவான் பேராதனை.

### வேற்பாட்டு

## 92. பல்கலைக்கோயில் வளர்முருகா!

இராகம்: நாதநாமக்ரியா தாளம்: ஆதி

### கண்ணிகள்

பல்கலைக் கோயில்வளர் முருகா—வேல்வேல்
நல்கிடுவாய் நல்லருளை நாதனே முருகா

தீராத வினைதீர்க்கும் தேவா—வேல்வேல்
பேராத னைப்பதி மேவிவளர் குமரா

நீதான் நமக்கருள வேண்டும்—வேல்வேல்
ஆதாரம் வேறிந்த அவனிதனி லுண்டோ?

காவடிகள் கொண்டு அன்போடு—வேல்வேல்
கந்தானை வழியேகிக் கந்தனே வந்தோம்

சேவடிகள் தந்தருள வேண்டும்—வேல்வேல்
சேவற் கொடியேந்தும் சேவகனே முருகா

அப்பனே ஆறுமுக நாதா—வேல்வேல்
இப்பவே வந்தெமக்கு இன்னருளை நீதா

பாற்காவடி கொண்டு வந்தோம்—வேல்வேல்
பல்கலைக் கழகம்வளர் பரந்தாமன் மருகா

வேல்ஏந்தி நீவர வேண்டும்—வேல்வேல்
வெவ்வினைகள் வேரோடு வீழ்த்தியருள் நீதா

நின்பதம் நம்பினேன் தேவா—வேல்வேல்
துன்பமணு காதருளும் தூயவனே முருகா

காரரா திருப்பாயோ கந்தா—வேல்வேல்
பேரா தனைமலைக் கலைக்கோயில் கொண்டாய்

கருணைக்கு நீயன்றோ தெய்வம்—வேல்வேல்
அருளுக்கு மழையே ஆறுமுக நாதா

அன்பருக் கன்பனே வேலா—வேல்வேல்
உன்பதம் உவந்தருள் உமைமகிழ் பாலா

மங்களம் யாவும் அருள்வாய்—வேல்வேல்
குஞ்சரி குறமகள் கொஞ்சிடும் குமரா.

**நொண்டிச்சிந்து**

## 93. தமிழுக்குத் தெய்வம் கந்தன்

இராகம்: புன்னாகவராளி தாளம்: ஆதி

தமிழுக்குத் தெய்வம் கந்தன்—தெய்வத்
தமிழ்க்கந்தன் வினைநீக்கு வான்உமை மைந்தன்

அமிழ்தான தமிழின்பப் பித்தன்—அவன்
தமிழின்பப் பல்கலைக் கழகத்தின் சித்தன்

பல்கலை யாவுமே கற்றான்—கழகம்
நல்கிடு செந்தமிழ்ப் பட்டமும் பெற்றான்

செந்தமிழ்க் கந்தன் முருகன்—குகன்
வந்தபே ராதனைச் சுந்தரக் குமரன்

மஞ்சரிக் கோயிலின் நின்றான்—வள்ளி
குஞ்சரி யோடு மயில்மீதில் அமர்ந்தான்

தொண்டர்க் கருளைச் சொரிந்தான்—கந்தன்
அண்டரும் போற்றிட அருள்மழை பொழிந்தான்

சேவற் கொடியேந்தும் தீரன்—தமிழ்
ஆவற் கலைமேவி ஞானவேல் கொண்டான்

பாமலர் பாடிநாம் சூட்டி—அவன்
பாதார விந்தமே ஆதாரங் காட்டி

பூமலர்ச் சேவடி தொழுவோம்—கந்தன்
புகலிடந் தந்தெமக் கருள்தந்து காப்பான்

மங்களப் பாட்டொலி செய்வோம்—கந்தன்
எங்கணும் இன்பங்கள் இறைஞ்சுவான் முருகன்.

## 94. ஆனந்தக்களிப்பு

**ஓம்முருகா**

இராகம்: காபி தாளம்: ஆதி

**கண்ணிகள்**

ஓம் முருகா மால்மருகா நீவா
ஓங்கு கலைப் பேராதனைத் தேவா

பன்னிரு கையா பாலசுப்ர மண்யா
உன்னிரு மலரடி உறுதுணை ஐயா

வடிவேல் முருகா வரதா அருள்வாய்
கதிர்வே லவனே கந்தா கடம்பா

திருமால் மருகா தீனத யாபரா
வருவாய் மயிலில் வடிவே லுடனே

பல்கலை வளரும் சரவண பவனே
மலைமகள் மகனே மயில்வா கனனே

சரணம் சரணம் ஷண்முக நாதா
அரனவன் மகனே அபயம் அபயம்.

## 95. நாதன் பாதம் பணிவாய் பஜன்

இராகம்: சந்த்ர கௌண்ஸ் தாளம்: ஆதி

**பல்லவி**

நாதன் பாதம் பணிவாய்—ஷண்முக
நாதன் பாதம் பணிவாய்

**அனுபல்லவி**

வேதம் போற்றும் குணசீலன் ஷண்முகன்
பாதம் தந்துஅருள் பாலித்தாளும் குக

**சரணம்**

அழகுக் கலைகள்வளர் அமுத மலைகள்தவழ்
கழகப் பல்கலைமலை வளருந் திருமுருகன்
அழகன் குழகனவன் ஆறுமு கவன்பரன்
கலைகள் அருளிஎமைக் காத்திடும் ஷண்முக

## 96. பஜன்

**இராகம்:** ஸௌராஷ்டிரம் **தாளம்:** ஆதி

**பல்லவி**

கந்தன் கடம்பன் கதிர்வடி வேலவன்
எந்தனைக் காத்திடும் எழில்முரு கையன்

**அனுபல்லவி**

வந்திடு வான்அருள் தந்திடு வான்ஐயன்
தொந்தி விநாயகன் சோதரன் பல்கலை

**சரணம்**

திருவளர் பேரா தனைவளர் முருகன்
தீன தயாபரன் ஞான குருபரன்
மருவிடு பல்கலை போற்றிடுஞ் சீலன்
மயில்வா கனனாம் அயில்வடி வேலன்.

## 97. வெற்றிவேல்

**இராகம்:** ஹம்சத்வனி **தாளம்:** ஆதி

**பல்லவி**

வெற்றிவேல் வெற்றிவேல்
எத்திசையும் ஏற்றிடும்
எழில்வேல் அயில்வேல்

### அனுபல்லவி

பற்றிவிடும் வினைகளும் பாவந் தொலைத்திடும்வேல்
பல்கலை முருகனேந்தும் பண்புமிகு ஞானவேல்

### சரணம்

வெவ்வினைகள் தீர்த்திடும் வெற்றி வடிவேல்
கல்விமிளிர் பல்கலைகள் நல்கிடும் செவ்வேல்
செல்வியருள் சேர்க்கின்ற செந்தி வடிவேல்
கவ்வியெமை யேயிழுக்கும் காந்த வடிவேல்.

## 98. கோல மயில் கொடிச் சேவல்

இராகம்: சுநாதவினோதினி தாளம்: ஆதி

### பல்லவி

கலைத்தோகை விரித்தாடிக் களிக்கின்ற புள்ளிமயில்
மலைத்தேனைத் தருவள்ளி மான்கொண்ட பச்சைமயில்

### அனுபல்லவி

தலைத்தேவன் தமிழ்த்தெய்வம் தாங்கிவரும் நீலமயில்
குலைக்கனிப் பேராதனைக் கலைமலைக் கோயில்மயில்

### சரணம்

கொடியிலே கூவிமகிழ் குமரனின் சேவல்
கடிகமழ் பேரா தனைவளர் சேவல்
மிடியகற்றும் ஞானம் மிளிர்கொடிச் சேவல்
அடியர்மன மகிழும் பல்கலைச் சேவல்.

## 99. வாழி

இராகம்: மத்யமாவதி தாளம்: ஆதி

### பல்லவி

வாழிய வாழியவே—என்றும்
கோழிக் கொடிபடைத்த குமரன்பல் கலைக்குகன்

**அனுபல்லவி**

ஆழிசூழு மிலங்கை அழகுப்பேரா தனையில்
ஏழிசை பாடியன்பர் ஏத்தும் முருகன்கோவில்

**சரணம்**

கலைகள் பலவும் வாழி
கழகமும் வாழி வாழி
தலைவன் முருகன் வாழி
தேவசேனா வள்ளி வாழி

மலைகள் நிறைந்த பேரா
தனைநகர் வாழி வாழி
கலைஞர் கவிஞர் வாழி
கந்தன் அருளும் வாழி.

## 100. மங்களம்

இராகம்: சுருட்டி தாளம்: ஆதி

**பல்லவி**

ஜெய மங்களம்—நித்ய
சுப மங்களம்

**சரணங்கள்**

பல்கலை முருகனுக்குப் பாலசுப்ர மண்யனுக்கு
கல்விகலை வாழும்பேரா தனைநகர்க் கந்தனுக்கு
குன்றிலாடும் குமரனுக்கு குழந்தைமுரு கேசனுக்கு
என்றும்அருள் ஈசனுக்கு எழில்வடி வேலனுக்கு
ஞானமுத்து வேலனுக்கு ஞாலம்வலம் வந்தவர்க்கு
கானமயில் கந்தனுக்கு கலைக்கழக முருகனுக்கு.

**பேராதனைப் பல்கலைக்கழகத் திருமுருகன் கீர்த்தனைகள்**
**முற்றிற்று**

உ

# மாவைக் கந்தன் பக்திரசக் கீர்த்தனைகள்

## சி. வேலுப்பிள்ளை உபாத்தியார்

### சுப்பிரமண்யஸ்வாமி வணக்கம்

விருத்தம்

வார ணத்தவ னாதியர் வாழமே
வார ணத்தவு ணப்படை மாளவோர்
வார ணத்தையு யர்த்திய மாவைவாழ்
வார ணத்தடி யானை வழுத்துவாம்.

இராகம்: காமாஸ் தாளம்: மீஸ்ரம்

பல்லவி

கந்தஸ்வாமியைச் சிந்தித்துய்வாய் நெஞ்சமே—கோவிற்
கடவைஸ்தல நிதமும்முறை (கந்த)

அநுபல்லவி

வந்தடைந்தவர்க்கு வல்வினைமாற்றிடும்
வானாறுமு கம்பன்னிரு கரனாயிரு கண்முன்வரு
(கந்த)

**சரணங்கள்**

மாயப்ரபஞ்சப்பொய் வாழ்விதொன்றுந் நிலையாதே
—வீணாய்
மங்கையராசைவ லையிற்சிக்குண்டுலையாதே
தேயமுழுதிற்குந் தேவையாய்முன்னிற்குந்
தெய்வானைமு னோர்பெண்டொரு
தெய்வானைபி னேகொண்டருள் (கந்த)

ஆணவமும்மல முங்கடைத்தேறவிடாது—நாலைந்
தாறொடன்றின்னும ரும்பகையாறக்கூடாது
பூணரவன்பரி பூர்ணசுதன்தெரி
புகல்பெற்றிமை யவராறிய
பகல் வெற்றிகொண் மயிலேறிய (கந்த)

கோரமிக்கஏமன் கொண்டோடிப் போகமுன்னேறி
—ஐயன்
கோலத்தைத்தரிசித்துக் கும்பிட்டிதோசரண்சேறி
சூரைத்துரந்தபோர் வீரத்துயர்ந்தவோர்
துரைவேளொயின் மயில்போலொரு
பரைவாழ்கயி லையின்மேல்வரு. (கந்த)

மாதாபிதாஎத்தா தாதருவாரரைக்காணி—வல்லே
மாவையிற்போயேதுந் தேவையோசாமியைக்கேணி
யாதுந்தடைசொல்லார் யாதுந்தரவல்ல
இறையைக்குறு முனிகருடிய
மறையைக்கரு ணைக்கொடருளிய. (கந்த) 1

**வெண்பா**

புள்ளிமயி லேறும் புனிதா விழியகுற
வள்ளிமண வாளா வடிவேலா—உள்ளமுடன்
எப்பொழுதுங் கைதொழுவே னென்றுயர்தீர்த்
தாள்வாயென்
அப்பனே சுப்ரமணி யா.

இராகம்: காம்போதி தாளம்: மிஸ்ரம்

பல்லவி

அப்பனேயென் சுப்ரமண்யா
ஐயனேயெனை யாளுமேசாமி

அனுபல்லவி

இப்ரபஞ்சத் தப்பைமுந்தத்
தப்பவையிங் கெப்போதும்வந் (தப்பனே)

சரணங்கள்

பந்தப்பாவத் தொந்தத்தாலுட்
பாறியேவே சாறியாறா
வெந்துயர்ப்பட் டெந்தநாளும்
மெத்தவாடி வேகிறேனே (அப்பனே)

கானவேடர் கன்னிகைதெய்
வானைகூடு மன்னவாவுன்
காணவரும் ஞானக்கோலக்
காட்சிதாமீ னாட்சிபாலா (அப்பனே)

வையகமிங் குய்யவேநன்
மாவைநகர்க் கோவின்மேவுஞ்
செய்யமுரு கையனேயுன்
சேவடிதந் தாள்வடிவேல் (அப்பனே) 2

வெண்பா

மேவற் புதவடிவேல் விட்டவுண ரைத்தெறுமோர்
காவற் கடவுட் கருமருகா—மாவைநகர்க்
கந்தா முருகா கடிதிலெனை யாளவுமை
மைந்தா மயிலேறி வா.

''அவதார புருடன்'' என்றபடி

பல்லவி

மயிலேறி வருவாய்—அயில்
வாச அருணேச முரு
கேசா மயிலேறி வருவாய்

### அனுபல்லவி

அயனரி முதல மரருமடிதொழ (மயிலேறி)

### சரணங்கள்

ஆறுமுகமுமழ கானநல்விழிகளு
மபய வரத கரமாக—மிகச்
சீறுமழுவும் வேலுஞ் சேவலு மயிலுமாய்த்
திகழ் திருக்கோலமதாக—மணச்
செல்வியரிரு புறமாக ஒயிலாக—அதிவேக (மயிலேறி)

ஆலைவாய்க் கரும்பாயோ ரலைவாயிற் றுரும்பாய் நா
னலைகிறே னெனைக் கண்ணாற் பாராய்—நாளும்
அஞ்சலி செய்துன்றனைக் கெஞ்சுகிறே னுன்னடிக்
கஞ்சமதை யெனக்குத் தாராய்—சற்றும்
அஞ்சலென்றெனை நிதங்காராய்—தயைகூராய்
—துயர்தீர-(மயிலேறி)

மாறுகொண்டி கல்பகை யாறும் வென்றுனதொரு
ஆறுதல் பெறமனதார—திரு
நீறுகண்டிகை புனைந் தாறொரஞ்செழுத்தொடுன்
பேரை அஞ்சலியொடு கூறத்—திரு
மாவையை வலஞ்செய்தீடேறக்—கதியேற—அதிவீர—
(மயிலேறி)

பாரமிகும் ப்ரபஞ்ச பாதகமனந்தமும்
பரிதிமுன் பனியெனவோட—அந்த
காரமடர்ந்த பந்த பாசங்கடினந்தோறும்
கருடன் முன்பணியெனவாட—உந்தன்
பாத பங்கயங்க ணான்சூட—உன்னைத்தேட—
துதிபாட—(மயிலேறி) 3

---

### கலித்துறை

சரவணப் பொய்கையின் மூவிரு தாரகைத் தாயர்தருந்
திருமுலைப் பாலுணுஞ் செவ்வேள் பரமன் சிறுவனெமக்
கரண மென்றெந்த வகிலமுந் தந்த வறுமுகவன்
சரண மிரண்டு மறவாதவர்க் கொருதாழ்வில்லையே.

இராகம்: அமிர்தகல்யாணி தாளம்: அடதாளச்சாப்பு

### பல்லவி

தூவி மயிலின் மீதூருங்—கந்த
ஸ்வாமியைநாளுந் துதித்தன்புகூரும்
தூவி மயிலின் மீதூரும்

### அனுபல்லவி

தாவுஞ்சூரனைமாளச் சாய்த்தருட்டி றங்கொண்டு
தேவர் விண்ணுலகாளச் செய்குணக்குன்று (தூவி)

### சரணங்கள்

நாரணன் முதலோர்க்கதீதன்—தொல்லை
நான்மறைகளுந்தேடும் ஞானப்பிரக்கியாதன்
நாரணன் முதலோர்க்கதீதன்
வாரணமுயர்த்தவு தாரணநன்னீதன்
வள்ளி தெய்வானைகூட வாழுஞ்சமேதன் (தூவி)

செந்தினை யிடிக்காசைப் பட்டார்—அன்பர்
தேடிக்கொடுக்கு நைவேத்தியந்தனைத் தட்டார்
செந்தினை யிடிக்காசைப் பட்டார்
பந்தவினை கணீக்க பாரின் மாவையிலுட்கார்
பரமனைப் பூசியுங்கள் பழிவர வொட்டார் (தூவி)

நாளைத் துதிப்போமென்பீர் யாரும்—உங்கள்
நாளைக்கூற்ற னுண்டிதோ நணுகிறான்பாரும்
நாளைத் துதிப்போமென்பீர் யாரும்
வேளைக்கற்புதவடி வேலற் காளாகி நேரும்
விக்கினங்களைத் தீர்த்து மிகுகதி சேரும். (தூவி) 4

---

### கலித்துறை

கந்தனைக் கந்தக் கடம்பணி வேளைக் கடவுட்கங்கை
மைந்தனைக் கண்ணன் மருகனைக் கார்மயில்
வாகனனைச்
சிந்தனைக் குட்டெரி சித்திடத் தேடிநந் தீயவினைப்
பந்தனைக் கட்டறுத் தெந்துயர் தீர்த்தருள் பாலிக்குமே.

இராகம்: காபி தாளம்: ஆதி

### பல்லவி

மோ க்ஷானந்தத்தை நாடு—வேன்
முருகனை நிதந் தேடு ஓ! மனமே
மோ க்ஷானந்தத்தை நாடு.

### அனுபல்லவி

தாக்ஷாயணிதருஞ் சாமியைக்கூடு
சைவ சமயநெறி சார்ந்து நவாடு (மோக்ஷா)

### சரணங்கள்

சாலு முலகமிந்த்ர சால மென்றெள்ளு
தனி மயிலூர்பரன் சரணெனக் கொள்ளு
வேலுமயிலுந்துணை வேறெலாந் தள்ளு
மேவுவானேமனப்போ விளையும் வீண்சள்ளு(மோக்ஷா)

சுந்தர நான்மறை சொல்வதே சத்யம்
துவமுறுஞ் சரவண பவனடி நித்யம்
இந்திரனானாலு மென்ன! அநித்யம்
இகபரமுதவுநா யகற்குச் செய்துத்யம் (மோக்ஷா)

கண்டுழிமாயுமின் கடுத்ததித்திரேகம்
கந்தனைக் கொண்டுவினை கடத்தல் விவேகம்
மண்டு பிணியாயுடல் வருத்து மநேகம்
மாவையிலதற்கொரு மருந்துண்டுயூகம் (மோக்ஷா) 5

### வெண்பா

அல்லல்போம் வல்வினைபோ மன்னைவயிற் றிற்பிறந்த
தொல்லைபோந் தீராத் துயரம்போம்—நல்ல
வளமலியு மாவைநகர் வாழ்சுப்ர மண்யன்
கழலடியைக் கைதொழுதக் கால்.

இராகம்: பியாகு தாளம்: ஆதி

பல்லவி

நாதாவுன் பொற்பாதம் நம்பினேன்
இந்த நானிலத்தி லாதரவில்
லாமல் மெத்த வாடுகிறேன்
நாதாவுன் பொற்பாதம் நம்பினேன்.

சரணங்கள்

ஆதி சிவாகமத் தறிவரும் பொருளே
அடியவர்க் கணுகவொட் டாயகத் திருளே
கோதிவிட் டொளிரும்வேற் றுரையேயென் குருவே
துதிபுரிவே னானுன் கதியெனக் கருளே (நாதா)

அத்தியற்புதவடி வான வுல்லாசா
ஆடுமயி லேறிவிளை யாடு முருகேசா
சித்தமிக வந்தெனை யாட்கொள்ளும் நேசா
தில்லையம் பலத்துளாடுஞ் சிவன்றிருச் சேயா(நாதா)

வானுலகினை யந்த மகபதிக் கீந்தாய்
மாயமா மலையையும் வேரறத் தடிந்தாய்
ஈனவேடுவப் பெண்ணை யினிதென மணந்தாய்
எனையுவந் தருளுமம் பிகைதருங் குழந்தாய் (நாதா)

தாவறுஞ் சரவண வாவியில் வளர்வாய்
சம்ப்ரம மிகுமாவை யம்பதி யுறைவாய்
ஆவிக டோறுநின் றகிலமு மமர்வாய்
அரியயற் கரியவுன் றிருவருள் புரிவாய். (நாதா) 6

கலித்துறை

அட்டதிசையும் புகழ்வடி வேன்முரு காவெழில்கூர்
மட்டிமிர் மாலை யசைமணி மார்ப மகிழ்வொடுமா
விட்ட புரங்குடி கொண்டருள் வாயென் மிகுபிணிநோ
யெட்டுணை யுஞ்சகி யேன்றுயர் தீர்த்தெனை ரட்சிக்கவே.

இராகம்: தறுவார் தாளம்: அடதாளசாப்பு

பல்லவி

திருக்கடைக் கண்ணால்
பார்த் தெனை யாளுஞ்
சிவசுப்ர மண் யா.

அனுபல்லவி

பருப்பதக் கொடியுமை பாலாவுனடியிணைப்
பத்மம் பணியுமெனைப் பாலித்தருளுவாய்நீ (திரு)

சரணங்கள்

அறுமுக மிலங்கப்—பன்னிருகைமெத்
தழகாகத் துலங்க
குறுநகையொடு தங்கக் குன்டலங்க டயங்கக்
குலவுமாமயில் வருங் கோலநான் மறவேனுன் (திரு)

அந்தணர் புகழத்—தேவர் மாதவர்
வந்தடி பரவ
எந்தாய் தந்தைபோன்மாவை வந்தாளுன்றனைப் பூவைத்
தேத்துவேனெனைப் பாது காத்திடுவா யெப்போதும் (திரு)

வேதமஞ் சலிக்க—முனிவராசீர்
வாதந்தந் தொலிக்க
ஆதரவொடு வேடர் மாதுகுஞ்சரிகூட
அகிலமுநின்றெனை யாளுஞ்சண்முகனே (திரு)

பண்ணவர் பிழைக்கச்—சூரனாதிய
பகைவரைத் தொலைத்த
எண்ணருஞ் சிறைமீட்ட வுன்னாலென் றுயர்மாற்ற
வேலுமுன் றிருக்கையில் வேலுமொன் றிருக்கையில் (திரு)

சூர்க்கடல் பருக—வேல்விடுத்தவோர்
துய்யமான் மருகா
பார்க்கி லெனதுபாவந் தீர்க்க விதென்னவொரு
பாரமோ வரப்போகத் தூரமோ வுனக்கது (திரு) 7

**வெண்பா**

அத்தாவுன் றஞ்ச மலதென் றனையருள
வித்தா ரணியி லிலையெவரும்—நித்தமெனை
யாள்வடிவே லாறு முகவா வடியேனுன்
சேவடிக்கீழ் வாழவருட் செய்.

**இராகம்:** கல்யாணி **தாளம்:** அடதாளசாப்பு

**பல்லவி**

மாவைநகர்க் கோவில்வாழ்
தேவாநின் சேவடிக்கீழ்
வாழத்துணைசெய் கந்தஸ்வாமி (மாவை)

**அனுபல்லவி**

ஆவிகளுக் காவியா யகிலாண்டங்களினிறைந்
தருளுஞ்சண்முகாவெனை யாள்சரவணபவா (மாவை)

**சரணங்கள்**

வந்தனம் புரிதொண்டர் வாழ்வின்மகிழ் தயாளா
வாசவன் மகளைமுன் மணந்தபன் னிருதோளா
சந்தத மயிலேறிச் சாரிவரு மொய்யாரா
சாரதர் நந்திகணத் தலைவர்சூழ் தரும்வீரா (மாவை)

வாடாத நீபமலர் மாலையசையு மார்பா
வரநதிமைந்தா வானோர் வணங்குங் கிருபாகரா
கோடாத திரிசூலங் குலவுஞ் சிவகுமாரா
குன்றமெறிந்த வெற்றிக் குளகா வள்ளிமணாளா (மாவை)

தாரகையாறு தாய்மார் தருமுலையுண்ட பாலா
தையன் மீனாட்சியம்மை தந்திடுந் தண்டைக் காலா
சூரபதுமனுடல் துளைத்தசெங்கதிர் வேலா
சுப்ரமணியாதுதி தோற்றுமெய்ஞ்ஞான கோலா (மாவை)

---

8

**வெண்பா**

ஆடுமயி லேறுமுரு கையாவிண் ணாளிசுர
ரோடுகுடி யேறவரு ளும்பர்பிரான்—மாடிவரு

நஞ்சணியுங் கண்டர்சுத நமபாவுன் றஞ்சமிக
வஞ்சலென வந்தெனையாள் வாய்.

இராகம்: காமாஸ் தாளம்: மிஸ்ரம்

**பல்லவி**

தஞ்சமாயடிக் கஞ்சந்தந்தா ளையனே—மாவைத் தஞ்சமா
தலநின் றருள்சரவணபவ (தஞ்சமா)

**அனுபல்லவி**

தஞ்சமென்றவரை யஞ்சலென்றோர்தயை
தருவாயுன திருதாள்பணி
தமியேனுறு துயர்தீரொரு (தஞ்சமா)

**சரணங்கள்**

அஞ்சு முகத்தினர்க் காறுமுகந் தரும்வேலா—என
தப்பனே யொப்பில்லாத் தற்பரனே யுமைபாலா
அஞ்சுமுகன் றந்த வாறு முகத்தேவா
அயனைச்சிறை யதில்வைத்துல
கருளுத்தம வருள்வைத்தொரு (தஞ்சமா)

அஞ்சுக மென்மொழிக் குஞ்சரி வள்ளிமணாளா—அதி
யற்புதனேபரி சுத்தனே நித்யதயாளா
வஞ்சரஞ்சுஞ் சேவன் மயிலே றொய்யாரா
மறையைத் தமிழ் முனிவற்குரை
சிவசுப்பிர மணியத்துரை (தஞ்சமா)

இந்திரர் வானவர் சந்திர சூரியர் போற்ற—உல
கெங்கும் நிறைந்தருள் பொங்கச்சுரர் குடியேற்ற
அந்தம் யாதொன்றாலு மாகாதென் றோர்கால
மமராடிய வசுரன்மிகுதம ரோடறவடல் செய்குக
(தஞ்சமா) 9

**வெண்பா**

ஐயா முருகா வனைத்தும் படைத்தவருட்
கையா கடம்பணியுங் கந்தாவுன்—செய்யதிரு
பாதம் பணிவேனைப் பாதுகாத் துன்னருட்ப்ர
சாதந் தருவாய் சரண்.

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: மிஸ்ரம்

பல்லவி

கந்தாவெனை வந்தாடிருக்கோலம்
கண்கள்களிக்கநான் காணுவதெக்காலம் (கந்தா)

அனுபல்லவி

சந்ததமாவைவ திந்தருளும் முருகையா
தாவுமணிமயில் வாகனமேறித் தயங்குபன் னிருகையா
இந்திரர் வானவ ரேத்தி வணங்கிடும்
ஏகனே மாதுமை பாகனருளிய (கந்தா)

சரணங்கள்

அரியயன்கூட வறியொணா ததிதூரம்
அண்டிப் பணிந்திடுந் தொண்டர்க் கென்றால்வந்தங்
கருள்செய்வாய் நொடிநேரம்
சரவசரமுந் தந்ததயாபரா
சார்தமி யேற்குந்நீ தானலோதாபரம் (கந்தா)

சதுர்முகன்மறை விடைகொடான் மயலேறத்
தாக்கிச் சிருஷ்டித்த பாக்யமே யுன்னிழல்
தருகுவா யிளைப்பாற
வதுவைசெய்திடும் வள்ளிபங்காளனே
வந்தவினையறுத் துய்ந்திட வந்தருள் (கந்தா)

அம்பொன் மவுலியுங் குண்டலமு முகமாறும்
ஆறிரு கைகளும் வேலு மயிலுமென்
றடுத்திடிற் பவமாறும்
வெம்பிய சூர்ப்படை வீட்டிய வேற்படை
நம்பியே யுன்னையெந் நாளு மறவேனான். (கந்தா) 10

---

வெண்பா

ஆனை முகனுக் கருந்துணைவா வன்புமிகும்
வானவருக் குத்தலைவா வல்லவுணர்—கோனைச்
சமரிற் செயித்த தனிவேலா மாவை
யமர்சுப்ர மண்யா வருள்.

மோகலாகிரி என்றபடி

இராகம்: காம்போதி தாளம்: மிஸ்ரம்

பல்லவி

சோதி மாமயின்
மீதி லேறியென்
ஸ்வாமி நீவாராய்

சரணங்கள்

சோதியெனும் ப்ரபை யான சொரூபாவென்
தோஷமெல்லாந்தொலைப் பாய்சுடர்வேலோனே(சோதி)

ஆதி சிவன்சுத னாமறு மாமுகா
ஆதர வோடெனை யாள்புரி வாய்குகா (சோதி)

மாலை மணந்தரு மாவையி லேவரு
சீல மிகுமுமை பாலக னேயொரு (சோதி)

ஆரலெனும்பெயர்த் தாரகையாறுதாய்
மாரதுநேசகு மாரதயாபரா (சோதி) 11

வெண்பா

அண்டர்களைக் காய்ந்த வசுரர்கிளை வேரறவேல்
கொண்டுதொலைத் திட்ட குமரவேள்—
தொண்டனெனை
வாதைபுரி வல்வினைநோய் மாற்றி யருளவெனக்
காதரவுன் போலொர்துணை யார்.

இராகம். தோடி தாளம்: ஆதி

பல்லவி

ஆரெனக்குத் துணையையா—அந்த
அந்தரத்தோர் வந்துபணி
கந்தா நீயல்லாமல் வேறிங் (ஆரென)

அனுபல்லவி

மாருதப்ர வல்லியந்த மாவதன மாறியுய்ந்த
மாவைநகர்க் கோவில் வத்ததேவ வுனைப்போற்றகுந்த
(ஆரென)

### சரணங்கள்

ஆரணங்க ளேத்துதெய்வ வாரணப்பெண் மணாளனே
அந்தரங்கத் தைப்பரனுக் கருளிய தயாளனே
பூருவ வினைதொலைக்கும் புண்யபரி பாலனனே
பொன்மயின்மே லேறுமெங்க டன்மவடி வேலவனே
(ஆறென)

ஆண்டவ பொன்னம்பலத்திற் றாண்டவஞ் செய்தருளிய
ஆலமிடற் றையனுக்குப் பாலகாவிவ் வையகத்தில்
பூண்டபவம் போக்கறித வேண்டு தமியேற்குனது
பொற்பதந் தராயேலருட் டற்பரா நானென்ன
செய்வேன் (ஆறென)

முன்னோர்நாளிற் கிரவுஞ்சக் கன்மலைக்கீ றெய்தவிட்ட
கொன்னவில்வேற் படையையிங் கின்னமொரு
தரத்திலென்
னின்னலென்னு மலைக்குவிட் டென்னைமகிழ்
விக்கொணாதா
தன்னிகரில் லாததனிப் பன்னிரு கையனேயினி.
(ஆறென) 12

---

### வெண்பா

வேதனரிக் கெட்டா விழுப்பொருளே வல்வினையேன்
வேதனைநோய் நீக்கியருள் வேன்முருகா—பாதமிக
நம்பினருக் கேற்றசுக நல்குந் திருமாவை
யம்பதிவா றாறுமுக வா.

**இராகம்:** சங்கராபரணம் **தாளம்:** மிஸ்ரம்

### பல்லவி

ஆறுமுகம் பன்னிரு கரமொடு வருநாதா
நூறுமகந் தந்தவ னருள்பெற வருடாதா (ஆறு)

### அனுபல்லவி

நூறுயுகமு மழியாவசுரரை
நொடியிற்பொரு திமையோர்சிறை
விடுவித்திடு மெனையாடுரை (ஆறு)

### சரணங்கள்

அங்கை கூப்பி யடிபணியு மனைவரையும்
அரந்தை மாற்றி யனுதினமு மருள்வோனே
தங்க வேற்படை தாங்கிய கையோனே
தமியேனரை நொடியுந்துயர்
சகியேனிதோ வந்தாளுவை (ஆறு)

இறையைவேதத் துட்பொருள் சொல்லென்றோர்வன்
சிறையிலேவைத் தெனைவரையும் படைத்தோனே
மறைகள்தேடு மாமயில்வாகனா
மகிதலமதில் வருபவமினி
வாராதருள் தாராய்நனி (ஆறு)

திங்கள் சூடுஞ் சிவச ரவணோற்பவனே
தினமுமாவைச் சினகர நின்றருள்வோனே
கொங்குண் கோதைக்குஞ் சரிமணாளனே
கொன்றிடுநம னென்றெனதுயிர்
கொண்டாலுமம துன்றாள்பரம். (ஆறு) 13

---

### வெண்பா

சீல மிகவெனையாட் செய்முருகா நீபமலர்
மாலை யசையு மணிமார்பா—ஞாலமிகப்
போற்றுந் திருமாவைப் புங்கவநீ யென்றுயர்நோய்
மாற்றும் மயில்வாக னா.

சியால் மெட்டு தாளம்: ஆதி

### பல்லவி

மயின்மீதினில் வருவாய்—வைவேலா
மயின்மீதினில் வருவாய் (மயின்)

### சரணங்கள்

தயவாயொருதிருமா வையில்வாழ்துரையேவரந்
தருவாய் கிருபா கரனே (மயின்)

ஆலங்குடித்தபெரு மானன்றளித்தசுதா
அருமான் மருகா முருகா (மயின்)

ஈசன்றனக்குமறை பேசுமுனக்குமுறை
யிடுவே னிடரோ டிடவே (மயின்)

சூலம் பிடித்தயம தூதன் வருத்தும்போதுன்
றுணையா யுனதா ளிணைதா. (மயின்) 14

---

**கலித்துறை**

விண்ணாடு தீக்கிரை யாக்கிய சூரனை வேல்கொடதம்
பண்ணாறு மாமுக னைத்திரு மாவைப் பதியமருங்
கண்ணா யிரற்கருட் செய்முரு கையனைக் காணவெனக்
கெண்ணா யிரங்கண் படைத்தில னேயவ் விறையவனே.

இராகம்: பியாகு தாளம்: ஆதி

**பல்லவி**

கண்களிகூரவென் ஸ்வாமி—யுனை
யெப்போது என்றுரையே
யெப்போது என்குருவே
யெப்போது காண்பே னிப்பூமி.

**சரணங்கள்**

ஒண்கதிரொளிவிடு மொருவடிவேலா
உசிதசரிகமப தநீநடராஜா
ஓர்சுதனெனுமுரு கேசாசாமி (கண்)

சகிக்கருஞ் சுரர்சிறை தவிர்த்தொ ரனந்தந்
தயித்தியர் பொரவரைச் சணத்தில் வென்றிந்த்ரன்
றன்சுதைதனை மணந்தருள்சாமி (கண்)

மங்கல வாத்தியம் மறைநிறை தோத்திரம்
மறுவினை வேத்தியம் மாவையம் க்ஷேத்திரம்
மந்திர முறைந்தெனை யருள்சாமி (கண்)

புன்னகை யோடருள் பொழிமுக மாறும்
பன்னிரு கைமயிற் பவனியுலாவும்
இன்னருட் கோலமுமாக சாமி. (கண்) 15

---

**வெண்பா**

தேவர்களின் றேவா திருமான் மருகாநன்
மாவைநகர்க் கோவில் வருமுருகா—யாவருக்குந்
தந்தையென வந்தெதையுந் தந்துபரி பாலிக்குங்
கந்தவுமை மைந்தவெனைக் கார்.

இராகம்: அடாணா	தாளம்: மிஸ்ரம்

**பல்லவி**

முருகா வொருபோது முனைமறவேன்—குரு
மூர்த்த மாயிந்தமு கூர்த்தம் வந்தாளுவாய் (முரு)

**அனுபல்லவி**

தருநிறைமாவைத் தலநிதமுறை
சண்முகனேகந்த சாமியுமைதந்த (முரு)

**சரணங்கள்**

நீபமலர்ந்த நெடியமணி மார்பா
நேர்ந்தவெஞ் சூரனைக் காய்ந்த கிர்பாகரா
கோபதியைவிண் குடியேற்று மீஸ்வரா
குன்றமெறிந்த குமரகுருபரா (முரு)

பஞ்சபூதியங்க ளஞ்சுமலைந்தாலும்
பாரதனிற்பிர பஞ்சத்துலைந்தாலும்
அஞ்சம்பொடங்கச னஞ்சவெதிர்த்தாலும்
ஆகாமியங்களாட் கொண்டுதடுத்தாலும் (முரு)

ஆறுமுகமுமீ ராறுவிழிகளும்
அம்புயமுங்குலி சாயுதமும்வேலும்
சீறுமயூரமுஞ் சேவலுமால்பெற்ற
செல்வியர் மேவுந்திருக் கோலங்கொண்டருள் (முரு)

தந்தையுந் தாயுந் தமருஞ் சகோதரர்
தாமுமித் தாரணி தன்னினீ யேயன்றிச்
சாருந் துணைகள்வே றாருமில்லை யெங்கள்
தற்பரனே யோதுஞ் சத்தியமேயிது. (முரு) 16

---

**கலித்துறை**

மேவற் புதவடி வேலுங் குலிசமும் வெற்றிமிகுஞ்
சேவற் கொடியும் மயில்வா கனமுந் திகழ்தரநன்
மாவைப் பதியி லெழுந்தருண் மான்மரு காதமியேன்
பாவப் பிணிக்கொரு நீயே மருந்தென்னை பாக்கியமே

இராகம்: கமாஸ் தாளம்: மிஸ்ரம்

### பல்லவி

இந்தக் காயத்தை யேனுனக்கென் னெஞ்சமே—வேலுக்
கிறைவன்றனை நிதமுந்துதி (இந்த)

### அனுபல்லவி

கொந்தவிழ் சோலை குலவுநன் மாவையிற்
குடிகொண்டருள் குளகன்றிரு வடிகண்டன வரதந்துதி
—(இந்த)

### சரணங்கள்

பத்திருமாசங்கர்ப் பைக்குள்ளிருக்கும் பொய்க்கூட்டம்
—இந்த
பாருற்பவித் திட்டால் நாரிற்சுழல் பொம்ம லாட்டம்
மித்தையெனும்ப்ரபஞ் சத்தைநம்பாதன்பின்
மிகவந்தெனையாளுங்கதிர் வேல்வேலெனநாளுந்துதி
—(இந்த)

ஐம்புலமார் தருமொன்பது பீற்றற் பைத்தோற்றம்—நம
தாக்கையிற்சுவாச மடங்கிப்போனா லூசனாற்றம்
அம்புவி வாழ்விதொ ரந்தரமின்போலென்
றகநின்றிகபரமுந்தரு மமலன் பதகமலம்பணி (இந்த)

கூற்றுவன் வந்துயி ரேற்றிடும் போதோதிண்
டாட்டம்—மிகு
கூக்குர லோடுநாய்க் கூட்டநரிக்குக் கொண்டாட்டம்
ஈற்றில்யாதும்பய னில்லைநந்தில்லைவாழ்
இறைவன்சுதனெனையாளறு முகவன்பதநினை
நாடோறும்—(இந்த)

17

---

### கலித்துறை

வானுல காண்மக வானதை யாளவு மாயமலை
தானுறு தாவை ரோடற மாளவுந் தந்தவொரு
சானவி யாள்சுதன் மாவையில் வாழ்கந்த சாமியுனை
யானொரு போது மறவே னெனைவந் திரட்சிக்கவே.

இராகம்: காம்போதி தாளம்: ஆதி

பல்லவி

முத்தி தந்தருள்வாய்—கந்த
மூர்த்தி யேயுனக்கு நிதந்
தோத்திரஞ் செய்வேனுன்பத (முத்தி)

சரணங்கள்

பத்தியுடன் பாவலர்பா டித்துதிக்கு மாவையில்வாழ்
உத்தம மொய்ம்பிரா றுள்ள வத்தாவுன் னாதாரமல்லால்
நித்தமுன் பாதத்தை யன்பாய்த் துத்தியஞ்
செய்வேனுக் குன்போல்
இத்தலத் துண்டோ வேறோத வெத்தலத்துக்கும் மோ
நாதா (முத்தி)

சிற்பரன் கண்ணுதல்வந்த தற்பரா நீயருளாயேல்
இப்புவியி லரைநாழி தப்பியுயிர் வாழ்வதில்லை
அற்புதனே யாறுமுகத் துற்பவநான் மறைதேடு
நற்பொருளே கிரவுஞ்சக் கற்பகவே லெறிவேளே (முத்தி)

அஞ்சநடைக் கொஞ்சுகிளிக் குஞ்சரிமணா ளாவுனைத்
தஞ்சமென நாளும்வந்து கெஞ்சுகிறே னானுவந்து
கஞ்சனைச் சிறையில்வைத்த வஞ்சனக் கண்ணுமை
பெற்ற
மஞ்சனே குஞ்சரமுகத் தஞ்சுகரற் கிளையோனே (முத்தி)

அஞ்சுபுல மாறுமுனிக் கஞ்சிலொன்றின் மறைப்பொருள்
அஞ்சி லொன்றிற் கொடுத்ததாட் கஞ்சாவுனக்
கடைக்கலம்
நெஞ்சிற்றயை வைத்துனது செஞ்சரணென்றலை
வைத்துச்
சஞ்சித பவங்கடொலைத் தஞ்சலென்றருள்வாயிதம்
(முத்தி) 18

---

வெண்பா

பத்தியுட னாளும் பணிபுரியுந் தொண்டர்களைச்
சித்த மகிழ்ந்தளிக்குஞ் செவ்வேளே—யெத்திசையும்
வாசமிகுஞ் சோலைவளர் மாவையுறை வாய்தமியேற்
காசியுத வாறுமுக வா.

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

ஆசிதா என்னையாள்வே லாயுதா
ஆதிநாதா. (ஆசிதா)

சரணங்கள்

ஆசிதாவீசா வருள்புரிவாசா
அன்புசெய்வாய் முருகேசா வதிநேசா (ஆசிதா)

வாசப் பூஞ்சோலை மாவைப் பொன்சாலை
வாசஞ் செய்வாய் கந்தவேளே வந்திவ்வேளை (ஆசிதா)

ஆலைவாய்க் கரும்பா யலைவாயிற் றுரும்பா
யலைகிறேன் புவியினான் வம்பாய் மனவன்பாய் (ஆசிதா)

வல்பிணி நோயால் வாடுகிறே னேயான்
மனமுவந்தருள் புரிவாயே யென்னைநீயே (ஆசிதா) 19

கலித்துறை

வேதாவைக் குட்டி வியன்சிறை யிட்டு விதித்தகுரு
நாதா வுனைப்பணி யுந்தமி யேற்கொரு நல்லபிதா
மாதாவைப் போலருண் ஞானம் புகட்டி மகிழ்ந்துனது
பாதாம் புயமிது போதருள் வாய்கிரு பாகரனே.

இராகம்: சுருட்டி தாளம்: மீஸ்ரம்

பல்லவி

கருணைகொண் டென்னைக் காகிருபாகரா—உன்பொற்
கால்பணிகிறே னோய்பிணிதீர. (கருணை)

சரணங்கள்

சரணென வனவரதமுமுனைத் தாழென நிதமாளறுமுக
தற்பர வதியற்புதசிவ புத்திர னெனுமுத்தமகுண (கருணை

மரகதமணி மயில்வருமரி மருகாதிரு முருகாதுயர்
மங்கவிங்கு வந்துள்ளமி ரங்குமெங்கள் சாமியே (கருணை)

வாரக முலையாமெரனுமயி ராவதமருள் மாதொடுகுற
மங்கைதங்கு பங்கன்சுரர் பங்கமங்க வந்தாயே (கருணை)

மருமலர ணிதருமெழின்மணி மார்பா செகமாள் வாயுமை
மைந்த கந்தமாவையால யந்திகழ்ந்த வெந்தாயே (கருணை) 20

---

**வெண்பா**

சென்னிகளோ ராறுந் திகழ்விழியீ ராறுமருட்
பன்னிருகை வேலும் படைபிறவும்—மன்னுகுற
மின்னொடுதெய் வானைபுற மேவுதிருக் கோலமொடுன்
வன்னமயி லேறியென்முன் வா.

**இராகம்:** பியாகு **தாளம்:** மீஸ்ரம்

**பல்லவி**

வன்னமயி லேறியென் முன்னே
வருவாயென் ஸ்வாமி நீயே
யருள்வாயிப்பூமி. (வன்ன)

**சரணங்கள்**

பொன்னொளி காலு முன்னிரு தாளைப்
போற்றுவேன் வேளே
அன்னை தந்தையைப் போலுவந் தென்னை
யருள்வாயென் கோவே—வரந்
தருவாய் கண்பூவே. (வன்ன)

பற்றலர்புரம் பாவகற்கிடும்
பரமகுமாரா
வுற்றவர்க்கருள் வெற்றிவேலாயுத
மோங்கிய கையா—யெனக்
குதவிநீசெய்யாய். (வன்ன)

பண்ணவர்க்கிடர் பண்ணவுணர்க்குநீ
பாவித்தவேலை
பாவியேன்பவமீது மோர்முறை
பாவிக்கொணாதா—மாவைக்
கோவிற் கணாதா. (வன்ன)

துய்யனேகந்த ஸ்வாமியேயுன்றன்
சுக்ரவாரத்தைச்
சொன்முறைதவ றாதனுட்டிக்குந்
தொண்டனைக் காரா—யுறுந்
துயர்களைத் தீராய். (வன்ன) 21

---

வெண்பா

அன்றமரர்க் காக வருஞ்சிறைமீட் டோர்சுடர்வேல்
குன்றுருவத் தொட்ட குருநாதா—இன்றென்னைச்
சார்துயர்நோய் பாவத் தளைகளறுத் தாளவெனக்
கார்துணைவே றாறுமுக வா.

ஜியமதறேமீறே என்றபடி

பல்லவி

சோதிவடிவேன் முருகையனே நீதுணை
ஐயனே நீதுணை ஐயனே நீதுணை
ஐயனே நீதுணை ஐயனே நீதுணை. (சோதி)

சரணங்கள்

ஆதிபரமேசனி னன்புளகுமாரசாமி
ஐயாவெனையாட் செய்யாய்தினமே (சோதி)

தாரகை யாறுதாய்மார் தந்தசரவணா சாமீ
தருவாயிகமும் பரமுமிகவே (சோதி)

கானக்குறவள்ளிதெய் வானைமணவாளாசாமி
கந்தாதிருப்பா தந்தாவிருப்பாய் (சோதி)

ஏறுமயி லேறிவந் தென்றுயரந் தீர்ப்பாய் சாமி
எயில்சூழ்திருமா வையின் மான்மருகா (சோதி) 22

---

வெண்பா

மாவைத் தலமமரு மான்மருகா வுன்னடியைப்
பூவைத் தனவரதம் போற்றுகிறேன்—சேவற்
கொடியோனே குன்றக் குறத்திமண வாளா
வடியேனைக் கார்முருகை யா.

இராகம்: தோடி தாளம்: மீஸ்ரம்

பல்லவி

ஏழையைக்கார் கண்பாரையா
கந்தசாமி நீயிவ். (ஏழையைக்)

அனுபல்லவி

வேளைக்கிரங்கும் விசாகாசராசரம்
மீதுற்றவெங்கள் மெய்யானபராபரம் (ஏழையைக்)

சரணங்கள்

நீடிப்ரபஞ்சம் பொல்லாதது
நிசமாயிக்காயம்
நீரிற்குமிழி நில்லாதது
தேடித்தீராரோகந் தீர்க்குங்கிர்பாகரஞ்
சேடத்ததிகாரஞ் செல்போதுன்றாபரம் (ஏழையைக்)

தேவரைச் சிறையின் மீண்டவா
நீயலதென்றுயரைத்
தீர்ப்பாராரென்னை யாண்டவா
ஏவரையுமிரட் சிக்குமொரேதேவா
ஏமனெனையணு காமல்வைத்தாள்ஜீவா(ஏழையைக்)

கோலப்பவானி பாலகா
மாவைக்கோவிற் கடவை
கோவில்கொண் டிருக்கும்வேலவா
ஆலத்தையுண்ட வரற்குமைந்தாமறை
மூலத்தைக்கும்ப முனிக்குத்தந்ததுரை (ஏழையைக்) 23

---

கலித்துறை

தேவர்க் குறுகண் செயுந்தா னவரைச் செயித்திமையோர்
கோவைச் சுயவிண் குடியேற்றி வைத்த குகன்வடிவேற்
சேவற் கொடியு மயில்வா கனமுந் திகழ்தரநன்
மாவைத் தலநின் றருள்கந்த வேளை வழுத்துவமே.

இராகம்: பியாகு தாளம்: ஆதி

பல்லவி

சாமியேயிப்போது தந்தருளுன்
றாளிணைப்போது (சாமியே)

சரணங்கள்

தோமில் வளமாவையிற் றுரையேயுனை யானென்றுந்
தொழுவே னெனையருள் சுடர்வேலவனே (சாமியே)

குன்றுருவ வேல்தொட்ட குமரகுருவே குணக்
குன்றேயெனதக நின்றாள்குகனே (சாமியே)

தோகைமயின் மேல்வரும் ஸ்வாமியென்னை யுன்னடித்
தொண்டாய் வரவருள் கொண்டாள்பரனே(சாமியே)

நாதன் றனக்கோரரும் போதம்புகட்டுங் குரு
நாதாவுனைவிட வேறாதரவார் (சாமியே) 24

கலித்துறை

ஆல மயின்ற வரன்சுதன் கூற்ற னுப்பவருங்
கால னெனையணு காமலெக் காலமுங் காக்குமலர்
மாலை திகழறு மாமுகன் மாய மலைக்குவிட்ட
வேலு மயிலுமுண் டேதமி யேற்கொரு மெய்த்துணையே.

இராகம்: பியாகடை தாளம்: மிஸ்ரம்

பல்லவி

வேலுமயிலு மேன்
மேலுந் துணையல்லால்
வேறுந் துணைகளுண்டோ (வேலு)

சரணங்கள்

காலகாலன் பெற்ற கண்மணியே யுற்ற
கடுவினைபொடி படநொடிவரு
கந்தாவுமை மைந்தாவொரு (வேலு)

ஆர்கலி யஞ்சவிண் ணோர்கலி மிஞ்சவெண்
ணறுமசுரர்க ளழிதரவயி
லெறிதருசிவ குருபரகுக (வேலு)

முண்டக மேலிருந் தண்டங்களைத் தந்த
மூவாமுழு முதல்வாவறு
முகவாவெகு தயவாய்வரு (வேலு)

மூவர்முறைவரு மாவையுறைதரு
முருகாதிரு மருகாகதி
மூழ்கப்பவ மாளத்திதி. (வேலு) 25

---

வெண்பா

ஆனைமுதற் சிற்றெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்
போனமளித் தென்றும் புரக்குமொரு—சானவியின்
மைந்தவெழின் மாவை வருமுருகா வென்றனையு
முய்ந்திடவாட் கொள்வா யுவந்து.

இராகம்: தன்னியாசி தாளம்: ஆதி

பல்லவி

அரிதிருமருகனின் றிருவடிமறவா
தன்பாயிருமனமே. (அரி)

அனுபல்லவி

கரிசனையுடனன வரதமுமெனையா
ளொருதிருமுருகனென் றுலகெலாமடிதாழ் (அரி)

சரணங்கள்

தருமதயாள தயாபரபோதன்
சனனமரணமறத் தவிர்த்திடும்பாதன்
பரமகுமாரனெ னும்ப்ரபுநாதன்
பாததொண்டுகள் பணித் தெதையுஞ்செய்நீதன் (அரி)

கற்பகவிடுமொரு கதிர்வடிவேலன்
கடியவினைகடொலைத் திடுமனுகூலன்
அற்பகறனைநினை யார்க்கொருகாலன்
அடிபணிந்தவர்களுக் கருளுஞ்சுசீலன் (அரி)

ஆதிபன்மதிமுத லமரருக்கீசன்
அசுரரைச்செயித்திமை யவர்க்கருணேசன்
ஓதருங்குறுமுனிக் கருளுபதேசன்
ஒப்பின் மாவையிலென்று முறையுஞ்சர்வேசன் (அரி)
26

### கலித்துறை

ஆதர வுன்றிருப் பாதம லாதகி லந்தனில்வே
றேதுள தென்றுயர் தீவினை யாவது மிங்ககல
மாதய வாயெனை யாளறு மாமுக மாசில்வரம்
போதிது நீதரு வாய்திரு மாவையிற் புங்கவனே.

இராகம்: கமாஸ் தாளம்: ஆதி

### பல்லவி

வா ஏறுமயின்மிசை யறுமுகவா
எளியேனுக்கிதோ வருடா
வா ஏறுமயின்மிசை யறுமுகவா (வா)

### அனுபல்லவி

கூறுமதில்கள்புடை குலவியமாவைநகர்க்
கோவில்வாழுமெங்கள் குமரகுருவேயிதோ (வா)

### சரணங்கள்

சேவலுயரமயின் மேவும்புனிதவடி வேலா
வடிவேலா—வுன்றன்
றெரிசனமடைவதெத் தினமருள் புரியுமைபாலா
வுமைபாலா
தேவர்க்கிடர்செய்தயித் தியரைச் செயித்தவரும்
தேவஞானகுண சீவதயாபரனே. (வா)

பிறவிவெயிலினிளைப் பாறவுன்பாத நிழல்தாராய்
நிழல்தாரா—யுன்றன்
பேசற்கரிய பெருஞ் சாயுச்சியமெனுங்கதி சேராய்கதி
சேராய்
மறைகள்புகழுமரு மானுதல்விழிதரு
மாசினேசமுரு கேசராசதுரை (வா)

பாசங்கலங்கமன நேசந்துலங்கவருள் வாயேயருள்
வாயே—யுன்றன்
பதுமபீடிகையென் னிதயமாகக்கொள்ளு வாயே
கொள்ளுவாயே
வாசக்கடம்பமர்பு யாசலனேதிகழ்
வானைசூடியபெம் மானேவானவனே. (வா) 27

### வெண்பா

செச்சை யணியுந் திருமார்பா தேடினரை
யச்சமறக் காக்கு மருண்முருகா—முச்சகமுங்
கைகுவிக்கு மாவைநகர்க் கந்தாவென் றீவினையைக்
கொய்கதிர்வேற் கொண்டாள் குகா.

இராகம்: சுருட்டி தாளம்: மிஸ்ரம்

### பல்லவி

தோகைமயின் மேலேறி வருகுவாய்
கந்தஸ்வாமி யுன்னைத்
துதிசெய்வேனுக்குன் பதவி தருகுவாய். (தோகை)

### அனுபல்லவி

மாகமளவுமதில் கொண்மாவைப்பதி
வந்துமகிழ்ந்தரு ளெந்தைசிவகுக
வந்தனமிகத் தந்தனன்பிரம்ம
வர்த்தக பர்வத பத்தினி மைந்தனே (தோகை)

### சரணங்கள்

அடியவர்க்கிதங் கொடுக்குமிங்கிதலோலா
அண்டர் வேண்டிப்பணிய
வசுரரைத்தொலைத் தருளலங்கிர்தவேலா
முடியுடைத்தடங் கிரிதுளைத்தோனே
மூலகாரண னேகிருபாகர
மூர்த்தியேயருட் கார்த்திகேயந்நன்
முத்தமிழுத்தம வித்வசிரோன்மணி (தோகை)

குறுமுனிக்கருளிய திருமுருகேசா
குறமானைத் தழுவிக்
கொளமுன்னவனைக் கருதிபமயினேசா
குறைமதிபுனைந் தோன்மகனேபுரு
கூதனைவிண்குடி யேற்றிவைத்தவனு
கூலனேகுண சீலனேவண்ணக்
குன்றுதொறாடுங் குமரகுருபரா (தோகை)

மருமலர்வதிந் தருள்சரவணபவனே
குல்லைமா லையினறு

மணங்கமழ்ந்தொளி விளங்குநீண் முடியினனே
சரிகமபதநீதரும் நாரதன்
றந்தமகந்தன்னில் வந்ததகருந்துஞ்ச
சாமியேதொட்ட நேமிநீரட்ட
தற்பரநித்ய தயாபரசண்முகா. (தோகை) 28

வெண்பா

ஆரார்க்கும் பொல்லா வருந்தீ வினைநோயாற்
றீராத வெத்துயருந் தீருமே—நாரிதரு
மைந்தா மகத்வ வடிவேலா மாவைநகர்க்
கந்தா வெனத்தொழுதக் கால்.

இராகம்: துசாவந்தி தாளம்: ஆதி

பல்லவி

கந்தாவுனக்கொரபய முன்பாதாரவிந்
தந்தாவெனக்கிச்சமயம். (கந்தா)

அனுபல்லவி

இந்தார்முடித்தசடை யைந்தானனத்தனுடை
மைந்தாவிண்டா வெயில்சூழுஞ்
சந்தாரும்மாவையில் வாழும் (கந்தா)

சரணங்கள்

குன்றுருவ வேல்விடுத்தவா—அசுரர்குலங்
கொன்றுசுரர்க்கூர் கொடுத்தவா
என்றுமுனைநினையு மேழைக்கொருதுணையு
மில்லையிக்கார்ந்த மொழிகொடு
குல்லைத்தாரேந்தி யொளிவிடு (கந்தா)

புள்ளிமயின் மேனடித்தவா—புல்லியகுற
வள்ளியை மணமுடித்தவா
வெள்ளிமலையுதித்த தெள்ளுமலைகுடித்த
வேலாவிளங்கு சதங்கைக்
காலாபொன்னின்குலிசங்கைக் (கந்தா)

முன்பயனைச் சிறையிட்டவா—குறையிரந்த
பின்பரனுக் காகவிட்டவா
அன்பொடெமைப் படைத்த வறுமுகவாறடைத்த
ஐயன்முன் பிரணவமருள்முரு
கையன் பன்னிரு கரமொடுவரு. (கந்தா) 29

### கலித்துறை

கந்தாவுன் றஞ்ச மெனவிரந் தாரைக் கருணைமிகத்
தந்தா தரிக்கு முருகா வுனைச்சர ணென்றுநிதம்
நொந்தா வலிக்குந் தமியேற் குறுதி நுவன்றிருபா
தந்தா வளமிகு மாவையில் வாழ்சிவ சண்முகனே.

### இந்திரசாப மெட்டு

### கண்ணிகள்

சாமியிந்தத் தருணம்வந்துன் சரணமேதாராய்
சஞ்சலந்தீர்த் தஞ்சலென்பாய் சரவணபவா

வாசநீப மாலைமார்பா மனமிரங்காயேல்
வையமேல்யா னுய்யவேறு வழியேதென்கோவே

ஆறுமுகம் பன்னிருகை யபயவரத
மாகவந்த னுக்ரகஞ்செய் யாயயனார்தம்

தெய்வலோகம் காத்தவேதா திபனேயென்னாதா
தீவினைவா ராமற்கார்தெய் வானைசமேதா

கதிர்வைவேலு மயிலுமேயென் கருத்திலுண்டையா
காதலாயுன் கதிதந்தாளக் கருதாய்கந்தையா

மங்கலமிர் தங்கமதிர் மாவையம்பதி
வாசநிர்த்த ராசபுத்ர வழங்குவேன்றுதி. 30

---

### கலித்துறை

மேதா வியர்புக ழுந்திரு மாவையின் மேவுகுரு
நாதா வகில சராசர முந்தரு நற்கருணைத்
தாதா கடப்ப மலர்த்தொடை யாயுனைச் சந்ததமும்
பாதார விந்தம் பணிவே னெனைப்பரி பாலிக்கவே.

**இராகம்: காபி** **தாளம்: மிஸ்ரம்**

### பல்லவி

நெஞ்சே நிதந்துதி யுன்றன்
நேசன்றிருமுரு கேசன்றருங்கதி. (நெஞ்சே)

### அனுபல்லவி

நஞ்சணிகண்டற்க ருஞ்சுதன் தொண்டர்க்கஞ்
ஞானமகற்றுமெய்ஞ் ஞானவரோதயன் (நெஞ்சே)

### சரணங்கள்

அந்தவரியும யனும்பதுங்கிட
ஆரும்விண்ணோர்கள ருஞ்சிறைக்குட்பட
ஆணைசெய் சூரனழியச் சமரில்வென்
றாயிரங்கண்ணன்விண் ணாளவைத்த பரன்(நெஞ்சே)

கங்கைகுமாரன் கடம்பமர்மார்பினன்
கார்த்திகை பாலன்கண் கண்டபராபரன்
மங்கையுமைக்கு மகன்றிருமால் பெற்ற
வள்ளி தெய்வானைக்கு வாய்த்த மணவாளன்(நெஞ்சே)

உன்னதமான வொளிகொள் வடிவேலன்
ஓங்கியசேவ லொடுமயில் வாகனன்
பன்னிரு மொய்ம்பு படைத்த வறுமுகன்
பாரினின் மாவைப் பதியி லுறைகுகன் (நெஞ்சே) 31

---

### வெண்பா

ஆறு முகவா வடியேன் படுதுயரைக்
கோறல் புரிவாய் குருநாதா—மாறில்
திருமாவைக் கோவிற் றிருமுருகா நாயேன்
கருமாளத் தாவுன் கழல்.

**இராகம்:** துசாவந்தி **தாளம்:** ஆதி

### பல்லவி

கந்தாவிரக்க மில்லையோ
மாவையில் வாழுங்
கந்தாவிரக்க மில்லையோ (கந்தா)

### அனுபல்லவி

கந்தாதிருவுளம கிழ்ந்தாரருள் மிகச்சி
றந்தாதரித் திடர்தீர்நதி
மைந்தாமதித் தருளாய்கதி (கந்தா)

சரணங்கள்

உம்பராரையுந் தேடாமலே—தினமுமுனை
நம்பினேனைக் கைவிடாமலே
நம்பரா விசாகாநித நம்பினர் சகாயாநீப
நாறும்புயா சலனேமயி
லேறும் வேலாயுதனேயருள் (கந்தா)

தீதாரனந்த மவதா—ரமுமறுத்துன்
பாதாரவிந்த நிழல்தா
வேதாதிப காருண்ய நாதாதி சயபுண்ய
வேளேவிண் ணோராரரசேபெரு
மாளேயென் னேசதயாபர (கந்தா)

குற்றமகார் செய்தாராயினும்—பெற்றாராருந்தம்
பற்றைவிடா ரொருபோதிலும்
சிற்றடியே னென்னபிழை செய்யினும் பொறுத்தென்
னுள்ளே
சீர்ஞானந் தந்தருளரிமரு
காநீவந்தென்றுயர் பரிகரி. (கந்தா) 32

---

வெண்பா

வானோர் சிறைமீள மாயமலை யோடவுணச்
சேனையெலா மாளச் செயித்தவடி—வேனாதா
வென்னைநிதந் தற்காத் திரட்சிப்பாய் மாவையினின்
றின்னறவிர்த் தாளீஸ் வரா.

இராகம்: இந்துஸ்தான் மெட்டு தாளம்: ஆதி

பல்லவி

மாமயிலேறிமுன் பாய்வருவாயணி
மாவையிலேயென்றும் வாழ்முருகேசாநீ (மாமயி)

சரணங்கள்

தேமொழிவள்ளிதெய் வானைசமேதா
சித்தமிரங்குமே ஜெகநாதா
பூமலர்ப்பாதம் போற்றுவனானிதோர்
பொல்லாநோய்தீர நல்லருட்செய்குவாய் (மாமயி)

தொண்டர்கட்குரிய சுகமருட்புரியும்
துய்யனேபன்னிரு கையனே
அண்டருக்கரிய வருட்பெருந்துரையே
அடிபணியுநாயேற் கருட்புரிகுவாயே (மாமயி)

மாமறைநூலா மகத்வசெங்கோலா
மகபதிக்கருள்புண்ய வடிவேலா
தாமதமாகா தோர்தமியேற்குன்
றயைகிடைக்கவேணுஞ் சாமியுன்னடைக்கலம்(மாமயி

பாரினிலேதமி யேனுறுமாதுயர்
பாராயோ வினைதீராயோ
காரணனேபரி பூர்ணனேதிருக்
கார்த்திகே யாவுன்னை யேத்துவேனான்வன்ன.
(மாமயி) 33

---

வெண்பா

பாலசுப்ர மண்யன் பகவான் றிருமாவை
யாலயத்தி னின்றருளெம் மாறுமுகன்—வேலும்
மயிலுந் தமியேன் மனதிருக்க வெந்தத்
துயருந் தொடுமோ வெனை.

"சாமியேயின்னுஞ் சாலஞ்செய்வதழகா" என்றபடி

பல்லவி

ஐயாமுரு காவுன்திருவடிக்
கடயம் (ஐயா)

அநுபல்லவி

வையமெலாம் போற்றும் ஸ்வாமி, வந்தென்றுயர்
மாற்றுந்தேவா
மந்தாகினி மைந்தா மாவைக் கந்தஸ்வாமியே (ஐயா)

சரணங்கள்

தன்னிகரில்லாதவொண் பொன்னரிமாலை மார்பவுன்
தஞ்சமலால்வேறேதுண் டஞ்சுறேனானோய் கொண்டஞ்
சாதேயென்ற வாக்காலெனை யாற்றலாகாதா (ஐயா)

ஆதிசிவன் பாலகா ஆறுமுக வேலாவுன்
ஆதரவுபோலும்வே றார்தரவிங் கேலுமெனை
யாற்றிமிகத் தேற்றித்துயர் மாற்றியருள்வாய் (ஐயா)

வன்மமென்ன வென்னுடன் வன்னமயின் மேற்சணம்
வாருமென்னைக் காருமெந்தன் வாக்கில் மனஞ்சாரும்
பாருமருள் கூருமெந்தன் பாவந்தீருமே. (ஐயா) 34

வெண்பா

கருணை மிகப்பழுக்குங் கதிர்வேற் கடப்ப
மருமலர்ப்பைந் தாரசையு மார்பா—சரவசரந்
தந்த வறுமுகவா தாவறுநன் மாவைநகர்ச்
சிந்துதரு மைந்தவருட் செய்.

"கழுகுமலைக்குநாம் நேராய்" என்றபடி

பல்லவி

அருள்புரிந் தென்னையாளீசா நாமெலா
மார்வமுடன் தொழும் மாவைவாசா (அருள் புரி)

அனுபல்லவி

அரியயனுஞ் சுரரும் மறியாதகிர் பாகரனே நல்ல
(அருள் புரி)

சரணம்

கார்மயிலேறுங் கடப்பமலர்த்தாரா
கண்டகரைப் போரில் வென்ற அதிகாரா
சீர்மருவுந் தொண்டர்க்கோர் நல்லுபகாரா
தீர்தர நோயிதுபூமி தெய்வத மாதெனுநாமி
காதலனந் தரியாமி காத்துக்கொள்ளுங் கந்தசாமி.
(அருள் புரி) 35

வெண்பா

ஒன்றான மெய்ப்பொருளே யுத்தமவிண் ணப்பமிக
நன்றாகச் செய்துனக்கு நான்றருவேன்—குன்றுருவத்
தொட்டவே லைத்தமியேன் துன்பமலைக்
கின்னொருகால்
விட்டெனையாட் கொள்வாய் விரைந்து.

**மாவைக் கந்தன் பக்திரசக் கீர்த்தனைகள் முற்றிற்று**

உ

# குறுக்குத்துறைக் குறவஞ்சி

## தி. சு. ஆறுமுகம்

### பாயிரம்

#### 1. கணபதி காப்பு-நேரிசை வெண்பா

திருவுரு மாமலைமேற் செந்தமிழி லோர்நற்
குறவஞ்சி பாடிடக்கை கூப்பிப்-பெருவயிறன்
வேழ முகத்தன் விநாயகன் றன்னிருபொற்
றாளைப் பணிகுவாம் தாழ்ந்து.

#### 2. கந்தன் காப்பு-அறுசீராசிரிய விருத்தம்

தாழ்ந்தடி வணங்கு வார்க்குத் தண்ணருள் பொழியும் வேலன்
வாழ்ந்தருள் குறுக்குத் துறைமேல் வண்குற வஞ்சி யோத
ஆழ்ந்தநற் காத லோடு மவனருள் வேண்டி நிற்பின்
போந்தருள் செய்தி டானோ புனிதனம் முருகன் மாதோ.

#### 3. சிவபிரான்காப்பு-கலிவிருத்தம்

மாதணையும் பங்கனொரு மால்விடையன் றன்னின்
போதணையும் பாதமலர் போற்றியெழில் மஞ்ஞை
மீதணையும் வேலனுரு மாமலையின் குறமே
ஓதநினைந் தேனெளியேற் குற்றதுணை யாமே.

#### 4. சக்தி காப்பு-அறுசீராசிரியம்

ஆகுஞ் செயல்க ளவையாயு
மன்னை சக்தி யருளன்றோ
பாகுந் தோற்கும் மொழியாளின்
பாத மலர்கள் தமைச்சூடி

வாகுஞ் சீருஞ் சேருருமா
மலைமேற் குறமொன் றினைப்பாடப்
போகு மெளியேற் கிடர்வருமோ
பொய்யா தருளைப் பொழிவாளே.

### 5. தமிழ்த்தாய்க் காப்பு-கட்டளைக் கலித்துறை

அருள்சேர் திருவுரு மாமலை மேற்குற மாக்கிடவே
மருள்சே ரெளியன் பெரிதும் விழைந்து மனந்துணிந்தேன்
பொருள்சேர் தமிழ்த்தாய் புதல்வ னெனக்கே பொழிந்திரங்கி
இருள்சே ரெனதகந் தங்கி யருள்வ ளெனநினைந்தே.

### 6. புலவர் காப்பு-எண்சீராசிரிய விருத்தம்

சங்கமுறு கூடலுறை யங்கயற்கண் ணம்மை
தான்மகிழ வேகுறஞ்செய் குமரகுரு நாதன்
புங்கமுறு வண்புலவர் புகழ்தனையே பேசும்
பொற்படருங் குற்றாலக் குறவஞ்சி செய்த
துங்கமுறு ராசப்பச் சிங்கமிவர் போன்ற
தூயபுல வோரடிகள் சேயனும்ப ணிந்தே
மங்குலட ருங்குறுக்குத் துறைமீதிக் குறமே!
வழுத்திடம னந்துணிந்தேன் வருமிடரு முண்டோ?

### 7. அவையடக்கம்-அறுசீராசிரிய விருத்தம்

இப்பியுட் கிடந்த தென்றே இகழ்வரோ தரளந் தன்னை
அப்பிடைச் சேற்றி லாயு மம்புய மொதுக்கு வாரோ
துப்படர் வண்கு றுக்குத் துறையனின் சீரை யிந்நூல்
செப்பிய தாலே மேலோர் சிந்தையுட் கொள்வார் மாதோ.

### 8. நூற்பயன்-எண்சீராசிரியம்

தேவரிடர் தீர்த்தருளுந் திருவுருமா மலையன்
செந்தமிழ்சேர் கீரனிடந் திருமுருகு மேற்று
மேவுமிடர் நீக்கியொரு மூங்கையெனும் பிள்ளை
மொழியறியச் செய்துகலி யேற்றுமகிழ் வோனின்
மாவலிமை யைப்புகழை வழுத்திடுமிந் நூலை
மனவொருமை யோடுபடிப் பாருடன்கேட் பாரும்
தாவமெது மின்றிநலங் கொண்டுபுவி வாழ்ந்து
தாய்வயிறு சேராமல் சேயடிசேர் வாரே.

## நூல்

### 1. கட்டியக்காரன் வரவு-அறுசீராசிரியம்

திருவுரு மாமலை தங்கிய வேலன்
சீர்மயின் மீதினிலே
வருமொரு பவனியை யுலகினுக் குரைசெய
வாகடர் வண்ணமுடன்
பருமுட லும்பெரு மீசையும் பாங்குடன்
பாணியிற் பொற்றடியும்
கருமொழு கெனநிற முங்கொளுங் கட்டியக்
காரனும் வந்தனனே.

### 2. இதுவுமது-கண்ணிகள்

பார்புரக் கும்பெரு பார்த்திப ராயினும்
பண்ணவர் விண்ணவர் யாரெனினும்
ஓர்புறம் நின்றிடச் செய்துபின் கோவிலி
னுள்விடுங் கட்டியக் காரன்வந்தான்.
கார்புரக் குந்திரு நெல்லைய டுத்திடுங்
காவட ரும்பதி யாம்கவினார்
சீர்பெரு குங்குறுக் குத்துறை வேலவர்
செங்கடைக் கட்டியக் காரன்வந்தான்.

### 3. உலா அறிவித்தல்-அறுசீராசிரியம்

நீர்பொழியுந் தண்பொருநை சூழ்குறுக்குத்
துறைமேவும் நிமல ராய
ஏர்பொழியும் வேலவரிவ் விகமுறைவா
ரிதமுறவே இனிய காட்சி
சீர்பொழியு மாறருளத் திமிதிமியென்
றேநடஞ்செய் சிகிமீ தேறிப்
பேர்பொழியும் வளநாட்டுப் பெருவீதி
யெங்குமுலா புறப்பட் டாரே.

### 4. கட்டியக்காரன்கூற்று-இசைப்பாட்டு

இராகம்: அம்சத்தொனி தாளம்: ஆதி

(எடுப்பு)

குமரர் திருப்பவனி வந்தார்
கோல மயிலின்மிசை குறுக்குத் துறைமறுகில்-குமரர்

(தொடுப்பு)

அமரர்மலர் பொழிய அறிஞர் மறை மொழிய
அமலர் வடிவேலவர் ஆடும் மயிலின்மிசை-(குமரர்)

(முடிப்பு)

முன்னர் கணபதியும் மூஷிகம் ஏறிவர
மேளதாளம் பலவும் முழங்கி யதிர்ந்துவர
பின்னர் நெருங்கிப்பலர் பாவிசைத்துத் தொடரப்
பேதம்விடுத் தெல்லாரும் போற்றிமிடைந்துவர-(குமரர்)

வீரவாகு மருங்கில் விருது முழக்கிவர
வெண்கவரி மற்றவர் வீசிக் குடைகவிக்கப்
பாரக மடங்கலும் பணிந்து துதித்துவரப்
பாம்பை மிதித்துநடம் பயிலும் மயிலின்மிசை(குமரர்)

சூரியனின் ஒளியை மீறி அயிலொளிர
தோளிலணி கடம்பத் தொங்கல் மணங்கமழ
நாரிய ரிருவரும் நாடி மருங்குவர
நளினம லர்க்கரமும் நல்லரு ளேபொழிய- (குமரர்)

சேவற்கொடி விண்ணினைச் சாடிப் பறந்துவரச்
சேனையெனத் திரண்டு தொண்டர் பணிந்துவர
பாவையர்கள் குரவை பரவையென முழங்கப்
பாலன்வடி வேலவன் பக்தர்க்கருள் வழங்க-(குமரர்)

### 5. உலாக் காணப் பெண்கள் வரல்-அறுசீராசிரியம்

பலிவாங்கி வாழரனார் பாலனுரு
மாமலையர்ப் பவனி காண
நலிவாரும் பஞ்சமல ரனங்கனையுந்
திடங்குலைக்கும் நாரி யர்தம்

வலிவாருஞ் சுடர்விழியாங் கணைதீட்டி
    விற்புருவம் வளைத்துத் தம்மின்
மெலிவாரும் இடைகாட்டி மென்சிலம்பு
    முரசறைய மேவி னாரே.

### 6. இதுவுமது-கண்ணிகள்

இராகம்: சிந்துபைரவி தாளம்: திஸ்ரம்

வேலி னைப்பிடித் தேயு லாவரும்
    வேல னைத்தொடர்ந் தேவரும்
வேலெ னும்விழி யார்க ளும்பெரும்
    வேலை யாமெனக் கூறலாம். 1

ஓர்க ரந்தனி லேவ ளையணிந்
    தோர்க ரந்தனிற் பூணிடா
தார்வ மோடுவந் தேபி றர்நகை
    யாட வேமுகம் நாணுவார். 2

கச்சி னையெடுத் தேயி டைதரித்
    தேபி னன்னதைக் காணுவார்
அச்ச கோவிது கச்ச லோவென
    ஆவ லாய்த்தனம் பூணுவார். 3

கண்ணி லொன்றினுக் கஞ்ச னந்தனைத்
    தீட்டு வாரொரு கண்ணிலே
அன்ன தையிட வேம றந்தொரு
    அங்கை மையுடன் நண்ணுவார். 4

கூந்த லோர்புற மேச டைமுடி
    வார்பி னோர்புறம் பின்னிடா
தேந்தி யேயதைத் தங்க ரம்பிடித்
    தோடு வார்குகன் றேடுவார். 5

மின்ன லாமிடை தன்னி லாடையைச்
    சுற்று வாரதை மார்பிட
உன்னி டாமலே பொன்க ரந்தனில்
    அள்ளி யேவிரைந் தோடுவார். 6

மார னோஇவன் என்ப ரேயெழில்
    மேனி கண்டது மாற்றுவார்

மீறு மிந்திர னென்ப ரேவிழி
ஆயி ரந்தமைக் காண்கிலார். 7

விண்டு வோஇவ னென்ப ரேயுடல்
கொண்ட லாம்நிறங் கண்டிலார்
வெண்வி டைச்சிவ னென்ப ரேநுதற்
கண்ணி லையெனத் தேறுவார். 8

மின்னு வேலினைக் காணு வார்மயில்
மீது வந்ததை யெண்ணுவார்
செந்நி றந்தனைப் பேணு வார்உரு
மாம லைக்குகன் என்னுவார். 9

### 7. மோகினிப்பெண் வரல்-அறுசீராசிரியம்

அலையணியுந் தண்பொருநைத் திருவுருமா
மலையருலா வதனைக் கண்டு
நிலையழியும் மங்கையருள் தலையளென
நீணிலமும் நுவலு மாறு
சிலையனைய வுடற்காட்டிச் செம்பவள
நிறங்காட்டிச் சிரிப்புங் காட்டித்
தலையதனில் முகிற்காட்டித் தரங்காட்டி
மோகினிப்பெண் தான்வந் தாளே.

### 8. இதுவுமது-கண்ணிகள்

இராகம்: குறிஞ்சி தாளம்: ஆதி

பேரொளிசேர் பொன்னணி பூட்டித்-தனது
பின்னலிடுங் கார்முகிலில் பாம்பினைக் காட்டி
வாரணியுங் கச்சினை மாட்டி-நகிலின்
வண்ணமெலாங் காட்டியெழில் மோகினி வந்தாள்

கைநிறையக் கங்கண மிட்டுத்-தனது
கண்சுழற்றி ஆடவரை வாடிட விட்டு
மெய்யிலொரு வங்கணமிட்டு-இடையை
மின்னலெனக் காட்டியெழில் மோகினி வந்தாள்

சின்னஞ்சிறு பொன்நடையிலே-தனது
சிங்காரச் செங்கரங்கள் தம்மசைப்பிலே
இன்னிசையுந் தாளமுங்கூட்டி-எதிர்செல்
யாவரையும் வாட்டியெழில் மோகினி வந்தாள்

கண்ணெதிரே பட்டவர் வாட-எழில்
காமனுந்தன் மாதெனவே கிட்டவு மோடத்
திண்ணமுடன் பெண்களும் நாட-வளமார்
திருவுரு மாமலையின் மோகினி வந்தாள்

9. மோகினி பந்தடித்தல்-காவடிச்சிந்து மெட்டு

பருவத் துடிப்பிலொன்றிப் பரும னடர்த்திகொண்டு
படர்கச் சினைக்கிழிக்கும் கொங்கையாள்-எழில்
பழகும் வளைகொழிக்கும் செங்கையாள்-இந்தப்
பாரி லேமயில் வீரவேலவர்
சேரு மாமலைத் தீர மோகினி
பலரும் மயங்கப்பார்வை பேசுவாள்-தவித்
தலறிக் கலங்கச்சீர்கை வீசுவாள்

மருவத் துடிதுடிக்கும் மயிலாள் துடியிடைக்கு
மழையோ டொளிருமின்னல் தான்நிகர்-கண்கள்
மருள விழிப்பதும் பெண் மான்நிகர்-தவ
மாரு மாமுனி வோரு மேவிழி
யார வேகளி கூர மேவிட
மையல் கொடுக்குமின்ப மூச்சினாள்-அந்தத்
தையல் மருந்தையொக்கும் பேச்சினாள்

பெருநத் தினைப்புனைந்து பொலிவார்ந் திடச்சிறந்து
பெரிதும் துடிதுடிக்கும் மூக்கினாள்-பெரும்
புலவர் வடித்தெடுத்த வாக்கினாள்-திருப்
பாத மேலடர்ந் தோதை யேயிடும்
நாத மேவுசங் கீத மேயெனப்
புலம்பித் தவிக்கும் ரெண்டு தண்டையாள்-வண்டர்
புகுந்து மதுகுடிக்கும் கொண்டையாள்

உருவத் தினிற்சிறந்து ஒளிர்பாற் கடல்கடைந்து
உயருந் திருவமுத மேனியாள்-அவள்
உரையில் பெரிதினிக்கும் சீனியாள்-உள
மோடு யாவருந் தேடு வேலவர்
பீடு லாசெலும் வீதி மீதினில்
ஒயிலாய் நடைபயின்று நாடினாள்-நாடி
மயிலாய்ப் பந்துபயின்றும் ஆடினாள்.

### 10. இதுவுமது-நேரிசை வெண்பா

காலகளி லேயிரண்டுங் கண்களினு ளேயிரண்டும்
மால்தரு மார்பினில் மற்றிரண்டும்-வால்வளைசேர்
செங்கரத் தொன்றுமெனச் சேர்ந்திடுபந் தேழினொடு
பங்கமிலா தாடினாள் பந்து.

### 11. இதுவுமது-பன்னிரு சீராசிரியம்

நெற்றியில் தொங்கிய சுட்டிம
ருங்குபு ரண்டுபு ரண்டாட
நீள்விழி கள்சுழன் றேயிரு
காதணி நேர்ந்தும கிழ்ந்தாட
செற்றிய கும்பமி ரண்டுகு
தித்தடை வெற்றிநி னைந்தாடச்
சேவடித் தண்டைசி லம்பது
கண்டும ருண்டுமொ லித்தாட
சுற்றிய ணிந்துள பொன்கலை
மின்னிடை விட்டுநெ கிழ்ந்தாடச்
சுந்தரச் செங்கையில் வண்டுகு
லுங்கிகு லுங்கியி சைத்தாட
மற்றிவள் தன்னுடல் பூணணி
யாவும சைந்துவொ ளிர்ந்தாட
மன்குறுக் குத்துறை வீதியில்
மோகினி பந்துப யின்றாளே.

### 12. இதுவுமது

மன்மத னின்ரதி மாதிவ
ளோதிரு மாதிவ ளோவானின்
மங்கைய ரோவரை வாழ்பவ
ளோபணி வாழுல கத்தினளோ
நன்மன மோவிழி யோகர
மோவெது முந்திய தாமெனவே
நாட்டமுற் றார்மன மேமலை
வெய்தும யங்கிய யர்ந்திடவே
தன்மமு மேமலி யுங்குறுக்
குத்துறை தங்கிய வேலரெனும்

சண்முக ரும்மயின் மீதிலு
லாவருந் தண்பெரு வீதியிலே
பன்மயி லாஞ்சகி மாருடன்
மோகினி பாங்குட னேகுலவிப்
பத்தரை மாற்றுயர் பொன்னதி
லாமணி பந்துகொண் டாடினளே.

13. இதுவுமது-அறுசீராசிரிய விருத்தம்

தேனிருக்கும் மலர்க்கூந்தல் சரிந்தலைய
மேலாடை தேங்கா தாட
மான்நிகர்க்கும் பெண்களுடன் முன்னோடிப்
பின்குதித்தெம் மருங்குளுஞ் சுற்றி
வானிருக்கும் பந்தெடுப்ப தெனபபறந்து
வலமிடமாய் வாகாய்த் துள்ளித்
தானிருக்கும் இடந்தெரியா வணங்குறுக்குத்
துறையளும்பந் தாடி னாளே.

14. சுட்டியக்காரன் கூற்று-இசைப்பாட்டு

இராகம்: மணிரங்கு தாளம்: ஆதி

(எடுப்பு)

பந்தாடும் மோகினியைப் பாரீர்-பாவனையுடன்(பந்தா)

(தொடுப்பு)

தொந்தோம் தொந்தோமெனவே துள்ளிக் குதித்தெழும்பிப்
பந்தாடும் மென்கரத்தால் பாய்ந்து பாய்ந்து பிடித்துப்(பந்)

(முடிப்பு)

கும்பம் நிகர்தனங்கள் குழைந்து குழைந்து மாடக்
கோலவிழிகள் ரெண்டும் குழைகள் தம்மோடுகூட
வம்பார் மலர்க்குழலும் விரிந்து தோளில்புரள
வளமார் குறுக்குத்துறை மறுகில் தோழியர்சூழப்(பந்)

கண்டார் வசமிழக்கக் கண்கள் நிலைநிலைக்கக்
கருத்துமதே நினைக்கக் கால்கள் நடைமறக்கப்
பெண்டார் மனம் வியக்கப் பெரிதும் திறன் சிறக்கப்
பேரார் குறுக்குத்துறை சீரார் பெருந்தெருவில்(பந்தா)

### 15. மோகினி வேலனைக் காணல்-கலிவிருத்தம்

அண்டரணை யுங்குறுக்குத் துறைமறுகிற் றுள்ளிச்
செண்டடிக்கும் மோகினிப்பெண் ணாகியவம்மின்னாள்
தொண்டரணி சேரவரும் வீரவடி வேலைக்
கண்டடிப்ப தும்மறந்து கண்விரித்து நின்றாள்.

### 16. இவர் யாரென மோகினி திகைத்தல்-இசைப்பாட்டு

இராகம்: கல்யாணி தாளம்: ஆதி

(எடுப்பு)

யாரோ இவர் தோணிலேன்-எனைமயக்கும்
யாரோ இவர் தோணிலேன்-என்ன
பேரோ இருப்பதெந்த ஊரோ எதுவுங்காணேன்(யாரோ)

(தொடுப்பு)

பாரோங்கிய எழிலும் சீரோங்கிய அருளும்
தாரோங்கிய புயமும் மாறாம லேவந்தவர்-(யாரோ)

(முடிப்பு)

ஒளிசேர் திருமுகமும் அருள்சேரி ருவிழியும்
உறுவா ரெவரெனினும் உளமே மிகக் கவரும்
நளிசேரும் மார்பகமும் நளினத் திருக்கரமும்
நடந்தால் அழகொழுகும் தடந்தாளுமே கொண்டவர்-
(யாரோ)

வடிவேல் கரம்பிடித்து வளமார் சேவலுயர்த்தி
முடிமேல் முடிதரித்து முறுவல் படச்சிரித்து
மிடிதீர் குறுக்குத்துறை மறுகில் சிகியமர்ந்து
மீறும்படி என்மனம் சேறும் வடிவழகன்- (யாரோ)

### 17. மோகினி மயங்கி வீழ்தல்-அறுசீராசிரியம்

பந்தடி மறந்து வைத்த பார்வையை யெடுத்தி டாமற்
சுந்தரன் குமர கோட்டன் திருவுரு கண்டு தன்நெஞ்
சந்தனைப் பறிகொ டுத்த சவிநிறை மோகி னிப்பெண்
சொந்ததன் வசமி ழந்து சோர்ந்துடன் தரையில்
வீழ்ந்தாள்

### 18. இதுவுமது-கண்ணிகள்

மோகினி மாது மயங்கி-மதியிழந்து
  மூச்சிலள் எனவிழுந்தாள்-நல்ல
பாகினு மினிய சொல்லை-அவள் துறந்து
  பாவை யெனவே கிடந்தாள்
கைகால் அசைவிழந்து - கருத்தழிந்து
  கண்ணிமைப்பதும் மறந்தாள்-தன்னின்
மெய்சேர் அணிகுலையக்-குறுக்குத்துறை
  வீதியில் வீழ்ந்து கிடந்தாள்
ஆடை இடைநெகிழ-அவள்தரித்த
  அணிவளை கரம்நெகிழப்-பந்தை
ஓடி யடித்துங் களையா-மோகினிப் பெண்ணாள்
  உருவச் சிலைபோற் கிடந்தாள்
மருங்கார் தோழியரும்-மனந்திகைத்து
  மாதினைப் பரிந்தெடுத்துச்-சென்று
அரும்பஞ் சணைக்கிடத்தி-அதிவிரைவாய்
  ஆவன செய்ய முனைந்தார்.

### 19. பாங்கிமார் செயல்-பன்னிரு சீராசிரியம்

பன்னீ ரெடுத்துப் பாங்கியரும்
  பரிவாய் முகத்தில் தான்தெளித்துப்
 படர்மென் விசிறி தனைக்கொண்டு
  பதமாய் விசிறிப் பயன்காணார்
பொன்னாள் தனக்கென் மாயமிதே
  பேயோ பிச்சோ பிடித்ததென்பார்
 பொல்லா நீலி பழவூராள்
  பிடித்தா ளென்பர் முன்வந்து
மின்னே ரிடையா ளுறைபங்கர்
  மகிமை கூறி நீறெடுத்து
 மேனி முழுதுந் தான்தடவி
  மயிலாள் தனைக்கா ரெனப்பணிவார்
தன்னே ரிலதாந் தண்பொருநை
  தாரென் றணிசெய் குறுக்குத்துறை
 தங்கும் பெருமான் மீதுமயல்
  தரித்தா ளெனவு மறியாரே.

### 20. முதுதாதி கண்டுணர்தல்-அறுசீராசிரியம்

செய்வதெது மறியாமற் றிருவுருமா
மலைச்சேடி யருந்தி கைக்க
மெய்வளைவோ டனுபவமார் முதுதாதி
யொருத்தியவண் மேவி யந்தத்
தெய்வமகள் படும்பாடு தெரிந்துமுனம்
நடந்ததுவுந் தெளிவாய்க் கேட்டு
மொய்வளையள் காய்ச்சலதைக் கண்டுசில
செய்யுமென முனைந்து செய்தார்.

### 21. பாங்கியர் உபசரித்தல்-கண்ணிகள்

இராகம்: அடாணா தாளம்: ஆதி

தண்ணெனுஞ் சந்தனச் சேற்றினை யள்ளியே
தேகந் தடவிடுவார்-நறுந்
தாதணி மென்மலர் தாம்விரி மஞ்சமேல்
தாங்கிக் கிடத்திடுவார். 1

பெண்ணவள் பக்கமி ருந்துக தைபல
பேசி நடத்திடுவார்-பின்னர்
பேணியம் மேனியெ டுத்தொரு வாழைக்கு
ருத்தில் கிடத்திடுவார். 2

கண்ணெனப் போற்றுதம் காரிகை தன்துயர்
கண்டு கலங்கிடுவார்-அவர்
கஷ்டம தைச்சகி யாதவள் போல்மெலக்
கண்கள் திறந்திடுவாள். 3

எண்ணமெ லாங்குறுக் குத்துறை வேலவர்
தம்மை யடுத்திடவே-அவள்
ஏங்கியெ ழுந்துதன் இன்னலு ணர்ந்துபின்
என்செய்வ தென்றயர்வாள். 4

### 22. முதுதாதி வினாதல்-அறுசீராசிரிய விருத்தம்

தயங்கிடு வாளை மூத்த தாதியும் நோக்கி நீயும்
மயங்கிட லேனோ முன்னர் மறுகினிற் கண்ட காளை
முயங்கிட வேண்டி நெஞ்சம் முனைந்தனை யோநீ
யென்ன
வயங்குரு மாம லைக்கண் வதிமகள் வழுத்து வாளே.

## 23. மோகினி கூறல்-கண்ணிகள்,

என்ன மயக்கமிதோ-சகியே
ஏது மறியேனடி
பன்னிய காதலெனும்-பிணியின்
பான்மையிதோ சொல்லடி. 1

கொண்டல் வளம்பெருகும்-திருக்குறுக்
குத்துறை வீதியிலே
கண்டநற் காளையவர்-என்மனம்
கலக்கியுஞ் சென்றாரடி. 2

மேனி சிவப்பழகும்-கடம்படர்
மார்பின் பரப்பழகும்
ஞான முகப்பொலிவும்-காணிலிந்த
ஞாலம் மயங்குமடி. 3

அந்தமி குந்தவரை-கண்டெனது
ஆவி உருகுதடி
இந்த விதமிதுநாள்-வரையிலும்
என்று மறியேனடி. 4

தேகம் பசந்ததடி - பாலுடன்
தேனுங் கசந்ததடி
தாகம் மிகுந்ததடி-கைவளை
சரிந்து விழுந்ததடி. 5

மென்மலர்ப் புஞ்சணையும்-மேனிதனில்
முள்ளெனக் குத்துதடி
என்மதிக் கிள்ளைகுரல்-செவியில்
எரிச்ச லெடுக்குதடி. 6

நாடி யணைப்பாரோ-என்றனக
நலிவு மணைப்பாரோ
ஓடி யடுப்பாரோ-என்னவோ
ஒன்று மறியேனடி. 7

தாவியணைப்பாரோ-என்றனது
தாபம் அணைப்பாரோ
மேவி யடுப்பாரோ-அல்லதவர்
மாலை விடுப்பாரோ. 8

### 24. முது தாதி கூறல்-கலி விருத்தம்

அந்தவுரை கொண்டமுது தாதியிது சொல்வாள்
சுந்தரிநீ கண்டமகன் திருவுருமா மலையன்
தொந்தொமென ஆடுமெழில் தோகைமயில் வேலன்
வந்தருள்வ னென்னமதி கண்டுமயர் வாளே.

### 25. சந்திரனைப் பழித்தல்-அறுசீராசிரியம்

மங்கையொரு பங்கினர்க்கும் மந்திரஞ்சொல்
திருவுருமா மலையர் மீது
துங்கமுறு மயல்கொண்ட தோகையென
வுணராமற் சுடும்நி லாவே
அங்கமெலாம் நெருப்புடையார் தலையமர்ந்து
நீயுமெரி யனலு மானாய்
எங்களவர் நினையெடுத்தே இறைவனணி
யரவதின்வா யிருத்தி டாரோ.

### 26. இதுவுமது-கண்ணிகள்

இராகம்: வராளி

தாளம்: ஆதி

பாற்கடல மிழ்துடன்நீ வெண்ணிலாவே வந்தும்
பாரினையெ ரிப்பதென்ன வெண்ணிலாவே
சேர்க்கையினால் வந்ததீதோ வெண்ணிலாவே-சிவன்
சொல்லிவைத்த பாடமிதோ வெண்ணிலாவே. 1

பெண்களுடன் பாற்கடலில் வெண்ணிலாவே நீ
பிறந்துவந்த துண்மையன்றோ வெண்ணிலாவே
பெண்ணெனநீ கண்டுமென்னை வெண்ணிலாவே-இங்ஙன்
பேரழலாய்ச் சுடுவதென்னே வெண்ணிலாவே. 2

அரிவையர்தம் பாலிகல்தல் வெண்ணிலாவே-ஒரு
ஆண்மகனுக் கழகுமாமோ வெண்ணிலாவே
குறைமதிய னானவன்நீ வெண்ணிலாவே-இந்தக்
குணங்களெலாங் கொள்வதேது வெண்ணிலாவே. 3

தாமரையைக் காய்வதனால் வெண்ணிலாவே-இனி
சங்கரரு முன்னையேற்கார் வெண்ணிலாவே-உரு
மாமலையர் வேலவர்முன் வெண்ணிலாவே-உன்றன்
மாண்பினைய விழ்த்திடுவாய் வெண்ணிலாவே. 4

## 27. மன்மதனைப் பழித்தல்-அறுசீராசிரியம்

கருமிடற்றர் கண்ணெரியால் கருகியழி
　காமனேநீ கன்னி யென்பால்
தருமிடரால் தத்தளித்தேன் தனியாய
　தாலந்தச் சங்க ரன்கண்
வருமிறைவர் திருவுருமா மலைவேலர்
　என்மீது மனமி ரங்கி
வருமிடத்தே நீபடும்பா டெவராலு
　மாகிடுமோ வழுத்து தற்கே.

## 28. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: சுருட்டி　　　　தாளம்: ஆதி

(எடுப்பு)

மிரட்டல் செல்லுமோ-தமியளெனை
விரட்டல் ஒல்லுமோ-மன்மதனே.　　　(மிரட்)

(தொடுப்பு)

உருட்டும் புரட்டுங்கொண்டு முரட்டுத் தனமாயெம்மை
விரட்டித் திரியும் பொல்லா வறட்டு மதனாஉன்றன்
(மிரட்)

(முடிப்பு)

தஞ்சமெதுவு மின்றித் தனித்து வருந்துமென்போல்
வஞ்சிய ரிடஞ்சென்று வடிவந்தனை மறைத்துப்
பஞ்சமலர் தொடுத்துப் பதைத்திடவே வருத்தி
மிஞ்சு திறமிதென்று மகிழ்ந்தலையும் மதனா-(மிரட்)

குமரனென திறைவர் குறுக்குத் துறையரின்றிக்
குமுறி வருந்துமென்போற் கோழை வனிதையர்பால்
அமரது வேதொடுத்து அல்லற் படுத்துமுன்றன்
ஆண்மை தனையறிவேன் வீண்மதப் பயலேஉன்(மிரட்)

கஞ்ச மலர்ப்பிரமன் காண்பாயுனது முன்னோன்
கநத ரிடம்பட்டதும் கண்டதிலையோ நீயும்
பஞ்ச மலர்க்கணையும் பட்டொடியுங் கரும்பும்
பிஞ்சு விடுந்தெரிவாய் பேய்ப்பயலே உனது(மிரட்)

### 29. தென்றலைப் பழித்தல்-கலிவிருத்தம்

அன்றுதனைக் கொண்டுசர வணமதனி லிட்டே
சென்றவர்க ளிருவரையுஞ் சேர்த்தொருவ னாக்கித்
தென்றலென நாமமளித் தென்னுயிரை வாங்கச்
சென்றிடுவை யென்றனரோ திருவுருமா மலையர்.

### 30. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: அடாணா தாளம்: திஸ்ரம்

(எடுப்பு)

தென்றலெனுங் கொடும்பேயே-வீணில்
துள்ளித் திரிந்தலைந்தாயே-நீயே (தென்ற)

(தொடுப்பு)

நன்றறிவே னுன்றன் நாடகத்தை விட்டுச்
சென்றிடுவாய் நீயுமங்கு நின்றிடுவாய் சீறிவந்த(தென்ற)

(முடிப்பு)

மெல்லென வந்தென்றன் மேனி வெதுப்பினாய்
மேவு மலர்தோறுந் தாவி மழுப்பினாய்
சில்லென வீசிடுந் தென்றலென் றுன்னையே
செப்பிடுவ ரந்தவித மெப்படியோ இங்குவரும்(தென்ற)

கூறுபுகழ் குறுக்குத் துறை வேலவர்
ஏறு மயிலடி இருக்கும் ஆலவாய்
சீறிவரு முன்னைக் காணில் புசித்திடும்
மீறியிவண் வந்திடாதே மேவியுயிர் நொந்திடாதே-
(தென்ற)

### 31. பாங்கியர் மோகினியைக் கடிதல்-அறுசீராசிரியம்

அவ்வியந்தீர் திருவுருமா மலையரெணி
அயர்வாளை யன்பாய் நோக்கிச்
செவ்வியலா யிதுநமது சீர்குலத்திற்
கேற்றவொரு செயலு மாமோ
நவ்விதருங் குறமகளை நயந்திடுமோ
ராண்டிதனை நாடி நெஞ்சம்

இவ்விதமாய் வருந்துவதோ எனச்சகிமார்
மோகினியு மியம்பு வாளே.

### 32. மோகினி கூறுவது-கண்ணிகள்

இராகம்: மோகனம் தாளம்: ஆதி

கோல மயிலவரைக் கண்டேன் கண்டேன்
கூற வொணாதமயல் கொண்டேன் கொண்டேன்
சால வசமிழந்து நின்றேன் நின்றேன்
சாரும் வழியறியேன் நொந்தேன் நொந்தேன். 1

செங்கரங் கொண்டவொரு வேலைக் கண்டேன்
சேர்விழி வேலிரண்டும் நீருங் கொண்டேன்
பங்கமி லாதவொரு கிளியுங் கண்டேன்
பழகென் கிளிமொழியைப் பழித்து நின்றேன். 2

சேவற் கொடிபறக்கக் கண்டேன் கண்டேன்
சிந்தை யவண்பறக்க நின்றேன் நின்றேன்
வேவு முடற்சிவப்பைக் கண்டேன் கண்டேன்
மேனி பசந்திடவே நின்றேன் நின்றேன். 3

நாறுங் கடம்பணிந்த தோளுங் கண்டேன்
நாடிக் குறுக்குத்துறை வீதி நின்றேன்
பேரருள் சேருங்கண்ணீ ராறுங் கண்டேன்
பேதை யெனதுகண்ணீ ராறுங் கொண்டேன். 4

### 33. இதுவுமது-அறுசீராசிரிய விருத்தம்

திருவுருமா மலைமுருகர் தோளாசை
யானொருத்தி தானோ கொண்டேன்
மருவுதினைப் புனத்துறையும் மான்மகளாங்
குறத்தியுடன் மகவான் பெண்ணும்
அறுவருடுக் கார்த்திகையா மரிவையரும்
ஆறுமுக ரணைப்பி லுய்யப்
பெருவரமும் பெற்றார்யான் பெண்பிறந்து
கண்டதொரு பேறென் மானே.

### 34. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: சகானா தாளம்: மிஸ்ரம்

(எடுப்பு)

சிந்தை கவர்ந்த கள்வர் திருவுரு மாமலையர்
வந்தென் துயர்தீர்ப்பாரோ-தோழீ- (சிந்தை)

(தொடுப்பு)

நொந்தே வாடிடுமென்றன் நேரில்வந் திடுவாரோ
சுந்தரமிகுகந்தர் தோள்மாலை தருவாரோ (சிந்தை)

(முடிப்பு)

சூர்தடிந்தா ரென்காமச் சூர்தடிந்தா லாகாதோ
சுடர்வேலணைந் தாரென்றன் விழிவேலணைந் திடாரோ
தார்முடித்தா ரென்கண்ணின் தாரை முடித்திடாரோ
தாம்பிளந்தா ரென்மார்பாம் தரமும் பிளந்திடாரோ (சிந்)

ஆறுதலை கொண்டாரும் ஆறுதலைச் செய்வாரோ
அல்லால் எனைமறந்தே ஆவிதனைக் கொய்வாரோ
ஏறும் மயில்வேலவர் மீறுமயல் தீர்ப்பாரோ
ஏனோ தானோ வீணென்று எண்ணித் தங்கிடுவாரோ(சிந்)

### 35. பாங்கியின் கூற்று-கட்டளைக் கலித்துறை

சீரார் திருவுரு மாமலை யார்மிசை சித்தமுற்றுக்
கூறா மொழியெலாங் கற்றெதிர்க் கோப்புடன் கூறிவென்றாய்
ஏரார் மயிலரு மிங்ஙனம் நின்மிசை யின்புளரோ
தேரா ததனையுஞ் செய்வதென் தேறிநீ செப்புவையே.

### 36. தூது சொல்ல மோகினி பாங்கியை வேண்டல்

இராகம்: மாயமாளவகௌளம் தாளம்: ரூபகம்

(எடுப்பு)

தூது சொல்லாயோ-சகி தூது சொல்லாயோ
சுந்தர மாமலைக் கந்தரிடம் சென்று (தூது)

(தொடுப்பு)

தீது மேவும் சூரன் என்ற
துட்டனிட மன்று தூதுவிட்டவர்க்குத் (தூது)

(முடிப்பு)

உறக்கமுங் கொள்ளாமல் வாடி
மறக்கவும் ஒண்ணாமல் நாடி
கிறக்கமும் கொண்டேயிங் கோடி
இருக்குமென் நிலை உணர்ந்தும் ஓடி
எவ்வித மேனும்நீ செவ்விய ரைத்தேடித் (தூது)

வருவரே லிந்நேரம் வரட்டும்
வருவ தில்லெனின் மாலை தரட்டும்
தருவரே லென்னாவி நிலைக்கும்
தாமத முயிர்க்கிறுதி விளைக்கும்
தண்குறுக் குத்துறை அண்ணலை நாடிநீ (தூது)

37. இதுவுமது-அறுசீராசிரிய விருத்தம்

மதவேளை வென்றதிரு நெல்வேலி
நாதரருள் மைந்த ராய
இதவேளை யணுகிடுவ தெளிதன்று
சுரர்தமக்கு மென்ப தாலே
கதவேளை விடுத்துருமா மலைவேலர்
தனித்துள்ளம் கனிந்தி ருக்கும்
பதவேளை தனிற்சென்றென் பாடெல்லாம்
உயிர்ப்பாங்கி பகரு வாயே.

38. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: பந்துவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

நல்லவேளை கண்டு செல்லடி-நாடியென் சகி-(நல்ல)

(தொடுப்பு)

வல்லவர் குறுக்குத்துறை யுள்ளவர் அருள்புரியும்
நல்லவர் திருக்குமரர் இல்லிலே நுழையும்போது(நல்ல)

(முடிப்பு)

திருவனந்தல் முதலாம் சேருமொன் பதுகாலச்
சிறப்புடைய பூஜையில் திரள்திர ளாகச்சூழ

வரும்அடியார் தமககு வரமருளு மவ்வேளை
வகையறியா மற்சென்று வருத்தம் கொடுத்திடாமல்(நல்ல)

மாசித் திருநாளும் வைகாசி விசாகச் சாறும
வசந்த முடனே கந்த சஷ்டித் திருவிழாவும்
மாசக் கடை வெள்ளியும் மற்றும் விழாக்களிலும்
மறந்தெனினு முள்ளேநீ புகுந்திடாம லுணர்ந்து(நல்ல)

பக்தியுடன் ஆவடு துறையர்செய் வழிபாட்டைப்
பார்த்திடவே அடியார் பரவசமுடன் நாடி
மெத்தவு மாவலுடன் வீரவாகு தேவரின்
விழியருள் நோக்கி நிற்பர் வழிவகை நீயறிந்து(நல்ல)

அருணகிரியின் சந்தப் புகழுமந்தாதியும்
அமலன் குருபரன்செய் அரிய திருக்கலியும்
வருவினைதீர் கவசம் இவை முழக்கியடியார்
வழிபடுங் காலுரைப்ப தெளிதலவே உணர்ந்து(நல்ல)

### 39. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: புன்னாகவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

நல்ல சமயமறிந்து நாடியடைந்தென்
அல்லல்நீ சொல்லி வருவாய்-ஆருயிர்சகீ- (நல்ல)

(தொடுப்பு)

வெல்ல வந்த காமன் வெருண்டிடவே-நீ
வியனாரும் உருமாம லையர்வேலர் தமைமேவி(நல்ல)

(முடிப்பு)

என்போல் முருகர் மிசையே-காதல்கொண்டவர்
ஏவ சந்துவந் தவையே
முன்கடையில் காண்பாய் வேணவைதாம்-அவை
மொழியாமுன் தெளிவாய்நீ வழியேய றிந்துசென்று
(நல்ல)

மின்னார் குறமகளுடன்-வெள்ளானைதனின்
பொன்னார் சுரமகளுடன்
அன்னவருங் குலவி அவணிருந்தே-திரு
வனந்தற்பொழுது கோயிற் கெழுந்த வழிதனிலே
(நல்ல)

### 40. மோகினி கூடலிழைத்தல்-அறுசீராசிரியம்

தெண்ணீ ராருந் தண்பொருநைத்
துறையர் வேலர் தமையெண்ணி
எண்ணி நெஞ்சங் கனிந்துருகும்
எழிலார் நங்கை மோகினிதன்
கண்ணீர் தானே தீம்புனலாய்க்
கரமார் வளைகள் செய்கரையாய்ப்
பெண்ணீர் மையினாற் கண்மூடிப்
புரிந்தாள் கூடற் பெருங்கிணறே.



### 41. இதுவுமது-கண்ணிகள்

மாமறை போற்றுரு மாமலை மேவிய
மன்னவ ராம்முருகர்-வந்து
மாதெனைக் கூடுவ ராமெனின் கூடலே
மாண்புடன் கூடிடுவாய். 1

நாமகள் நாதனை யேசிறை செய்தவென்
நாயகர் வேல்முருகர்-மனம்
நாடியென் பாலெனைக் கூடுவ ராமெனின்
கூடலே கூடிடுவாய். 2

சீர்மயி லேறியஞ் சேவற்ப தாகையு
யர்த்திய சேவகரும்-வெகு
சீக்கிர மேயெனைக் கூடுவ ராமெனின்
கூடலே கூடிடுவாய். 3

ஆறிரு கண்ணவர் ஆறுமு கர்மனத்
தாவலு டனடைந்தே-என்
ஆசையைத் தீர்த்திடு வாரெனின் கூடலே
அன்புடன் கூடிடுவாய். 4

### 42. குறத்தி வருதல்-அறுசீராசிரிய விருத்தம்

செண்டாடும் வீதியிலே சேவலர்முன்
சிதறவிட்ட தொடிகள் தேடித்
திண்டாடு வாளெனவே கூடலிழைத்
தேயவளுந் தியங்கும் வேளை
கண்டாருங் குரலேந்திக் கைக்கோலு
மேந்தியிடைக் கூடை யேந்திச்

செண்டாருந் தனமேந்தித் திருவுருமா
மலைக்குறத்தி தெருவில் வந்தாள்.

### 43. இதுவுமது-நிலைமண்டில ஆசிரியப்பா

உலகப் பொதுமறை யுதவிய தீந்தமிழ்
குலவிய பொதிகைக் கோடுயர் மலையான்
வருவார் கொடும்பவம் மருவா தொழிக்கும்
பொருநை யெனுமுயர் புண்ணிய நதியான்
செந்நெற் கரும்பொடு தேன்மலி கதலி
பொன்னெனக் கொழிக்கும் பாண்டிய நாட்டான்
ஆவடு துறையர் அரும்பணி யாலிப்
பூவுல கெங்கும் புகழடைந் தோங்கும்
காவணி துறையும் பூவணி பொழிலும்
மாவணி திருவுரு மாமலைப் பதியான்
திருமயிற் பரியான் சுரவெண் கரியான்
செருவிற் பொலிந்துயர் சேவலங் கொடியான்
வீரம் கொடைமணம் மேவுமும் முரசான்
பாரினைப் புரக்கும் படர்வெண் குடையான்
பிணையிரு விழியும் பிடியிரு விழியுமாம்
இணையிரு அளிகளும் அணைநறுங் கடம்பான்
குறையா வளம்பல நிறைசீர் குறுக்குத்
துறையான் தேவர்தம் குறைதீர்த் தாண்டவன்
முருகார் குமரனின் திருவருள் பாடி
உருவார் மோகினி யுறைநெடு மறுகில்
எண்ணிரு முழம்பல வண்ணப் புடவையை
திண்ணமா யொருபா வாடைசெய் தணிந்து
முழுவயி றெங்கணும் வெளியே தெரியவும்
எழுமுலை தமக்கே இழுத்தொரு கச்சினைத்
தரித்தே தலைமயிர் விரித்தள்ளிச் செருகி
வரிசை யுறத்தலை யூசிகள் மாட்டிக்
கோடணிக் கொண்டையில் வாடா மலர்பல
சூடியும் நீறுந் திலகமு மணிந்து
குலத்திற் கியையக் குன்றியும் பாசியும்
பலபல புனைந்து பொலிவுடன் சிறந்து
கரஞ்சேர் மாத்திரைக் கோலுந் தாங்கிக்
கக்கந் தனிலொரு கூடையு மேந்தி

''மொழிக்கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்
விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டுமாய்க்''
குறிவகை யாவுங் குறைவற வுணர்ந்து
பிறபுவி தன்தமிழ்க் குறியா லடக்கி
''மன்னவர் தமக்கு வலதுகை நோக்கி
இன்னகை மடவார்க் கிடதுகை பார்த்துக்''
கடந்தமுன் குறியும் நடந்திடும் குறியும்
தொடர்ந்திடுங் குறியுந் தெளிவுடன் கூறி
மெய்யுறு குறியும் கையுறு குறியும்
விழியுறு குறியும் மொழியுறு குறியும்
எவ்வகைக் குறியும் இசைந்திடக் கூறும்
செவ்விதழ்க் குறவஞ் சியுமணு கினளே.

### 44. பாங்கி வந்து கூறல்-அறுசீராசிரியம்

கூவிவருந் திருவுருமா மலைக்குறத்தி
குரற்செவியிற் கொண்ட பாங்கி
மேவியவள் தனைவினவி மேன்மையறிந்
துள்ளிட்டு மோகி னிப்பெண்
தாவியணை மஞ்சமுனர் சென்றங்கே
அவளிருக்குந் தன்மை கண்டே
ஆவிநலிந் தகந்தேறி யணிக்குறத்தி
யணுகியதை யறைகின் றாளே.

### 45. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

வண்ணக் குறமகள் வந்தாள்-வஞ்சியெனுஞ்சீர்(வண்)

(தொடுப்பு)

சின்னஞ் சிறுவயதாள் சிங்காரப் புன்னகையாள்
அன்னமெனும் நடையாள் மின்னுங் கருமுடலாள்(வண்)

(முடிப்பு)

கண்கள் புரண்டுபல கதைகள் சொல்லிக் குலவ
கனமார் தனமி ரண்டுங் கச்சைக் கிழித் துலவ

சங்கக் குலவளைகள் சரிந்தே கரத்தொலிக்கத்
தகதீம் தகவெனவே சதியோடடி நடக்க- (வண்)

மின்னார் இடைதுவள மேலார் பணிசிறக்கப்
பொன்னார் குழலசையப் போதார் சிகைமணக்க
ஒன்னா ரெனினுமவர் உளமே பறிகொடுக்க
மன்னர் திருவுருமா மலையர் புகழொலிக்க (வண்)

### 46. மோகினிமுன் குறத்தி வரல்-கலி விருத்தம்

என்றவுரை கொண்டவெழில் மோகினியுந் தோழீ
சென்றவளைக் கொண்டுவரு வாயெனவே சென்று
முன்றிலிடை நின்றவளைக் கொண்டுவர ஏடீ
குன்றவரை யின்வளமே கூறெனவே கூறும்.

### 47. மலைவளங் கூறல்-எண்சீராசிரியம்

வரைவளமே கூறிடென வுரைமொழியும் பெண்ணே
வழுத்திடுவேன் விருப்புடன்நீ கேட்டிடுவாய் கண்ணே
தரைவளமும் நீர்வளமுங் குறைவிலவா யோங்கும்
தண்பொருநை நாடாமென் தண்டமிழ்சேர் நாட்டில்
நிறைவளமே சேர்குறுக்குத் துறைவதியும் வேலர்
நெருங்கிவரு வார்க்கருளும் நின்மலர்செவ் வேளர்
மறைவளஞ்சேர் திருவுருமா மலையரருள் மலியும்
வண்பொதிகை மலையதுநான் வதியுமலை யம்மே. 1

அடைபனிகொள் ளிமயமலை யரனதுவா மென்றே
அங்குறைதல் தரமலவென்றடி பணிந்து மீண்டேன்
இடையுறுமவ் விந்தமலை இடைஞ்சலெனக் கொண்டே
இருந்திடவு மெண்ணாமல் நடந்துவழி கொண்டேன்
நடைவழியில் நாகமலை யடைந்ததனைத் தள்ளி
நகரிமலை கண்டதனை யகன்றுவழி கொண்டேன்
தடையலதென் றானைமலை தங்கிடவும் மேவித்
தரம்பெரிய தூங்கலென இறங்கிவந்தே னம்மே. 2

மேருமலை சாபமலை ஏறவிலை யம்மே
மேவுதிரி கூடமுங்குற் றாலமலை யம்மே
கூறுமொரு காளத்தியும் கண்பறித்த தென்றே
குடியிருக்க எண்ணாத படிவிடுத்தேன் அம்மே

பேறுதருஞ் சோலைமலை விராலிமலை மற்றும்
பழனிமலை சுவாமிமலை பரங்கிரிதா மெல்லாம்
சீருருமா மலைமருகர் சீதனமா மெனவே
திரும்பவுமே உரிமைகொள்ள விரும்பவிலை யம்மே. 3

பின்னரும்யான் தங்கியகல் குன்றுசில வுண்டே
பேசிடுவேன் கேளாயோ மாசிரியும் அம்மே
மன்னிடவே திருப்பதியில் முன்னியபோ ததனில்
மாலடையு மென்றதாலப் பாலடைந்தே னம்மே
இன்னமுங்கேள் சோழமலை கொல்லிமலை யென்றே
இங்கடைந்து பொதியமலை தங்கியுளே னம்மே
புன்னகைசேர் பொற்கொடியே அன்னதுகொள் வளமே
புகன்றிடுத லரிதெனினும் புகன்றிடுவே னம்மே. 4

நறுங்குறிஞ்சி வளமனைத்தும் நிறைந்திருக்கு மம்மே
நனியகிலுஞ் சந்தனமும் மணம்பெருக்கு மம்மே
பெருங்குழுவாய்த் தேக்குடனே வரைபணையு மம்மே
பொலிவுடனே வான்தடவிப் புதரடரு மம்மே
அருங்காந்தள் வேங்கையுடன் குறிஞ்சிதரும் பூக்கள்
அணியணியாய் மணங்கமழ அலர்ந்திருக்கு மம்மே
வருங்குடத்து முனிக்கருளுந் திருவுருமா மலையர்
வண்டமிழ்சேர் பொதியமலை கொண்டகுடி யம்மே. 5

புலிகரடி சிங்கமிவை மலிந்திருக்கு மம்மே
பெருமலைக ளெனக்கரிகள் திரிந்துலவு மம்மே
பலிகளணு காமலையில் கிளிகள்பறந் தோடும்
படர்முகிலைக் கண்டுமயில் நடமிகவே ஆடும்
ஒலிகிளப்பிக் கானவரும் கிலிபிடித்தே ஓடும்
உழுவைமுத லாயவிலங் கழுவமுறச் சாடும்
கலிகடியுந் திருவுருமா மலைமுருக ராணை
கடவிவரும் பொதியமென்றன் குடியறிவா யம்மே. 6

கரைபுரண்டு பொருநைநதி வரைமுகடு தாவிக்
காத்திரமாய்க் கல்யாணித் தீர்த்தமெனச் சாடும்
சிரைமருண்டு மரங்களிலே விரைந்தலறித் தாவும்
சிலையெனவே நின்றுபுலி நிலைகுலைந்தே ஓடும்
நுரைதிரண்டு பொங்குபுனல் சுரந்தவறா திசைக்கும்
நுடங்குபல குழைதழைகள் நடம்பயின்றே குதிக்கும்

திரைபுரண்டு வருபொருநைக் கரையுருமா மலையர்
தேயமுறும் பொதியமெனக் காயகுடி யம்மே. 7

காடுதொறுந் தினைவிதைத்துப் பாடுபல புரிவோம்
காண்மலைநெல் வரையரிசி வேணவைதாம் பெறுவோம்
கூடுதொறும் நாடியுந்தேன் கொண்டதுவாய் மடுப்போம்
கும்பகரிக் கொம்பதனால் கம்புதினை யிடிப்போம்
வீடுவரும் விருந்தினரை நாடியவை கொடுப்போம்
விழுமருவி நுழைந்தாடிச் செழுஞ்சுனைநீர் குடிப்போம்
தேடுபெருஞ் செல்வமிகு திருவுருமா மலையர்
செலுத்தாணை சேர்பொதிகை நிலைத்தகுடி யம்மே. 8

### 48. மோகினி கூற்று-கொச்சகக் கலிப்பா

காட்டுவளம் நிறைந்துயர்ந்து கவினுறுசீர் பொதியமெனும்
கோட்டுவளம் நீமொழியக் கேட்டுமனம் மகிழ்வடைந்தேன்
பாட்டுவளஞ் சேர்முருகர் பயில்குறுக்குத் துறையணியும்
நாட்டுவளம் நீயுரைப்பாய் நல்லகுற வஞ்சியளே.

### 49. குறத்தி நாட்டுவளங் கூறல்-பன்னிரு சீராசிரியம்

நெல்லை நகரின் மருங்கெங்கும்
நீள்செய் தோறும் நிறைசாலி
நெடுக வேலி யெனவமைந்து
நெல்வே லியெனும் பெயர்விளக்கும்
நெல்லை நாதர்க் கந்தணர்தாம்
நேர்ந்தே யுலர விட்டிருந்த
நெல்லை நனையா தடைமழையில்
நிமலர் காத்த அருளாலே
நெல்லை யப்பர் அவரானார்
நெல்வே லியெனப் பதிவிளங்கி
நிலைத்த மூதூர் தனைச்சார்ந்த
நிகரில் நாடே என்நாடாம்
தொல்லை தவிர்த்தே வீடளிக்கும்
தூயர் குறுக்குத் துறைநாதர்
துலங்கும் நலஞ்சேர் தமிழ்நாடே
தோகை யெனது நாடம்மே. 1

வியனார் மடவார் இன்மொழியை
வெல்லு மென்றே தீங்கரும்பை

வெட்டிப் பலவாய்க் குழிதோண்டி
விரைந்தே புதைப்ப ராடவரும்
அயரா ததுவும் முளைத்தோங்கி
அரிவை மார்தம் புயம்வென்றும்
அரிய முத்தம் பலவீன்றும்
அவர்தம் மூரல் புறங்கண்டும்
குயமே கொண்டு வெட்டிடினும்
குனிந்து சிலையாய் மன்மதனின்
கொடுங்கை நின்றவ் வாண்பெண்ணைக்
குலையக் குலைய வதைபுரிந்து
செயமார்ந் தோங்குஞ் செய்யடரும்
திருவார் நெல்லைத் தமிழ்நாடாம்
சீரார் குறுக்குத் துறைசூழும்
திருநா டெங்கள் நாடம்மே. 2

கொடுத்துக் கொடுத்தே குறைந்தழிந்தார்
குணமார் நமது முன்னோர்கள்
கொடுப்ப தினியுங் கேடெனவே
கொடையைத் தவிர்க்க நினையாமல்
தொடுத்துக் கொடுத்தே புகழடையும்
தூய குடியிற் பிறந்தார்போல்
தேனார் கனிதந் துதவியபின்
துண்டிக் கவிழும் மரம்பையின்கீழ்
அடுத்துக் கிளம்பி யணியணியாய்
அடர்கன் றுபல வளர்ந்தோங்கி
அவையுங் கனிதந் தளிபுரியும்
அறஞ்சேர் நெல்லைத் தமிழ்நாடாம்
எடுத்த வேலால் சூர்தொலைத்தே
இனிதாய்த் தேவர்க் கருள்வேலன்
இருக்குங் குறுக்குத் துறைநாடே
எங்கட் கினிய நாடம்மே. 3

### 50. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: புன்னாகவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

சொல்லக்கே ளாயம்மே சொல்லக்கேளாய்-நம்
செந்தமிழார் நாட்டுவளம் சொல்லக் கேளாய்(சொல்)

(தொடுப்பு)

நல்லவளஞ் சேர்குறுக்குத் துறைவேலவர் - அருள்
நயக்குந்தென் னாட்டுவளம் சொல்லக்கேளாய்(சொல்)

(முடிப்பு)

நல்லவிதம் வான்பொழிந்து நாடுசெழிக்கும் - இரு
நாலுவகை தானியங்கள் பீடுகொழிக்கும்
பள்ளமுறு நீர்நிலைநீர் ஏறிஒலிக்கும் - அங்குப்
பல்வகையாம் மீன்கள்பல மேவிக் கலிக்கும் -(சொல்)

கால்நடைகள் தாம்பலவா யெங்கும்நிறையும் - அவை
கண்டவிடம் பால்சொரிந்தங் கங்கேஉறையும்
சேல்விழியம் மாதருறு கற்பின் நிறையும் - சொல்லச்
சேடனுமே தான்மயங்கி ஆவிகுறையும் - (சொல்)

பால்மொழி யிளஞ்சிறுவர் ஆடித்திரியும் - மறுகு
பண்படருங் குதலைமொழி யாலே நிறையும்
கால்வழிகொள் நீரைத்தலையாலே கொடுக்கும் - தெங்கின்
காய்களுமே குலைகுலையாய்க் காய்த்துச் சொரியும்(சொல்)

மருதுபல மிக்குயர்ந்து வானைத்தடவும் - அதில்
வாழ்ந்துவருங் கிள்ளைகளும் நாதம்பொழியும்
பருவமுறு மெல்லிடையர் பாதம் புலம்பும் - அதைப்
பார்த்திருந்த காளையரின் நெஞ்சும் புலம்பும் - (சொல்)

**51. மோகினி தல மகிமைகேட்டல்-அறுசீராசிரியம்**

மூங்கிலடி முளைத்தெழுந்த முத்தரருள்
முருகபிரான் மேவி வாழும்
ஓங்கியசீர் திருவுருமா மலைநாட்டி
னுற்றவள முரைத்தாய் மற்றும்
ஆங்கியலுந் தலமகிமை தான்கிளத்து
வாயெனவே அணிகு றத்தி
பாங்கியர்சூழ்ந் திடவிருக்கும் மோகினியாள்
தானறிய பகர்கின் றாளே

**52. குறத்தி தல மகிமை கூறல்-நேரிசை வெண்பா**

மாண்பார் திருவுரு மாமலையென் றித்தலமே
பூண்பேர் மகிமை புகலக்கேள் - காண்பார்தம்

உள்ளமதி லாடி யுருக்கிப் பதங்குலைக்குங்
கள்ளவிழ்பூங் கோதாய் கனிந்து.

### 53. இதுவுமது-கண்ணிகள்

சுந்தரஞ்சேர் மோகினிப்பெண் ணேபுகல் வேனே - நீயும்
சோர்விலாமற் கேட்டிடுவாய் ஆர்வமோ டம்மே
செந்தினகர்க் கந்தனுக்குச் சுந்தர மேனி - செய்யத்
திருவுருவம் பாறையொன்றில் தீட்டினா ரிங்கே. 1

அந்தவடி வந்தனையோ ரம்மையார் கண்டு - நெஞ்சில்
அன்புகொண்டே நாளுமாரா தித்தன ரம்மே
சந்தமாரவ் வம்மைபிள்ளை யன்குலத் தாரே - தூய
தவநெறியில் நின்றுயர்ந்த சால்புளா ரம்மே. 2

அம்மையார்வ ணங்கிவந்த அவ்வுரு தானும் - மிக்க
அருணிறைந்து தொண்டர்தமை ஆர்த்ததே யம்மே
இம்மையின்பம் நாடடியார் ஏகமாய்க் கூடி - வேலை
ஏந்தழகற் காலயமொன் றெழுப்பின ரம்மே. 3

நம்மையாளும் நாயகன்றான் நாடுமக் கோவில் - தூய
நற்றிருவா வடுதுறையர் நாட்டினா ரம்மே
செம்மையாக வேண்டியாங்கு திருப்பணி செய்தே - நாளும்
செய்வழிபா டாயவெல்லாஞ் சேர்த்தன ரம்மே. 4

சீரலைவாய் தன்னிலோங்குஞ் சேவலன் தானே - இங்குத்
திருவருட்கொண் டுறைவதாமோர் சீருடைத் தம்மே
தீரவடி வேலனுரு சேர்மலை கொண்ட - தாலே
திருவுருமா மலையெனவே செப்பின ரம்மே. 5

நேரணித்தாய் வீடளிப்பான் நின்மல னிங்கே - அந்த
நியதியிற்பேர் குறுக்குத்துறை ஆயதே யம்மே
கோருகின்ற வரமளிக்குங் குமரனிங் கார்ந்து - கோயிற்
கொண்டதாலே குமரகோட்டம் ஆயதே யம்மே. 6

### 54. கிளைவளம் கேட்டல் - அறுசீராசிரியம்

வளமகிமை சேர்குறுக்குத் துறையுறையும்
வேலவரின் வரையி லார்ந்த
வளமகிமை முதன்மொழிந்து பின்னரவர்
அருள்வளத்தால் வளரும் நாட்டின்

வளமகிமை யோடவரின் தலமகிமை
தானுரைத்தாய் வருகு லத்தின்
வளமகிமை தனையறிய வழுத்தாயோ
வண்பொதிகை வஞ்சி யாளே.

### 55. கிளைவளம் கூறல் - கண்ணிகள்

இராகம்: அடாணா தாளம்: ரூபகம்

அண்டமெ னும்பெரும் பம்பரத் தையருட்
சாட்டையா லாட்டிடுவார் - கருங்
கொண்டல டர்குறுக் குத்துறை வேலவர்
குலவளங் கேட்டிடுவாய். 1

மெய்யறி வானந்தர் மையணி கண்டரம்
மேலவ ராமரனார் - இவர்க்
கையரே மாமலை யாளுமை பார்வதி
அம்மைய ராமறிவாய். 2

யானையென் றேவந்து எங்குல வள்ளியை
இன்னவர் பால்பிணைத்த - அந்த
யானைமு கத்தவர் தாமிவர்க் கண்ணனென்
றேயறி வாய்மனத்தே. 3

பாற்கடல் மேல்துயில் கொண்டத லாலவள்
பயந்தம கள்திருவைத் - தன்
மார்பகத் தேயணை மாலவர் தாமிவர்
மாமனு மென்றறிவை. 4

அஞ்சுத லைகளி லொன்றினை யேசிவன்
அங்கையி னாலிழந்த - அந்தக்
கஞ்சமார் வேதியன் கந்தனின் மைத்துனன்
என்றறி வாய்திருந்த. 5

மாமக ளுந்திரு மாமலை வேலவர்
மாமியென் றேயறிவாய் - அந்த
நாமக ளாங்கலை சேர்மக ளுந்தமக்
கையென வேதெரிவாய். 6

மன்மத னின்னவர் மாமனின் பிள்ளையென்
றால்ரதி சோதரியே - சிவன்

சின்மயன் வேணியில் தங்கிய கங்கையும்
சிற்றனை தான்தெரியே. 7

வள்ளியெ னும்மட மானுடன் வெள்ளிய
மாதங்கம் பெற்றபெண்ணை - இவர்
உள்ளிம ணந்ததும் உதவிம ணந்ததும்
ஊரறி யாதோ அம்மே. 8

### 56. குறிவளங் கேட்டல் - அறுசீராசிரியம்

தரம்பிளந்த மாமலையர் தமைச்சார்ந்த
வளமெல்லாஞ் சாற்றி நின்றாய்
கரம்பிடித்து முகம்நோக்கிக் கண்டுகுறி
சொல்வளத்தைக் கனிவி னோடு
பிரம்பணிந்த கரத்தாளே பேசிடென
மோகினிப்பெண் புகல நன்கு
குறம்பகரும் வஞ்சியும்தன் குறிவளத்தைக்
கோப்புடனே கூறி னாளே.

### 57. தன்குறிவளங் கூறல் - இசைப்பாட்டு

இராகம்: கமாசு தாளம்: ஆதி

(எடுப்பு)

சேலாருங் கண்ணாளே கேளாயம்மே
சிறிய குறத்தி என்றன் குறியின் திறத்தை நன்கு -
(சேலா)

(தொடுப்பு)

நாலாவி தக்குறியும் நலமுடனே புகன்று
நானடைந்த பரிசும் நவின்றிடுவேன் பரிந்து -(சேலா)

(முடிப்பு)

வங்கமு டன்கலிங்கம் வரண்டுள நடுதேயம்
வடுகர்நிறை தெலுங்கம் வளர்கலைசேர் பல்லவம்
துங்கவ ளச்சோழம் செந்தமிழ் சேர்பாண்டி
சிங்கள மும்சென்று சிறப்படைந்தது முண்டு(சேலா)

கேரளமும் குடகும் கன்னடமும் பம்பாயும்
கூர்ஜர மும்ராஜ புதனமும் பஞ்சாபும்

சீரணியும் தில்லி செழிப்படரும் உத்தரம்
சென்றுகுறி புகன்று செயமடைந்தது முண்டு(சேலா)

மலையரசன் செல்வி மடப்பிடி பார்வதி
மலையத்து வஜன்மகள் மடக்கொடி மீனாட்சி
அலைதுயி லரங்கனின் ஆசைகொள் இலக்குமி
அன்னவர் பாலடைந்த அதிக விருதுமுண்டு(சேலா)

## 58. தன்குறி மோகினி கேட்டல் - அறுசீராசிரியம்

வஞ்சிநீ புகன்ற தெல்லாம் வகையுடன் புரிந்து ளேன்மீன்
குஞ்சினுக் கெவரும் நீந்தக் கற்றுமே தரவேண் டாங்காண்
செஞ்சொலாய் சீர்குறுக்குத் துறையுறை நாட்ட ளேயென்
நெஞ்சினுக் கினிக்கு மாறு நீயொரு குறிசொல் வாயே.

## 59. குறத்தி கூறல் - எண்சீராசிரியம்

நல்லகுறி நானுனக்குச் சொல்லிடுவே னம்மே
நாட்டிலெனை எதிர்ப்பவரை வாட்டிடுவே னம்மே
வல்லகுறி யென்போலும் சொல்லுபவ ரம்மே
வையகத்தில் யாருமிலர் மெய்யிதுதா னம்மே
சொல்லிடுவேன் நீபழைய சோறிடுவா யம்மே
சோற்றிலுறுங் கஞ்சியேனும் ஊற்றிடுவா யம்மே
இல்லெனிலோ காடியேனும் நல்கிடுவா யம்மே
இடைதனக்குக் கிழிந்தபழம் புடவையுந்தா அம்மே.

வாய்சிவக்க வாடியுலர் வெற்றிலையும் பாக்கும்
வாசமுள்ள புகையிலையும் வழங்கிடுவா யம்மே
ஏய்சிவப்பி யம்மையுனக் கேற்றம்வரு தேகாண்
இடப்புறத்தே காகமதும் இயம்பிடுதே யம்மே
வேய்சிவன்கண் வேலமுதுன் விழிகடலு ளம்மே
வெளிப்படுதே கன்னிவாக்கு விளம்புகிறா ளம்மே
சேய்சிவப்பன் திருவுருமா மலைமுருக னென்னுந்
தெய்வமுனக் குண்டுதுணை தெரிந்திடுவா யம்மே.

## 60. கவியின் கூற்று - கொச்சகக்கலிப்பா

பொதிகைமலைக் குறத்தியவள் புடைசூழ்ந்த பாங்கியரை
அதிவிரைவில் தரைமெழுகி ஆவனசெய் வீரெனவே

குதித்தெழுந்து தாதியருங் குறத்திபுகல் கொள்கையினில்
விதிப்படியே வேணவெலாம் வேகமுடன் செய்தனரே.

### 61. ஆவன செய்தல் - கண்ணிகள்

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

வளமாய்த் தரைமெழுகி - நல்ல
வரிசேர் கோலமிழைத்தார்-திரு
வாரணன் தனையிருத்திப்
பூரண கும்ப மமைத்தார். 1

பாங்கா யிலைவிரித்தார் - கருந்
தேங்காய் சிலவுடைத்தார்-துவர்ப்
பாக்குடன் வெள்ளிலை வைத்தார்
ஆக்கமுடன் தீபம் வைத்தார். 2

நலமா யவல் பொறியும் - சருக்
கரையும் நிறைபுனலும் - நிறை
நாழியு மளந்து வைத்தார்
நாண்மலரறு கணிந்தார். 3

அகிலார் புகைகாட்டி - ஒளி
அணிசூ டனுமேற்றி - மலை
ஆண்டவனையே பணிந்தார்
வேண்டியருளை நினைந்தார்- (வள) 4

### 62. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

திசைமுகனைச் சிறைவைத்த திருவுருமா
மலையுரைத்தன் சிந்தை தன்னில்
நசையுடனே சிறைவைத்து நங்கைமோ
கினியடையும் நலிவு தீர
இசைவுடனே தேவதைகள் யாவரையும்
வாக்கதினால் இழுத்துள் ளத்தே
அசைவிலளாய்ச் சிறைவைத்துக் குறிசொலவே
அணிகுறத்தி ஆரம் பித்தாள்.

### 63. குறத்தி தெய்வம் வணங்கல் - நிலைமண்டில ஆசிரியப்பா

குறுக்குத் துறையுறை குமரனே முருகா
திருக்கர வேலணி சிகிவா கனனே

என்குல வள்ளியே பொன்பிணை மகளே
இந்திரன் தாங்கிய தந்தியின் செல்வீ
சத்தி விநாயகா தொந்தி வயிறனே

நெல்லையின் முதல்வா நேரிழை பாகனே
வெள்ளணி நாதனே வேய்தரும் முத்தே
காந்தி மதியெனும் சாந்த முகத்தளே
பிட்டா கரத்தியே பிடாரியென் துர்க்கையே
சந்தன மாரியே சண்டிகேஸ் வரனே

சங்கிலிப் பூதனே சாமுண்டி சாத்தனே
கால பயிரவா காட்டேரி வைரவா
ஆல விழியாள் ஆற்றங் கரைநீலி
கோலக் குறுமுனி குடத்தகத் தியனே
சுடுகாட்டுச் சுடலை சொரிமுத்துப் பட்டா

துடிசேர் கருப்பா துள்ளிவரும் மாடா
எண்ணாத தெய்வங்காள் எல்லோரும் வருவீர்
பெண்ணாள் மனக்குறி புரிந்திட அருள்வீர்
முன்னால் இருக்குமிம் மோகினிப் பெண்ணாள்
உன்னியே கேட்பதும் உயிரோ செம்பொனோ

கட்டிப் பணிதியோ கலவைச்சந் தனமோ
அட்டிற் பொருளோ அருமணி முத்தமோ
புனுகுகஸ் தூரியோ பொருளொடு புதையலோ
தன்பொருள் களவினில் தானிழந் ததுவோ
பெண்ணிவள் நலிவது கண்ணெறி தோஷமோ

நண்ணிய பருவமே நல்கிய குழப்பமோ
அழகனைக் கண்டுகொள் ஆசை மயக்கமோ
குழகனு மிவள்பால் கொண்டதோர் காதலோ
இன்ன குறிகளில் என்ன குறியென
என்மன முணர்ந்திட இசைத்தருள் வீரே.

### 64. கவியின் கூற்று-கொச்சகக் கலிப்பா

எக்குறியுந் தேர்ந்தெளிதாய் ஏற்றமுடன் சொல்லுமந்த
மைக்கண்ணாள் குறத்தியுரு மாமலைவாழ் வேல்முருகன்
பக்கமுற வேவிரும்பும் பைங்கிளியாம் மோகினியின்
கைக்குறியைக் கண்டுசொலக் கைகாட்டா யென்றாளே.

### 65. கைபார்த்துக் குறிசொல்லல் - ஆனந்தக் களிப்பு

மோகினிப் பெண்ணே கை காட்டாய் - பைம்பொன்
முத்திரை மோதிர மிட்டகை காட்டாய்
பாகினு மினியசொல் லாளே-பொன்னார்
பைந்தொடி குலுங்குமுன் பவளக்கை காட்டாய். 1

நெளியிட்ட தளிர்க்கரங் காட்டாய்-துய்ய
நித்திலச் சூடகந் தரித்தகை காட்டாய்
நளினமோ டேசங்க ரேகை-படர்
நலமாரும் நின்னெழிற் கரந்தனைக் காட்டாய். 2

பொன்னான கையுமீ தம்மே - செல்வம்
பொங்கியே நவநிதி அளைகர மம்மே
என்னாளும் பேரறம் வளர்த்து - இனிய
இல்லறமும் நல்லறமாய் ஆக்கிடுமிக் கையே. 3

விருந்தோம்பிப் போற்றிடுமிக் கையே - இந்த
வியனுலக மெதிர்நோக்கி விரும்பிவருங் கையே
மருந்தாகும் பாரிந்தக் கையே - நோயால்
வாடுபவர் மேற்படவும் ஓடிடுமந் நோயே. 4

தொட்டவெலாம் பொன்னாக்குங் கையே - துன்பம்
கிட்டவர வொட்டாமல் தட்டிவிடுங் கையே
மட்டொழுகுஞ் சோலையணி துறையர் - உருமா
மலையருமெ டுத்தன்பாய் முத்தமருள் கையே. 5

### 66. குறிசொல்லல் - அறுசீராசிரியம்

கரங்காட்டுங் குறிநோக்கின் கவினுருமா
மலைவாழுங் கந்த வேளின்
தரங்காட்டுந் தோள்தழுவுந் தளிர்க்கரமாய்த்
தோணுதே தடங்கண் மானே
குரங்காட்ட முனையாட்டுங் கொடும்பிணியும்
வேறிலைநீ கொண்ட காதற்
சுரங்காட்டு தேயானுஞ் சொன்னகுறி
தவறாது தோகை யாளே.

### 67. இதுவுமது - வேறு

சாலியி னடியி லிட்ட தலையுறு பேனும் வந்து
மேலுள மஞ்சள் மீது மேவிய தாலே கொஞ்ச

காலம தற்குள் நல்ல கணவனும் வருவா னென்றுஞ்
சீலமார் குமரக் கோட்டன் திருவருள் நினக்குண் டம்மே.

### 68. இதுவுமது - கண்ணிகள்

(குறத்தி கூறல்)

மின்னாரும் மோகினியே - எழிற் - சின்னப்பெண்ணே
மேவுகுறி கேளாயம்மே
பொன்னாரும் மேனியளே - எழிற் - சின்னப்பெண்ணே
பேசுங்குறி கேளாயம்மே. 1

தென்னாருந் திருவுருமா - மலை - வீதியிலே
செவ்வழகன் பவனியிலே
பின்னாருஞ் சேனைகண்டு - மனம் - நீபயந்து
பேதலித்த துண்டுமம்மே. 2

(மோகினி கூறல்)

என்னேநீ கூறவந்தாய் - அடி - குறச்சிங்கி
ஏற்காத வார்த்தை சொன்னாய்
முன்னே நீ சொன்னகுறி - அடி - குறச்சிங்கி
முற்றிலுமே உண்மையடி. 3

இன்னேரம் சொன்னமொழி - அடி - குறச்சிங்கி
இம்மியும்பொ ருந்திடுமோ
பின்னடருஞ் சேனைகண்டால் - கிறு - கிறுத்து
பேதலிக்குங் காய்ச்சலுண்டோ. 4

(குறத்தி கூறல்)

காய்ச்சலிது காய்ச்சலல்ல - எழிற் - சின்னப்பெண்ணே
காமமிகு காய்ச்சலம்மே
கூச்சலிடு வாயெனவே - பயம் - கொண்டதனால்
கூறவில்லை முன்னரேயான். 5

பாய்ந்தெழும்பிப் பந்தடிக்குந் - தரு - ணந்தனிலே
பாங்குடனே பவனிவந்த
சேந்தனவன் மீதலவோ - எழிற் -
சின்னப்பெண்ணே
சித்தங்கொண்டு பித்தடைந்தாய். 6

(மோகினி கூறல்)

பின்னமின்றி நானிருக்க - அடி - குறச்சிங்கி
பித்தியென்று சொல்லிவிட்டாய்
சொன்னகுறி உண்மையானால் - அவன் - பேருடனே
தாருமூருஞ் சொல்லடியே. 7

(குறத்தி கூறல்)

உன்னிலும்நா னறிகுவனோ - குறி - சொல்லிடுங்கால்
ஊரும்பேரும் சொல்லுவாரோ
பின்னுனக்கே சொல்லிடுவேன் - அவன் - பேரழகன்
பிள்ளைதர வல்லவன்காண். 8

(மோகினி கூறல்)

பொல்லாத வார்த்தைசொன்னாய் - அடி- பிள்ளைதர
வல்லவனென் றேமொழிந்தாய்
சொல்லால்ம யக்கிடாதே - அடி - குறக்கள்ளி
சுத்தமாகச் சொல்லடியே. 9

(குறத்தி கூறல்)

நல்லதுகேள் பேரழகன் - எனில் - மாமுருகன்
பிள்ளையுஞ்சேய் தரும்மலையாம்
வல்லவனும் நாதனாகும் - முரு - கன்சேயன்
மலைநாத னென்றறிவாய். 10

69. மோகினி நாணல் - எண்சீராசிரியம்

முருகனெனும் மலைநாத னென்ற போதில்
முகம்நாணி மோகினிப்பெண் தலைகவிழ்ந்தாள்
வருவரவர் நாளையுனை மாலை சூட்ட
வனிதாயுன் நாணமெலா மினியே தம்மா
ஒருநொடியில் நறுங்கடப்ப முன்பால் மேவும்
உன்னுவையோ என்னையொரு தடவை யென்னப்
பெருமகிழ்வு கொண்டவளாய் மோகி னிப்பெண்
பூட்டினளோர் பொன்னணியைக் குறத்திக் கேதான்.

70. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

பாங்குடனே மோகினிக்குப் பகர்ந்துகுறி
பரிசுபல பெற்ற சிங்கி

ஓங்குமகிழ் வோடுருமா மலைவீதி
மருங்கெல்லா முலவு வேளை
ஆங்கவளின் கரம்பிடித்த ஆசைமிகு
குறச்சிங்கன் அடலே றன்னான்
எங்குமன மோடிவளைத் தேடுமுன
ருற்றசெய லியம்பு வாமே.

### 71. சிங்கன் தோற்றம் - அறுசீராசிரியம்

இடைதொட்டுத் தொடைமட்டும் மறைக்கின்ற
சல்லடமும் இழுத்துக் கட்டி
நடைதொட்டுப் பின்றொடரும் நீள்தலையன
குறுவாலன் நாற்கால் பாய்ச்சன்
சடைக்குட்டன் எனும்நான்கு சுணங்கருடன்
குறுக்குத்துறை சவியார் சிங்கன்
புடைதொட்ட குடம்பையுடன் முடைநாற்றம்
முன்மணக்கப் புறப்பட் டானே.

### 72. இதுவுமது - இசைப்பாட்டு

**இராகம்:** சுருட்டி **தாளம்:** ஆதி

**(எடுப்பு)**

கருமலைபோல் சிங்கன் வந்தான் - வலைக்
கரமுடன் குளுவனுந்தான் கூடத்தொடர்ந்தான்(கரு)

**(தொடுப்பு)**

திருவுரு மாமலை சேருங்குறவன் வந்தான்
திடமானவுடலன் வந்தான் திகழ்ந்து வந்தான் (கரு)

**(முடிப்பு)**

ஈட்டிக் கரம்பிடித்து இறுகும் கண்ணிகள் கொண்டு
தாட்டீக முடனேவந்தான் சடுதிவந்தான் (கரு)

குலமணிப் பாசிபூண்டு கொக்கினிறகு சூடி
நலமாரும் நீறணிந்து நடைபொலிந்து (கரு)

அடர்ந்த மீசைமுறுக்கி அரிவாள் இடைச்செருகி
மிடைந்த சுணங்கருடனே மிடுக்குடனே (கரு)

வேட்டைதனை விரும்பி விழிப்புடனே நடந்து
நாட்டமோ டுபறவைகள் நயந்தலைந்து (கரு)

### 73. சிங்கன் தன்வலி கூறல் - அறுசீராசிரியம்

சிங்கமுக னோடுபலர் சூழவருஞ்
சூரனையச் சுற்ற மோடு
பங்கமுறக் கொன்றகுறுக் குத்துறைசேர்
பாலவடி வேலர் நாட்டில்
எங்கணுமே குக்கலெனத் தடங்கண்டு
பூனையென இருந்தொ ளிந்து
சிங்கமெனப் பாய்ந்தோடித் திறமையுடன்
வேட்டைபுரி சிங்கன் யானே.

### 74. இதுவுமதுவு - இசைப்பாட்டு

இராகம்: நாதநாமக்கிரியை தாளம்: ஆதி

(எடுப்பு)

சிங்காதி சிங்கனும் நான்தானே செகம்புகழும்-(சிங்கா)

(தொடுப்பு)

துங்குமுறுங் குறுக்குத் துறையரைப் பணிந்தேன்
இங்கெவரு மெனக்கு இணையிலர் துணிந்தேன்(சிங்)

(முடிப்பு)

அமரர்கள் துயரற அயிலினை எடுக்கும்
அடர்ந்தெழு மசுரரின் ஆவியைக் கெடுக்கும்
குமரனின் அருளடர் பொதிகையை அடுக்கும்
கோலம யின்முதலாம் பறவைகள் படுக்கும் (சிங்)

திருவுரு மாமலை முருகனை இகழ்வார்
திண்ணிய நரம்பினைக் கண்ணிகள் முறுக்கிப்
பறவைகள் பிடிப்பத லாலவர் தோலைப்
படர்முர சாக்கியே திடுமென அடிக்கும் (சிங்)

குறமக ளொருபுறம் சுரமகள் மறுபால்
குலவிடு முருகனெம் மலையுறை குகனாம்
சரவண னெனுமவன் சரணமே கதியாய்த்
தரித்தவன் புகழ்தனை விரித்திடச் சலியாச் (சிங்)

### 75. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

கொக்கினையே பிளந்துமொரு கோலமயில்
கொண்டதலாற் கோழி யொன்றைச்

சிக்கெனவே பிடித்தகுறுக் குத்துறையர்
திருநாட்டுச் சிங்க னோடு
பக்கமுற வருகுளுவன் பதுங்கிநின்று
பறவைகள்போல் பாங்காய்க் கூவ
பொக்கமுறவ் வொலியால்சூழ் புள்ளினங்கள்
கண்டுசிங்கன் புகலு வானே.

76. சிங்கன் கூற்று - இசைப்பாட்டு

இராகம்: புன்னாகவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

சாடுதடையே - பறவைகள் - சாடுதடையே (சாடு)

(தொடுப்பு)

கூடுபுகழ்குறுக் குத்துறை வேலவர்
கோலத்திருவடி கூடிய தொண்டரை
நாடுமருள்வெள்ளம் போலவே புள்ளினம்
நானாதிசையினும் தானாய்த் திரண்டிவண்(சாடு)

(முடிப்பு)

நாரை வருகுது நன்மயின் கூடுது
நாகணை வாய்க்குலம் நாடி வருகுது
காரை வலியனுங் காக்கையும் நாடுது
காடை வருகுது கம்புளுஞ் சேருது
வாரை யுடனகில் வானுயர் தேக்கடர்
வண்பொதி யந்தனில் விண்கருத் தேமுகில்
தாரை பொழிந்திடத் தாமிர பன்னியில்
சாடும் பெரும்புனற் கூடக் குறைவெனச்-(சாடு)

கொக்கினங் கூடுது வக்காவும் நாடுது
கூழைக் கடாபல தாழக் குதிக்குது
வக்கணை யாய்க்கிளி பக்கங் குவியுது
வாலாட்டிப் புட்களும் ஆலாவுஞ் சாயுது
திக்கெலாம் போற்றிடுந் தெய்வக் குறள்தனைத்
தெள்ளத் தெளிவுடன் தேர்ந்து படித்தவர்
தக்க முறைப்படிச் சாற்றிடப் பேருரை
தட்டில தாய்வெளிப்பட்ட பொருளெனச்-(சாடு)

உள்ளான் வருகுது ஊர்க்குரு வித்திரள்
ஓடி வருகுது சாடுது மீன் குத்தி
கள்ளத் தனமிகுங் காக்கை வருகுது
கான்திரி கோழிகள் தாம்பல மேவுது
தள்ளிக் குதித்துமே தாரா குவியுது
தவிட்டுப் புறாபல தங்கி நிறையுது
அள்ளக் குறைவில தாய ருணகிரி
ஆக்கு திருப்புகழ் வாக்கினைப் போலவே (சாடு)

ஆறு முகன்ற,னக் காவணி மாதத்தில்
அமிர்தலால் கேசவ ஜோஷி நடத்திடும்
சீருஞ் சிறப்புஞ் செறிந்திலங் குகின்ற
தெப்பத் திருவிழா தன்னைக்கா ணத்திரள்
சேருந் தகவினிற் செங்கா லனங்களுஞ்
சிட்டுக் குருவியுஞ் சிம்புட் பறவையும்
மீறுந் திறமிகு செம்போத்துக் கூட்டமும்
மேன்மை மிகுகுறுக் குத்துறை நாடியே (சாடு)

### 77. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

ஆலோல மெனக்கூவி யரும்புனத்தே
புள்விரட்டு மரிவை மீது
மாலோடு செல்லுருமா மலைவேலர்
நாட்டினிலெம் மருங்கும் புட்கள்
சேலோடு கனிவகையுந் தானியமுஞ்
சிரமமின்றித் தேடி மேயும்
கோலாக லத்தையெலாங் குளுவனிடங்
குறச்சிங்கன் கூறி னானே.

### 78. (சிங்கன் கூறல் - இசைப்பாட்டு

இராகம்: பந்துவராளி தாளம்: ஆதி

(எடுப்பு)

புள்ளினம் மேயுதையே-குளுவா (புள்)

(தொடுப்பு)

துள்ளிடும் மானைத் துரத்திவந் தேனெனச்
சொல்லிப் பலமொழி எள்ளி சரசமாய்
வள்ளிக் குறத்தியைக் கள்ளத் தனமுடன்
வாரி யணைத்தவர் ஊரின் புறமெல்லாம்(புள்)

(முடிப்பு)

போகப் பணைசூழ்வி ளாகப் புறம்பிலும்
பூவைத் துறந்தவர் மேவிப் பலருடன்
ஆகத் திறுதியில் வேகுந் திடர்நிறை
அந்த மிகுகருப் பன்றுறை தன்னிலும்
பாகத் துடன்குட பாளையஞ் சுற்றிலும்
பக்கத் துறுசிறு நத்தத் திடலிலும்
நாகத் தணைதுயில் மேகக் கிருட்டிணன்
நாளுந் தங்குதிரு வாலயப் பாங்கினும் (புள்)

துள்ளு மயிலவர்க் குள்ள திருக்கோவில்
சூழ்ந்திடு மாமரச் சோலையி னுள்ளினும்
அள்ளற் பணையடுத் துள்ள சிக்கல்நர
சையன்கி ராமத்தை மொய்யடர் காவிலும்
வெள்ளம் வரின்குகன் மேவி யருள்புரி
மேலக் கோவிலணி சோலைப் புறத்தினும்
உள்ளங் கவரெழில் கொள்சிந்து பூந்துறை
உள்ளும் புறமும் ஒருங்கே திரண்டுதான் (புள்)

நன்பயி ரோங்கிடுந் தென்பத்து தன்னிலும்
நாட்டுக்கோட் டைச்செட்டி மார்மடஞ் சுற்றிலும்
வன்மங்கொண் டேபழி வாங்கிய நீலியும்
வாசம் புரிதிரு வாலயப் பாங்கினும்
இன்பமு டன்பணை நன்கு பயன்றர
என்றும் புனல்தரும் தாம்பிர பன்னியின்
மன்கரை மேவும் மடங்களைச் சுற்றிலும்
மாமரக் காவினும் தாமனம் போலவே- (புள்)

எங்கும் மிகுவெள்ளம் பொங்கி நிறையினும்
என்று மழியாது நின்று நிலைத்திடும்
துங்க மிகுமழி யாப்பிள்ளை யார்கோவிற்
சுற்றுப் புறத்தினும் நற்றவ னாமேழை
புங்க மிகுமமா வாசைப் பரதேசிப்
பேர்பெறு காவினுஞ் சோர்வறக் கூடியே
தங்கி மனம்போலும் பொங்கு மகிழ்வுடன்
தட்டில தாயிரை பெற்று நிரையாகப் - (புள்)

### 79. சிங்கியை நினைத்தல் - அறுசீராசிரியம்

குருகுக் கூட்டம் மேய்வதுகண்
கொண்ட குறுக்குத் துறைச்சிங்கன்
அருகே நிற்குங் குளுவனையே
அடடே கண்ணி வைத்திடெனப்
பெருகு மகிழ்வோ டுரைசெய்து
பதுங்கிச் செல்ல வோர்கிளைமேல்
மருவு மிரண்டு கிளிகண்டான்
மயலார் சிங்கி யுளங்கொண்டான்.

### 80. சிங்கன் புலம்பல் - எண்சீராசிரியம்

எழிலாருஞ் சிங்கிதனக் கேங்கும் சிங்கன்
எதிரேகாண் பறவைகளை யெண்ணா மற்றண்
பொழிலாருந் திருவுருமா மலையர் நாட்டில்
போனவிட மெதுவோஎன் பெண்ணா ளென்றே

வழியேதும் புரியாமல் வதனம் வாடி
வந்தவினை மறந்தேதன் வண்ணக் கிள்ளை
மொழியாளை நினைந்துமயல் மூழ்கி நொந்தே
முன்நிற்குங் குளுவனிடம் மொழிகின் றானே.

### 81. இதுவுமது - இசைப்பாட்டு

இராகம்: முகாரி தாளம்: ரூபகம்

(எடுப்பு)

எங்கேதான் தேடுவே னய்யோ-என் சிங்கிதன்னை.....(எங்)

(தொடுப்பு)

மங்காத தண்பொருநை மல்குந் திருவுருமா
மலையர்நாட் டினிலெந்த மறுகில் அலைகின்றாளோ(எங்)

(முடிப்பு)

கண்ணால் தயக்கம் காட்டுவாள்-காமன்றனக்கும்
காதல் மயக்கம் ஊட்டுவாள்
பெண்ணார் தமையும் வாட்டும் பேரெழிற் கொண்ட
பெண்ணாள்

பேயன் எனைப்பிரிந்து போன இடந்தெரிந்து - (எங்)

கொத்தார் மலர்க்குழலாளைக் - குறக்குலத்தின்
கொம்பே ரிடையுடையாளை
வித்தாரக் கள்ளிதன்னை வீசும்பே ரொளிமின்னை
வியனா ருலகந்தன்னில் வீதிவீதியாய்ச் சென்று - (எங்)

82. சிங்கன் கூறல் - அறுசீராசிரியம்

மையணியும் மிடற்றானின் மதலையுறை
திருவுருமா மலைவாழ் சிங்கன்
மையல்தருஞ் சிங்கிதனைக் காணாமல்
மனம்வாடி மயங்கி நொந்து
தையலவள் சென்றிருக்குந் தாவதனைக்
கண்டதுண்டோ சாற்றா யென்றே
கையதனிற் கண்ணியுட னருகிருக்குங்
குளுவனிடம் கழறு வானே.

83. இதுவுமது-இசைப்பாட்டு

இராகம்: மாயமாளவகௌளம் தாளம்: ஆதி

(எடுப்பு)

சென்ற இடமறியேன்-குறச்
சிங்கி தனைப் பிரியேன் - (சென்ற)

(தொடுப்பு)

இன்றவளை யெண்ணி ஏங்கியே வாடுகிறேன்
எங்கினியே கண்டு தேடிக் கொண்டிடுவே னின்பம் நாடிச்
(சென்ற)

(முடிப்பு)

கண்டதுண்டோ என்றன் கன்னல் மொழியாளைக்
காதளவு மோடுங் கரிய விழியாளைச்
செண்டு நிகர் ரெண்டு செம்பொன் நகிலாளைத்
தேடிப் புகல்வார் தமக்குக் கோடிப்பணமே கிடைக்கும்(சென்ற)

தீராத நோய்தன்னைத் தீர்க்க மருந்துண்டு
தேடும் அரும்பொருள் சேர வழியுண்டு
சேராத மங்கையைச் சேர்க்க மசியுண்டு
தேன்மொழியைக் காட்டுவார்க்கு நான்மொழிவே னேயவ்
வாக்கு - (சென்ற)

தேவர்களும் விரைந்தே வரும் சீரிடம்
தேனடர் காவணி திருவுரு மாமலை
மேவிடும் வேலவர் மெய்யரு ளால்பெறும்
மேன்மைமிகு வித்தையுந்தான் நான் புகல்வேன்
சத்தியந்தான் - (சென்ற)

### 84. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

தீராத மயல்தந்து திருவுருமா
மலைநாட்டுள் சென்ற பெண்ணை
நேராகக் காட்டிடுவார் தமக்கரிய
பலபொருட்கள் நேர்த லன்றி
சீராக யானறியுஞ் செப்படிவித்
தைபலவுந் தெரியச் செய்வேன்
மாறாதென் வார்த்தையெனுஞ் சிங்கனிட
மேகுளுவன் வழுத்து வானே.

### 35. குளுவன் கூற்று - கண்ணிகள்

கண்ணித னைக்கரங் கொண்டனை புட்களைக்
கண்டனை யாயினு மேனோ
காதலி தன்னைநி னைந்தவை விட்டனை
காரியம் நன்றிது தானோ 1

எண்ணரி தாகுமவ் வேமனை யும்புசித்
தேப்பம தேவிடு வாளை
எண்ணிம யங்கிநீ ஏற்றசெ யல்மறந்
தேநிலை தான்குலைந் தாயே. 2

வண்ணமு டன்திரு வார்குறுக் குத்துறை
வேலவர் நல்லருட் கொண்ட
வல்லமைக் காரியை வெல்பவ ரும்புவி
மீதினி லெங்கணு முண்டோ. 3

திண்ணமு டன்மனம் செய்பணி யொன்றினில்
சென்றிடல் நன்றறி வாயே
சேற்றிலோர் காலுடன் ஆற்றிலோர் காலுமேன்
தேடிடு வோம்வரு வாயே. 4

### 86. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

ஒக்கலுறுங் குழவிதனை யுணராமல்
வீணாக வூரி லெங்கும்
அக்கரையாய்த் தேடியலை யறிவிலர்போல்
சிங்கனுந்தன் அன்ப னோடு

சொக்கடரும் வேலருறை திருவுருமா
மலைநாட்டில் சிங்கி தன்னைப்
பக்கமுறும் வீதியெல்லாம் பாங்குடனே
தேடிவரும் பான்மை கேளீர்.

### 87. சிங்கியைத் தேடல் - இசைப்பாட்டு

இராகம்: அடாணா தாளம்: ஆதி

(எடுப்பு)

தேடிவருகிறாரே - சிங்கிதனை - நாடியலைகிறாரே
(தேடி)

(தொடுப்பு)

ஆடிவரும் மயிலின் ஆறுமுகன் முருகன்
கூடுங் குறுக்குத்துறை யூடுதெருக்களிலே - (தேடி)

(முடிப்பு)

குறுக்குத் துறைவீதி கோலப் புதுவீதி
கோப்படரும் நான்கு கோதில் ரதவீதி
நெருக்கமுடன் நீடு நெல்லைப் பெருவீதி
நேயமுட னெங்குங் கூவித் திரிந்தாடித் (தேடி)

காந்தி மதியம்மன் கண்ணுக் கெதிர்வீதி
காவற் பிறைவீதி மாடத் திருவீதி
சேர்ந்த எதிர்வீதி சாரு மிருவீதி
தேவிபிட்டா காரத் தாயின் அணிவீதி - (தேடி)

தெப்பக்குள வீதி தொண்டர் குறுவீதி
தெருக்கள் நிறைந்தோங்கு சாலியாரின் வீதி
ஒப்பில் திரிகூடம் உய்க்கும் நெடுவீதி
உயர்மா தாங்கோவி லூற்றிடு மைவீதி (தேடி)

தடிவீரன் கோவில் சாரும் பலவீதி
தண்பாட் டப்பத்துள் சகலதெரு தேடி
நெடிதோ டுங்குன்னத் தூரின் பெருவீதி
நேரிலதைச் சேரும் நானா விதவீதி (தேடி)

பேர்மிகுஞ் செண்பகம் பிள்ளை யிருவீதி
பெருமாள் ரதவீதி பேணி மிகத்தேடி
ஓர்பயனுங் காணா துள்ளம் மிகவாடி
ஓய்ந்தும் சலியாமல் ஓடி மறுபடியும் (தேடி)

### 88. சிங்கி எதிர்ப்படல் - அறுசீராசிரியம்

புள்வேட்டை மறந்தேதன் பெண்ணாளின்
அதரமதிற் பெருகிப் பாயுங்
கள்வேட்கை மீதூரக் காமமிகு
சிங்கனுமே குளுவ னோடே
ஒள்வேற்கை முருகபிரா னுறைகுறுக்குத்
துறைநாடி ஓய்ந்து நிற்க
துள்வேற்கண் துடியிடையாள் தோகைநிகர்
சிங்கியெதிர் தோன்றி னாளே.

### 89. சிங்கன் சிங்கியைக்காணல் - இசைப்பாட்டு

இராகம்: பைரவி தாளம்: ஆதி

(எடுப்பு)

எதிர்-கண்டு மனந்தேறித் தான்மகிழ்ந்தான்
வரு - கனவிலும் மறப்பரிய சிங்கியை - எதிர் -(கண்டு)

(முடிப்பு)

வண்டெனுங் கார்விழி கண்டெனுந் தேன்மொழி
செண்டெனும் பேர்நகில் சிங்கிதனையே எதிர்(கண்டு)

காருடலாள் முகில் நேர்குழலாள் நலச்
சீர்நடையாள் மிகப் பேரெழிலாளை எதிர் (கண்டு)

மூச்சினிலே மொழிப் பேச்சினிலே கர
வீச்சினிலே உயர் வானவள்தன்னை எதிர் (கண்டு)

வீதியெல்லாம் அலைந் தேதிரிந்தே குற
மாதினையே உரு மாமலைவீதி தனிற் (கண்டு)

### 90. சிங்கன் வினாவல் - கலிவிருத்தம்

வந்தகுற வஞ்சிதனைக் கண்டகுறச் சிங்கன்
"இந்தவித மென்றனது சிந்தனைந லிந்து
நொந்தலற எந்தவிடஞ் சென்றனைபி ரிந்தே
அந்தமிகு சுந்தரிமொ ழிந்திடுவை" யென்றான்.

### 91. சிங்கன் சிங்கி தர்க்கம் - கண்ணிகள்

இத்தனைக் காலமு மென்றனை விட்டுநீ
எவ்விடஞ் சென்றனை சிங்கி
எத்தனை ஆசைநீ யென்னிடங் கொண்டனை
எங்குநான் செல்லுவேன் சிங்கா. 1

பொங்குவ ளங்குறுக் குத்துறை நாடெலாம்
போயுனைத் தேடினேன் சிங்கி
அங்கெலாந் தேடுவ தேனுன தங்கமுள்
ஆவியும் நானலோ சிங்கா. 2

அங்கம தைவிடுத் தாவிபி ரிந்திடின்
ஆகுமே வாழ்ந்திட சிங்கி
தங்கிடு மோவுயிர் சொப்பனந் தன்னிலென்
றாலுமே வாழ்வரே சிங்கா. 3

சொப்பன மாயினுந் தூரநீ போயதேன்
சொல்லடி காரணம் சிங்கி
செப்புட லாள்திரு மோகினிக் கேகுறி
செப்பிடப் போயினேன் சிங்கா 4

யாரவள் மோகினி எவ்விட முள்ளவள்
என்னம யக்கிது சிங்கி
சூரனைக் கொன்றவர் வாழ்குறுக் குத்துறை
தோகைய வள்தெரி சிங்கா. 5

என்னயான் கேட்கினு மேற்றப தில்தர
எங்குநீ கற்றனை சிங்கி
பன்னிரு கையவர் தண்ணருள் பெற்றிடின்
பஞ்சமோ நீபுகல் சிங்கா. 6

மெத்தப்ப டித்தவ ளாமுனைச் சற்றுமே
வென்றிடக் கூடுமோ சிங்கி

எத்தனை கற்கினும் யாவும றிந்தவர்
இப்புவி யுள்ளரோ சிங்கா. 7

கொத்தடர் பூங்குழற் கோதையே நீபுதுக்
கோலமுங் கொண்டதேன் சிங்கி
இத்தனை நாளுமில் லாதசந் தேகமின்
றென்மிசை கொண்டதேன் சிங்கா. 8

### 92. கவியின் கூற்று - அறுசீராசிரியம்

தேன்பொழியுஞ் சோலையணி திருவுருமா
மலைநாட்டுச் சிங்கி யென்னும்
மான்புதிதா யங்கமெலாம் மாட்டிவந்த
பணிகண்டு மயங்கிச் சிங்கன்
நான்புரியேன் நின்னுடைய நடத்தையெலா
மேதேதோ நானா வாறு
தான்புனைந்தாய் மேனியெங்குஞ் சாருமவை
என்னவெனச் சாற்றென் றானே.

### 93. மீண்டும் தர்க்கம் - கண்ணிகள் - வேறு

சந்தேக மென்னவென்றாய் - அடி குறச்சிங்கி
சாற்றிடுவா யேற்றவிடை
அந்தோநின் சீரடியில் - அடி குறச்சிங்கி
அரவஞ்சேர் மாயமென்னே? 1

சீரடியிற் காண்பதுவும் - அட குறச்சிங்கா
சீறரவம் இல்லையடா என்
பேரறிவைக் கண்டல்லவோ - நெல்லைக் காந்திமதி
பூட்டிவிட்ட சிலம்பறிவாய் 2

செய்தகுற்ற மென்னடிநீ - அடி குறச்சிங்கி
செங்கரத்தில் விலங்கெதற்கோ
மெய்க்குறியைக் கண்டுசிங்கா - திருநாச்சியாரும்
மெச்சியீந்த கொலுசறிவாய் 3

நாரியேஉன் கால்விரலில் - அடி குறச்சிங்கி
நண்டுவந்து ஒட்டியதேன்?
பேரிதற்குப் பீலியென்பார் - அட குறச்சிங்கா
பெண்பெருமா ளொருத்தியிட்டாள் 4

உந்தனெழில் மூக்கினிலே - அடி குறச்சிங்கி
ஒட்டியதேன் மின்மினிதான்?
செந்தமிழ்தேர் பாண்டியனும் - அட குறச்சிங்கா
சீர்கொடுத்த நத்தறிவாய் 5

மாடுகட்டுஞ் சங்கிலியை - அடி குறச்சிங்கி
மாட்டியதாருன்கழுத்தில்?
பீடணியுந் திருவுருமா - மலை மோகினிதான்
பூட்டிவிட்ட சரப்பளிகாண் 6

என்றுமில்லாப் பேரொளிதான் - அடி குறச்சிங்கி
ஏற்பட்டதே னுன்முகத்தில்?
நன்றுபுரி வேலவர்தம் - அட குறச்சிங்கா
நல்லருளுங் கிட்டியதால் 7

வேலவர்தம் பேரருளை - அடிகுறச்சிங்கி
வேணமட்டும் பாடிடுவோம்
சீலமுடன் பாடிடுநீ - அடகுறச்சிங்கா
சேர்ந்துடன்நா னாடிடுவேன். 8

## 94. மங்களம் பாடல் - இசைப்பாட்டு

(எடுப்பு)

சிவபால வேலனுக்குச் செயமங்களம்-வள்ளி
சிறுமாதின் லோலனுக்குச் சுபமங்களம் (சிவ)

(முடிப்பு)

நவவீர நாதனுக்கு நீதனுக்கு மங்களம்
பவரோகம் நீக்கிடுமெய்ப் போதனுக்கு மங்களம்(சிவ)

கங்கையின்கு மாரனுக்கு வீரனுக்கு மங்களம்
செங்கனலின் மேனியற்கு ஞானியற்கு மங்களம்(சிவ)

கார்த்திகைபு தல்வனுக்குச் செல்வனுக்கு மங்களம்
நேத்திரமீ ராறனுக்குத் தீரனுக்கு மங்களம் (சிவ)

ஆறுமுகத் தேவனுக்கு மூவனுக்கு மங்களம்
ஏறுமயில் வாகனுக்கு ஏகனுக்கு மங்களம் (சிவ)

குக்குடம்பி டித்தவர்க்குச் சத்துவர்க்கு மங்களம்
பக்கமுறு பூவையர்க்கும் பாவையர்க்கும் மங்களம்(சிவ)

சூரனைய ழித்தவர்க்கு மெய்த்தவர்க்கு மங்களம்
சீரணிகு றுக்குத்துறை வாசனுக்கு மங்களம் (சிவ)

கற்றவர்க்குங் காதினிக்கக் கேட்டவர்க்கும் மங்களம்
உற்றபொருள் தந்துதவு நற்றவர்க்கு மங்களம்.(சிவ)

**95. கவியின் கூற்று - நேரிசை வெண்பா**

தெய்வந் தனையெங்கோ தேடி யலையாதீர்
மெய்வளஞ் சேருரு மாமலையை - எய்திடின்
பாவப் பிணியறுக்கும் பால குமரனருட்
காவல் பெறுவீர் கனிந்து.

**குறுக்குத்துறைக் குறவஞ்சி முற்றிற்று**

உ

# குறுக்குத்துறைக் கொச்சகக் கலிப்பா

## தி.சு. ஆறுமுகம்

### கணபதி காப்பு

#### நேரிசை வெண்பா

குறுக்குத் துறைமீது கொச்சகக் கலிப்பா
உருக்க முடனெடுத் தோதப் - பெருக்கமுறு
தொந்திய னான துதிக்கை விநாயகன்
முந்திவரு வானெளியன் முன்.

### நூல்

#### நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா

பூதலத்தே யென்னைப் பிறப்பித்த தேனறியேன்
ஓதலற்றே னுன்நாமம் உன்னுகிலே னுன்னுருவம்
காதலற்றே னுன்பாற் கனிந்தடையே னென்றுமனக்
கூதலற்றே வாழ்வேன் குறுக்குத் துறையானே. 1

வாழும் பதமறியேன் வல்வினையா லென்னையிவண்
சூழும் பரிசனர்க்குஞ் சூழேன் நலமெதுவும்
பாழும் பிறவியிதால் பாரில் பயன்காணேன்
கோழும் பரேற்றுங் குறுக்குத் துறையானே. 2

நீதமுடன் போத நெறிநின்று நின்னரிய
பாதமலர் போற்றிப் பணிந்துருகி வாழ்வேனேல்
வேதனெனை யாக்கும் வினையிழப்பான் என்றென்றும்
கோதறுசீர் விஞ்சுங் குறுக்குத் துறையானே. 3

பொன்னை விரும்பேன் புகழ்விரும்பேன் பேதமுடன்
என்னை விரும்பா திடர்சூழ்வார் செய்மாயந்
தன்னை விரும்பேன் தடுத்தருள வேண்டுகின்றேன்
கொன்னை விரும்பேன் குறுக்குத் துறையானே. 4

ஆட்டி யெனைப்படைக்க ஆண்மை படைத்தவன்நீ
போட்டி யுனக்கதனிற் புல்லர் சிலர்முளைத்தார்
காட்டிக் கொடாதே கயவ ரவர்பிறகே
கூட்டி விடாதே குறுக்குத் துறையானே. 5

தப்பவர்பாற் செய்யேன் தனித்தேயான் வாழுகின்றேன்
எப்படியு மின்னல் எனக்கவரோ சூழுகின்றார்
இப்படிநீ ஏனோ எனைவிடுத்தா யன்னவர்பால்
கொப்படரும் மாவார் குறுக்குத் துறையானே. 6

என்னெனக்கு நேர்ந்தாலும் ஏதவத்தை பட்டாலும்
நின்னருளென் றெண்ணியான் நெஞ்சுரங் கொள்வதுடன்
அன்னவையெ லாம்நலத்திற் காமென் றறிந்திடவும்
கொன்னறவும் பாராய் குறுக்குத் துறையானே. 7

ஒதுங்கிநான் வாழ்ந்திடினும் ஓயா தெனைவிரட்டிப்
பதுங்குமா றாக்கிப் பதங்குலைப்ப தல்லாற்சீர்
எதுங்கொளாப் பேயரிடம் ஏனோ விடுத்தனையென்
கொதுங்கொளாய் வேலா குறுக்குத் துறையானே. 8

பாடுமிகக் காட்டிப் பயங்காட்டிப் பின்னரவர்
கோடுமனங் காட்டிக் குணக்கேடு காட்டியுன்றன்
பீடுமறந் தாட்டமிடும் புல்லரிடம் ஏனெனைநீ
கூடுமாறு விட்டாய் குறுக்குத் துறையானே. 9

காலமெல்லா முன்னைக் கரங்குவித்தும் என்னையிந்தச்
சீலமில்லார் பால்விடுத்துச் சீரழிப்ப தாமாமோ
வேலவனே மாந்தர் விரும்புகின்ற வாறுபல
கோலமெல்லாம் காட்டுங் குறுக்குத் துறையானே. 10

பெண்டுபிள்ளை கூட்டிப் பெருமிடியாம் பேய்கூட்டி
மண்டுகிளை கூட்டி மனச்சாட்சி யில்லவர்பால்
தொண்டுசெயக் கூட்டிச் சுகமளித்த என்விதியை
கொண்டுபுகழ் வேனோ குறுக்குத் துறையானே. 11

இன்மொழிகள் பேசும் எழிலார் குழல்சேரும்
பொன்மலரை என்மனத்தேன் போயடையா துன்னடியாம்
நன்மலரை நாடியமர் நற்பணியைச் செய்யுமெனின்
கொன்மயக்க முண்டோ குறுக்குத் துறையானே. 12

குன்றுருவ ஏமன் கொலைவேடன் என்னுயிர்ப்புள்
நன்றுகுறி வைத்துவரும் நாளெண்ணிக் காத்துநின்றான்
என்றவன்கை சேராமல் என்றனைநீ காப்பாயோ
குன்றுருவும் வேலோய் குறுக்குத் துறையானே. 13

வாளென்ன செய்யும் வலிந்தென்பால் வஞ்சமெண்ணும்
ஆளென்ன செய்யும் அலகையென் செய்திடுந்தீ
நாளென்ன செய்யும் நலமார்நின் வேல்தோன்றின்
கோளென்ன செய்யும் குறுக்குத் துறையானே. 14

ஆலமணி கண்டனருள் ஆறுமுகா வஞ்சகரென்
பாலமளி செய்யின் பலியா தெனைக்காக்கும்
வேலயிலாம் வன்னெருப்பில் வந்துபுழு பற்றிடுமோ
கோலமயி லானே குறுக்குத் துறையானே. 15

எல்லாமுன் தண்ணருளென் றெண்ணி யுலாவுகின்றேன்
பொல்லாரென் பாற்புரியும் பொல்லாங்கிற் கஞ்சுவனோ
கல்லான தூணைக் கரையா னரித்திடுமோ
கொல்லா தருள்வோய் குறுக்குத் துறையானே. 16

பல்லார் பகைமலிந்து பாரிலிடர் சூழ்ந்தாலும்
நல்லா யுனைப்பிரியேன் நாயகனே என்மயக்கம்
எல்லாம் அறிந்தவன்நீ என்னுயிரே மன்னுயிரைக்
கொல்லா வரந்தா குறுக்குத் துறையானே. 17

காமநெருப் பாலே கருகி யழிவேனுக்
கேமமெனத் தண்ணா ரினிய அருண்மழையை
நாமவடி வேலா நயந்து பொழியாயோ
கோமளம யூரா குறுக்குத் துறையானே. 18

பெற்றதுணை வித்தை புகட்டுதுணை தாரமென
உற்றதுணை பின்ன ருதித்ததுணை சுற்றமெனும்
மற்றதுணை யாவும் மதியேன் நிலைத்திருக்குங்
கொற்றதுணை நீயே குறுக்குத் துறையானே. 19

குண்டுவிழி யந்தகனின் கோரப் பிடியிலென்னைக்
கொண்டுவிடுத் தாலுங் கொடுங்கலிபாற் றள்ளாதே
கண்டுமொழி மானைக் கலந்தவனே நாயெனையாட்
கொண்டவனே நாதா குறுக்குத் துறையானே. 20

தீராதோ என்மிடியுந் தீர்த்துவைத்தா லாகாதோ
ஊராரோ காசுபண முள்ளவரை யேதுதிப்பர்
யாராரோ வாழுகின்றார் யானொருவன் தான்விலக்கோ
கூறாய்நீ வேலா குறுக்குத் துறையானே. 21

அமரநாட் டாவினிடம் அந்தோமோர் கேட்டவன்போல்
நமதுபாற் பொன்பொருளை நாடினனென் றெள்ளாதே
நிமலனே செல்வமின்றேல் நீணிலத்தில் வாழ்வேது
குமரனே வேலா குறுக்குத் துறையானே. 22

மற்றவரிம் மாநிலத்தே மாண்பொருளை யீட்டிமிகக்
கொற்றமுடன் வாழ்ந்தனரக் கூறெனக்கே காட்டாமல்
சுற்றமெலாந் தூற்றவெனைத் தோற்றுவித்த தேனறியேன்
கொற்றவனே வேலா குறுக்குத் துறையானே. 23

செந்திருவார் பெண்ணெனினுஞ் செப்புமுலை யில்லாளேல்
எந்தவிதம் பெண்ணாவாள் இன்பமவ ளாலுமுண்டோ
நந்தலிலாப் பொன்னிலையேல் நன்னடைக்குப் பீடுளதோ
கொந்தடர்க டம்பா குறுக்குத் துறையானே. 24

நாளமிலாப் பொய்கை நறுமணமில் லாதமலர்
தாளமிலாப் பாட்டு தயவளியி லாவீரம்
ஆளனிலாள் பேரழகோ டாஸ்தியிலான் கூர்மதியும்
கூளமன்றோ வேலா குறுக்குத் துறையானே. 25

உருக்கிடுமன் பேனோ உணர்வேனோ பன்னூலாற்
பெருக்குமறி வேனோ பிறர்புகழும் பண்பேனோ
நெருக்குமிடி தீர்க்கும் நிதிமிகவே யான்குவிக்கக்
குறுக்குவழி காட்டாய் குறுக்குத் துறையானே. 26

கற்பகம ரத்தடியிற் காஞ்சிரங் காய்விரும்பும்
அற்பனிவ னென்றே அறிஞர் எனைப்பழிப்பர்
பொற்புடையன் னார்வறுமைப் பேழ்வாயிற் பட்டிருப்பின்
குற்றமெனைக் கூறார் குறுக்குத் துறையானே. 27

ஆகூ ழொருநூறா யாக்கிவைத்த அக்கணமே
போகூ ழிருநூறாய்ப் பெம்மானே போக்கிவைத்தாய்
மாகூ ழெனக்குறுமோ மாளாக் கடன்சுமந்து
கோகூ ழுடைந்தேன் குறுக்குத் துறையானே. 28

கருமாதி நோயிழவு கல்யாணம் என்றிவைக்கே
பெருவாரி யாய்ப்பொருளும் போய்விடுவ தாயினெனக்
குறுவாழ்வு நன்றுறுமோ உம்பரிடர் தீரரனின்
குருநாதா தேவே குறுக்குத் துறையானே. 29

விஞ்சுமிடி தன்னை விரட்டியரு ளல்லதுன்றன்
கஞ்சமலர்ப் பாதம் கடிதிலெனைச் சேர்த்துவிடு
பஞ்சமென மற்றவர்பாற் பற்காட்டிப் பட்டவெலாங்
கொஞ்சமல வேலா குறுக்குத் துறையானே. 30

ஆவி யடங்கியபின் அங்கிதனக் கிந்தனமாம்
பாவி யுடலமிதைப் பற்றியின்றே ஒற்கமனல்
மேவி யுணுமாறு விடுத்தனையே வேறெவர்பாற்
கூவி யழுவேன் குறுக்குத் துறையானே. 31

வெம்பிடுமென் நெஞ்சமுறு வேதனைதீர்ப் பாயுனையே
நம்பிடுமென் பாற்படர்ந்த நல்குரவை வேரறுப்பாய்
தும்பியருள் கொண்டுவள்ளி தோளணைந்த வேடனுனைக்
கும்பிடுதல் வீணோ குறுக்குத் துறையானே. 32

கழுத்தை முறிக்குங் கடன்சுமந்து கண்டவர்பால்
இழுத்து மொழிபேசி ஏற்கக் கரம்நீட்டும்
எழுத்தைத் திருத்தியமைத் தென்னிடஞ்சேர் நல்குரவைக்
கொளுத்த வருவாய் குறுக்குத் துறையானே. 33

நாய்புரைய வாழவென்னை நானிலத்தேன் நீவிடுத்தாய்
தாய்புரியு மன்பவள்தன் சேய்தனையே பேணாமல்
வாய்பிளந்த பின்னர் வயிற்றிலறைந் தேங்குவதோ
கோய்பிளந்த வேலா குறுக்குத் துறையானே. 34

உள்ளுவதென் என்றே யுணர்வாயென் வேண்டுதலைத்
தள்ளுவையோ அல்லதிவன் தஞ்சமென வந்தவெறும்
வெள்ளைமதி யன்புகலும் வேறறியா னென்றிரங்கிக்
கொள்ளுவையோ தோணேன் குறுக்குத் துறையானே. 35

பூவேறு முன்றனிரு பொற்பதமே யல்லதென்றன்
நாவேறு போற்றி நயந்ததுண்டோ இந்நிலையில்
நீவேறு நெஞ்சமுறின் நேயனுமென் செய்திடுவேன்
கோவேயென் வேலா குறுக்குத் துறையானே. 36

முருகாவென் றோர்கால் மொழிந்திடினு மென்வினைகள்
உருகாவோ என்புலம்ப லுன்செவியு ளேறாதோ
சருகாயு லர்ந்தேன் தரித்திரமாம் வெங்கதிரால்
குருகாருஞ் சோலைக் குறுக்குத் துறையானே. 37

கந்தா முருகா கதிர்வேலா என்றுனையான்
நந்தா விருப்புடனே நாடோறுங் கூவிடினும்
இந்தா வருந்தாதே என்றிரங்கி வந்திலையே
கொந்தார் கடம்பா குறுக்குத் துறையானே. 38

தஞ்சமென வுன்றனிணை தாட்டா மரையடைந்தும்
அஞ்சலென வந்தெனைநீ ஆதரிக்கக் காணேனே
கஞ்சமலர் வேதன் கனமழித்த சேயவனே
கொஞ்சமிரங் காயோ குறுக்குத் துறையானே. 39

பட்டவெலாம் போதும் படமுடியா தின்னுமிடர்
அட்டமத்துக் காரியெனை யாட்டி யலைத்திடுங்கால்
எட்டவிருந் தாலுன் இனியவருள் என்னாம்அக்
கொட்டமடக் காயோ குறுக்குத் துறையானே. 40

வாராத வல்வினைகள் வந்தாலு மோர்நொடியில்
தீராவோ உன்பெயரைச் செப்பி னொருமுறையே
சீராக வாழவெனைச் செப்பனிட லென்றோசொல்
கூராரும் வேலா குறுக்குத் துறையானே. 41

விரும்புகிலே னாயிடினும் வீண்கடனே கொண்டதனால்
எறும்புகளின் வாய்ப்பட் டிழுபடுமோர் மண்புழுவாய்ப்
பெரும்படரே கொண்டேன் பிணைக்குறத்திக் காகவொரு
குறும்பனெனச் சென்ற குறுக்குத் துறையானே. 42

நீருங் குறைய நிலைகுலைந்த தாமரைபோல்
சீருங் குறைந்தேன் திரவியங்கு றைந்ததனால்
யாருங் குறையாய் எனைமதிக்கு மாறிவண்யான்
கூருங் குறைந்தேன் குறுக்குத் துறையானே. 43

கணப்பொழு தேனுங் கலங்காத நெஞ்சமுடன்
பணப்பொரு ளாசை படர்வழியிற் செல்லாமல்
மணப்பொருள் சூழ்குன் மலரடியெண் ணேனோநிர்க்
குணப்பொரு ளானே குறுக்குத் துறையானே. 44

மக்கள் நலம்நாடி மல்குமொருள் தான்நாடிப்
ஒக்கல் துணைநாடி உற்றநண்பர் தாம்நாடிப்
பக்கம் வளருமென் பாழ்வயிற்றுக் கூண்நாடிக்
குக்கலு மானேன் குறுக்குத் துறையானே. 45

ஒன்றினைநி னைப்பேன்மற் றொன்றாகு மென்வாழ்வில்
என்றெனினு மேழையென் எண்ணம்போ லாயதுண்டோ
நன்றெனினுந் தீதெனினும் நாயகனுன் கட்டளையே
குன்றுருவும் வேலோய் குறுக்குத் துறையானே. 46

வேலா யுதனே வியனுலகில் நொந்துழல
ஏலா தினியும் இரக்கமிலை யோவுமையின்
பாலா குமரா படுகிழமாய் வள்ளிமுன்செல்
கோலா கலனே குறுக்குத் துறையானே. 47

பிறந்தநாட் கொண்டுனது பொற்பதமே போற்றுதற்கு
மறந்தநான் நின்னரிய மாணருளைக் கொள்வேனோ
இறந்துபோ மன்றேனும் என்பா லிரங்காயோ
குறந்தம ரானோய் குறுக்குத் துறையானே. 48

ஆட்டிவைத்த வாறடியேன் ஆடா திருப்பனோநீ
நாட்டிவைத்த வாறே நடந்திடுமென் றாலுமிடர்
ஓட்டிவைத்தா லாகாதோ உன்றன் திருவருளைக்
கூட்டிவைத்தா லுய்வேன் குறுக்குத் துறையானே. 49

புத்திவித்தை மாடுமனை பொன்பொருளிவ் வாறெதினுஞ்
சித்தியுற்று மென்னேசொல் சேதமவை யாகாவோ
பத்தியுற்று வாழ்வதுவே பண்பாம் கொடுஞ்சூரைக்
குத்தியபொன் வேலோய் குறுக்குத் துறையானே. 50

கள்ளமனப் பேயேன் கதறித் துடித்துமுன்றன்
உள்ளமிரங் காதோ வுனதருளுங் கிட்டாதோ
வெள்ளமென நாடும் வியனடியார் தம்முளெனைக்
கொள்ளமனங் கொள்வாய் குறுக்குத் துறையானே 51

கிட்டும் வினையறியேன் கேடுவரும் போழ்தறியேன்
பட்டு முணர்வறியேன் பாழ்பணத்தின் பீடறியேன்
எட்டும் படியிருந்தும் ஏனோ வுனையறியேன்
கொட்டுங் கருணைக் குறுக்குத் துறையானே. 52

பொய்யை வளர்த்துப் பொறாமைய வாவளர்த்துக்
குய்யம் வளர்த்துக் கொடுஞ்சினமோ டென்னுடலாம்
மெய்யை வளர்த்தேன் முருகா இவையாவுங்
கொய்ய வரந்தா குறுக்குத் துறையானே. 53

மண்டுமிடி காமம் மயக்கம் மடிசெருக்கும்
உண்டுறங்கு மென்னை ஒழித்திடுமே நீவருமம்
கொண்டுருத்த லேனோ கொசுதனைய் ழிக்கஅணுக்
குண்டுமெறி வாரோ குறுக்குத் துறையானே. 54

பாருக்குள் யான்படும் பாடுதனைப் பார்த்திருந்தும்
யாருக்கோ வந்தவிருந் தென்றிருப்ப தேனோநீ
பேருக்கோர் நன்றெனினும் பேதையெனக் கீந்திலையே
கூருக்கோர் வேலோய் குறுக்குத் துறையானே. 55

தொழுதேனுன் முன்னர்த் துடித்தே னிரங்கிலைநீ
பழுதால் வரும்படரும் பார்த்தழுதால் நீங்கிடுமோ
அழுதாலும் பிள்ளை அவள்தான் பெறவேண்டும்
கொழுகொம்பு நீயே குறுக்குத் துறையானே. 56

திருவினைக் காணேன் தினந்துயரே கொண்டுழன்றேன்
வருவினைகள் வந்தால் மடியேந்த வேண்டாமோ
ஒருவினையுந் தப்பிடுமோ உத்தமனே சங்கரர்க்குக்
குருவெனவு யர்ந்த குறுக்குத் துறையானே. 57

நெல்வா லளவும் நிதிசேர்க்க மாட்டாமல்
வல்வாய் வறுமை வயப்பட் டுழல்வேற்கும்
இல்வாழ் வெதற்கோ இரும்பொருளைத் தாவலது
கொல்வா யெனையே குறுக்குத் துறையானே. 58

ஏயும் வினையால்யா னிவ்வுலகில் வந்துழன்றும்
போயும் பிறந்தும் பெருவாழ்வு வாழ்வதினால்
தாயும் எமனுஞ் சலித்தார்நீ யோசலியாய்
கோயும் பிளந்த குறுக்குத் துறையானே. 59

தின்றுகொழுத் தேன்யான் திரைப்படம் பார்த்தழிந்தேன்
ஒன்றுமிவை யல்லால் ஒருநற் பணிபுரியேன்
நின்றுனது பாதம் நினைந்தறியேன் பாழ்விருப்பைக்
கொன்றுவிடு வாய்நீ குறுக்குத் துறையானே. 60

புலனைந்தும் மீறித்தம் போக்கினிலே சென்றிழுக்கப்
பலநைந்த பாழ்வழியிற் பாவிமனஞ் சென்றோடி
நலனின்றிக் கெட்டலையின் நாயடிய னுய்வேனோ
குலனொன்று தேவே குறுக்குத் துறையானே. 61

தேடிவைத்த ஒண்பொருளாய்த் தெள்ளமுதாய் நீயிருக்க
நாடிமெத்த நானலைந்தேன் நாசமுறும் பொன்பொருளை
பாடியத்த னுன்புகழைப் பாதமலர் பற்றிநின்று
கூடிநித்தம் வாழ்வேன் குறுக்குத் துறையானே. 62

அத்தனுனை நாடி அழிபொருளை யேவிரும்பின்
பித்தனிவ னென்றெனையே பேசாரோ மெய்யறிவர்
சித்தமதி லென்புன்மை தேர்ந்தேன் தெளிவடைந்தேன்
கொத்தடர்க டம்பா குறுக்குத் துறையானே. 63

துடியே ரிடையார் சுகம்நாடிப் பொன்நாடிப்
படிமே லலைந்து பதங்குலைந்த தின்றுணர்ந்தேன்
அடியே னினியுன் னடிமலர்கள் விட்டகலேன்
கொடியே னெனையாள் குறுக்குத் துறையானே. 64

பொழிகின்ற துன்பப் பெருங்கடல்விட் டேற்றியெனை
இழிகின்ற நற்புணையுன் னீரடிக ளென்றுணர்ந்தேன்
அழிகின்ற நெஞ்சத் தடியவர்பால் நற்கருணை
கொழிகுன்ற வாநற் குறுக்குத் துறையானே. 65

பாவையர் தாம்விரிக்கும் பாசவலை யாற்பெருகும்
நோவைய கற்றிடவுன் நேசவலை யுட்புகுந்தேன்
மாவைய றுத்து மயிற்சேவ லாக்கியணை
கோவைய றிந்தேன் குறுக்குத் துறையானே. 66

நெக்குருக நின்று நினைப்பணிந்துன் பாதநிழல்
புக்குமகிழ்ந் தாடியபின் பொன்னொடுபெண் ணாசையினால்
சிக்குவனோ பந்தமதில் சேரவெனைத் தள்ளுவையோ
கொக்குபடுத் தோனே குறுக்குத் துறையானே. 67

அப்பாவென் னாரமுதே ஆறுமுகச் செஞ்சுடரே
இப்பாரில் யானுழல எண்ணுவனோ நீகருணை
தப்பாதென் மேற்காட்டித் தாராயுன் னீழலுடற்
குப்பாயம் வேண்டேன் குறுக்குத் துறையானே. 68

இந்திரிய மைந்து மெனதுவச மாகாமல்
குந்தகமே செய்த கொடுவினையாற் பூவுலகப்
பந்தமதே கொண்டேன் பறித்தருளப் பாழ்வினையை
கொந்தலர்க டம்பா குறுக்குத் துறையானே. 69

சோதிமுரு காவுனது துய்யஅடி யார்காட்டும்
நீதிநெறி நின்றொழுகி நின்நாமச் சீர்பாடி
மேதினியி லுன்தொண்டு மேன்மையுடன் செய்யவருள்
கோதிலமு தானே குறுக்குத் துறையானே. 70

நாடுமெனக் குற்றபெரும் நற்றுணைநீ தானெனவே
ஈடுமில னாக இறுமாந் திருப்பனிவண்
தேடுமடி யார்தம் திருக்கொழித்தன் னாருளத்தே
கூடுமிறை யோனே குறுக்குத் துறையானே. 71

வேண்டேன் புகழே விரும்புகிலேன் மண்ணொடுபெண்
வேண்டேன் பொருளே விரும்புகிலேன் சூழ்தமரும்
ஆண்டே யுணைமறவா ஆசையுளேன் என்ஆவிக்
கூண்டே யொழிப்பாய் குறுக்குத் துறையானே. 72

வேண்டுவதும் நீயறிவாய் வேண்டுவஎல் லாந்தருவாய்
வேண்டுவதெ னக்கென்றே வேறுளதோ வுண்டுமெனின்
ஈண்டுவறி யேனெனையாள் ஏந்தால் எனதுயிர்ப்புள்
கூண்டுவர லோய்ப்பாய் குறுக்குத் துறையானே. 73

நாயினேன் என்பால்நீ நல்கிய பேரருளைப்
பேயினேன் எவ்வாறு பேசுவேன் பேச்சறுத்தேன்
வேயினேர் தோளிமண வாளா உவகையினாற்
கூயினேன் கோவே குறுக்குத் துறையானே. 74

தங்கமதால் நற்பயனத் தங்கமடைந் தார்க்குளதாம்
அங்கவரால் நன்மை அதற்குண்டோ? பேயனுக்கும்
புங்கவனே நின்னால் பெரும்பயனாம் நிற்குண்டோ?
கொங்கலர்க டம்பா குறுக்குத் துறையானே. 75

பிறவா திருக்கவரம் பெற்றேன் பிறந்தாலும்
இறவா திருக்கவழி யானறிவே னஃதுனடி
மறவா திருப்பதுவே மான்மகள்பால் மாலடர்ந்த
குறவா திருவார் குறுக்குத் துறையானே 76

ஒளிவளரு முன்வதனம் ஓராறும் தொண்டரிடம்
அளிபொழியுஞ் செவ்விழிகள் ஆறிரண்டு மஞ்சேலென்
றிளிவகற்றும் நீள்கரங்கள் ஈராறும் போதடியும்
குளிசமெனக் காமே குறுக்குத் துறையானே. 77

நீத்துகந்தார் சாற்றும் நெறிநில்லேன் இல்லையென்பார்க்
கீத்துகநதே னில்லை எனையும் மனமிரங்கிக்
காத்துகந்தாய் உன்றன் கருணைதனை யென்சொல்வேன்
கூத்துகந்தான் பிள்ளாய் குறுக்குத் துறையானே. 78

பற்றதிக மோடு பரவுமென் நெஞ்சமுனை
"நற்றவனே ஞானமிலா நான்முகனைச் சென்னிகுட்டிச்
சென்றவனே எங்குஞ் செறிந்தவனே யாவருக்கும்
கொற்றவனே" என்று குறுக்குத் துறையானே. 79

நிலையாப் பிறவி நெடுங்கடலுள் தள்ளுண்டிங்
கலையா திருக்க அருள்புரிவா யஃதுனக்கோர்
மலையா முருகா வடிவேற் கரத்திறைவா
குலையா வளமார் குறுக்குத் துறையானே. 80

அடலிழந்தேன் வீணாய் அலைந்தலைந்து பாரினிலென்
உடலகத்தே நீயிருக்கும் உண்மை யுணராமல்
கடலணிசெய் செந்திலவா காவாய் பருவரையின்
குடலடுத்த வேலோய் குறுக்குத் துறையானே. 81

தீதுகளை யாயெனினுஞ் சீறிவிழு வாயெனினும்
நீதுகளென் றென்னை நினைந்தொதுங்கிப் போயினுமுன்
போதுகளை விட்டே புறம்போகே னென்றென்றுங்
கோதுக ளற்ற குறுக்குத் துறையானே. 82

பிறப்பாய நோய்தீர் பெருமருந்தே தொண்டருக்குத்
திறப்பாய வீடே தெரிவரிய மெய்ப்பொருளே
சிறப்பாய வேதத் தெளிவே உனைப்பிரியேன்
குறப்பாவைக் கேள்வா குறுக்குத் துறையானே 83

தொண்டரெம் வாழ்வு துலங்கிடப்பொன் வாரியிட்டோ
பெண்டார் தமக்குப் பெரும்பணிகள் செய்தளித்தோ
பண்டார மாயினைநீ பண்ணவருந் தாட்பணிந்து
கொண்டாடுந் தேவே குறுக்குத் துறையானே. 84

அடியார்க் கரும்பே றளித்தருளு மாண்டியப்பா
நெடிதார் பிறப்பிறப்பு நேரா இளஞ்சேயே
குடிசேர் குலபேதங் கொள்ளாக் குறவனேமா
கொடியேற் கருள்வாய் குறுக்குத் துறையானே. 85

விட்டாவி செல்வதுவும் வெற்றுடலைச் சூழ்ந்தழுது
கொட்டார்ப்பக் கொண்டு கொளுத்துவதுங் கண்டிருந்தும்
மட்டார்ந்த இன்பமிந்த மாநிலவாழ் வென்றிருந்தேன்
கொட்டார்ந்த பூவார் குறுக்குத் துறையானே. 86

முப்பொழுதும் உண்டு முடம்போல் படுத்துறங்கித்
துப்புநிகர் செவ்விதழார்ச் சேர்ந்துமயற் கண்ணியிற்பட்
டெப்பொழுதும் பிறந்திறந்தா லென்றுனையான் வந்தடைவேன்
கொப்படரும் மாவார் குறுக்குத் துறையானே. 87

இடும்புடையேன் வம்புரைக்கும் ஈனமுளேன் காமுகனாய்
நெடும்பனைபோல் நின்றழிந்தேன் நிர்மூட னாய்ப்பிறர்பால்
கடும்பதமே கூறிடுமிக் காதகன்யா னுய்வேனோ
கொடும்பவமே செய்தேன் குறுக்குத் துறையானே. 88

போற்றி வணங்கிடும்யான் பொல்லாதா னாயிடினும்
ஏற்று நினதருளை யீவாய் எனதுதவம்
ஆற்றிற் கரைத்தபுளி ஆகாமல் ஆதரிப்பின்
கூற்றிற் கயரேன் குறுக்குத் துறையானே. 89

உண்டெனவே போற்றுபவர்க் குள்ளவனா யில்லையெனும்
வண்டருக்கோ இல்லானாய் வாய்த்த சராசரமாய்த்
தொண்டருக்கோ எட்டுந் தொலைவினனாய் நின்றொளிர்சீர்
கொண்டவனே கோதிற் குறுக்குத் துறையானே. 90

பலிகழுகு நாய்நரிகள் பைசாச மென்னுமிவை
கலித்தெழுந்து சுற்றுமிந்தக் காயம் சதமாமோ
ஒலிகடல்சூழ் பாரில் உனையே சரணடைந்தேன்
குலிசனிடர் தீர்த்தோய் குறுக்குத் துறையானே. 91

காடுமலைப் பள்ளம் கடற்கரை சொந்தமிலா
வீடுபுறத் திண்ணை வெளியிடம்மற் றெவ்விடமென்
கூடுவிழு மோநீ குதித்தன்று வந்தாள்வாய்
கோடுபடர் மாவார் குறுக்குத் துறையானே. 92

தொழுதறியே னின்றுவரை துள்ளுமயி லோனுனையே
பழுததிகஞ் செய்தேனுன் பன்னரிய பீடறியேன்
கழுதையறி தற்கொணுமோ கந்தப் பொடிமணமே
கொழுதருவார் காசூழ் குறுக்குத் துறையானே. 93

வேதாந்த னேயென் வெருள்மனத்தே நின்றொளிரும்
போதாந்த னேயிப் புவிமயக்கி யுள்ளடக்குங்
கீதாந்த னேயிக் கெடுமதியேன் பாற்படருங்
கோதாந்த மாக்குங் குறுக்குத் துறையானே. 94

பூமாலை நாலுகின்ற பொற்புயமுந் தொண்டரணி
பாமாலை யார்த்திடுமுன் பாதமிரண் டல்லதென்றன்
நாமாலைக் கொண்டுபிறர் நாமந் துதித்திடுமோ
கோமானே கந்தா குறுக்குத் துறையானே. 95

தென்றலுடன் சாந்தம் திசையனைத்து மோச்சுமணம்
ஒன்றரிய தென்மலையி னோங்கியெழுந் தோடிவரும்
பொன்றலிலா நீர்சேர் பொருநைக் கரையுமேவுங்
குன்றவநிற் சார்ந்தேன் குறுக்குத் துறையானே 96

கார்த்திகைநற் பெண்டிர் கரமலரார் தேனேவிண்
பார்த்திபனின் வஞ்சி படர்ந்தணையும் வேற்கொம்பே
ஆர்த்திடுமெய்த் தொண்ட ரணிதனிலே நாயெனையும்
கோர்த்திடுவாய் நாதா குறுக்குத் துறையானே. 97

அரவணியன் பிள்ளாய்வே ளாறுமுகா காங்கேயா
சரவணப வாகடம்பா சாமியெனும் வேல்முருகா
கரவடரும் நெஞ்சனெனைக் கைவிடுதல் நீதியன்று
குரவனெனுந் தூயா குறுக்குத் துறையானே. 98

திருவுரு மாமலையாம் சீர்குமரக் கோட்டமிதில்
உருவெடுத்துச் செந்தி லுறைபவனே நின்னடைந்தார்
கருவடைத லுண்டாமோ கண்ணுதலான் போற்றியசற்
குருவெனுமெய்த் தேவே குறுக்குத் துறையானே. 99

பலகலைநூற் கல்லான் பதமறியான் ஆயினுமிச்
சிலகவிகள் சொன்னான் சிவதாசன் ஆறுமுகன்
உலகனைத்தும் பாடி யுனதருள்பெற் றுய்யவென்றே
குலவுபதம் போற்றி குறுக்குத் துறையானே. 100

குறுக்குத்துறைக் கொச்சகக் கலிப்பா முற்றிற்று

# நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி வித்துவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **இணைப் பதிப்பாசிரியர்:** கலாநிதி நா. சுப்பிரமணியன் முதல்நிலை, மூத்தவிரிவுரையாளர், தமிழ்த் துறை, யாழ்ப்பாணப் பல் கலைக் கழகம், யாழ்ப்பாணம்; **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** மயிலங் கூடலூர் பி. நடராசன், யாழ்ப்பாணம்; க. முத்துக் குமார சுவாமி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பெங்களூர்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; எம்மெஸ். சுந்தரேச ஐயர், திண்டிவனம்; ரெ. ராமசாமி, அலோஸ்டார், மலேஷியா; ஐ. குலவீரசிங்கம், கோலாலம் பூர், மலேஷியா; மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்; திருப்பழனஅடிகள், (பழனிசாமி படையாச்சி), ரோஸ் ஹில், மொரிசியசு; வித்துவான். வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர், வேலம் பாளையம்; ஐ. தி. சம்பந்தன், இலண்டன்; கவிஞர். ந. கந்தசாமி, மல்ல சமுத்திரம்; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா; மு. சு. சங்கர், திருநெல்வேலி; முனைவர் பொ. பூலோகசிங்கம், கொழும்பு; திருமதி சந்தனா நல்லலிங்கம், கொழும்பு; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பா சமுத்திரம்; டாக்டர் பழனிச்சாமிக் கவுண்டர், பிஜித் தீவு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க சங்கம், நந்தி பிஜித்தீவு; கவிஞர் கலைவாணன், திருவானைக்கா; ஈ. வி. சிங்கன், சிங்கப்பூர்; வே. பேரம்பலம், மிச்சிகன், அமெரிக்கா; வி. எஸ். குமாரசாமி, இசுக்கார்பரோ, கனடா; ந. ஐயராமன், மேலமாம்பலம், சென்னை; **நூலாக்கம், அகராதி, மெய்ப்பு, மேற் பார்வை:** புலவர். வெற்றியழகன், நங்கநல்லூர், சென்னை; கௌசல்யா சுப்பிரமணியன், மயிலாப்பூர், சென்னை; த. பஞ்சநாதன், பெசண்ட்நகர், சென்னை; அம்பை ச. பரமசிவம், மாம்பலம், சென்னை; **ஒளிஅச்சுக் கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, க. சாந்தி, கோ. பார்த்த சாரதி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், நா. உஷா, ச. செந்தில்குமார், சி. சண்முகம், சென்னை; **பக்கமாக்கல்:** ஓவியர்கள் அ. சந்திரஹாசன், ஜெ. பூவரசு, லோ. பாலமுருகன்; **வண்ண ஓவியங்கள்:** இரா. சிவக்கொழுந்து, வண்ணாரப்பேட்டை, சென்னை; **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை; **அச்சிடல், கட்டு வேலை:** ஸ்ரீபாலாஜி கிளாசிக்ஸ், பாதர் தோட்டம், சென்னை; **தங்க அச்சு:** விநாயகா டைஸ்டாம்பு ராயப் பேட்டை சென்னை; கிருஷ்ணன் கட்டாளரகம், வன்னியதேனாம்பேட்டை; செந்தில் கட்டாளரகம், திருவல்லிக்கேணி, சென்னை; **அலுவலக உதவி:** செ. ரா. ஷோபனா, ச. பரமசிவம், கி. சரவணன், ச. முருகவேள், சென்னை; **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை; **பொதுத் தொடர்பு, இணைப்பு, மேற்பார்வை:** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.